# புது

## டீலக்ஸ் சீலிங் விசிறி

ORIENT de-luxe

- எழிற் தோற்றமும், புது மோஸ்தரான மழுமழுப்பான உருவமும் கொண்டது.
- முற்றிலும் வார்ப்பினாலானது. இலேசானது.
- நவீன உற்பத்தி உத்திமுறைகளின்படி செய்யப்பட்டதால், தரத்தில் அபி விருத்தியுடன் தொந்திரவற்ற இயக்கமும் கொண்டது
- சுலபமாகக் கழற்றவும் இணைக்கவும் கூடியது.

# புது

## முறையிலமைந்த ரெகுலேட்டர்




- நவீன மோஸ்தரில் செய்யப்பட்டது.
- மின் கம்பிகளை மூட மிகவும் ஏற்வையானது.
- இருபுறமும் திருப்பக்கூடிய புது முறையிலமைந்த ரோடரி ஸ்விச் கொண்டது.
- இயங்கும்போது சூடேறுமலிருக்க சோக் காயில் யூனிட் கொண்டது.

**ஓரியண்ட் விசிறிகள்**

இரண்டு வருட உத்திரவாதம் கொண்டது

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்., கல்கத்தா-54

நீங்கள் ஓர் இல்லத்தரசியோ—
நாகரிக கல்லூரி வனிதையோ
உங்கள் எழில்மிக்க
சருமத்தை, மிருதுவாகவும்,
புத்துணர்ச்சியுடனும்,
பாதுகாப்பது சந்திரிகா
ஆயுர்வேதிக் டாய்லெட்
சோப் ஒன்றேதான்.




aries

# சந்திரிகா

## ஆயுர்வேதிக் டாய்லெட் சோப்

சந்திரிகா பிராடக்ட்ஸ் கோயம்புத்தூர்-2, சென்னை-10.

# பட்ட இடத்தில்...பஞ்சினால் துடைத்திட்டால்...



# அதுவே டெட்டால் அரவணைப்பு

## ...இட்டால் இதமளிப்பு

வெட்டுப் பட்டால்...பட்ட இடத்தில் டெட்டால்...இட்டால் அதுவே பரிபூரண ஆன்ட்டிஸெப்டிக் பாதுகாப்பு. துப்புரவாக்கும், காயத்தைக் கிருமிகள் அணுகாமல் காக்கும், சட்டென ஆற்றும் டெட்டால். பட்ட காயம் எதனையும் கட்டாயம் ஆற்றுவது...... டாக்டர்கள் நம்பும் டெட்டால்.
ஃப்ளூவா? ஃப்ளூ கிருமிகளினின்று உங்களைக் காப்பது டெட்டால். வேர்க்குருவா? இதமளிப்பது டெட்டால். டெட்டால் உபயோகிக்க வேறு ஏதேனும் புதிய வழி ....? தெரிந்தால் எழுதுங்கள் நடை முறைக்கேற்ற, புதுமையான யோசனையாக இருந்தால் ரூ.10 அனுப்புவோம்! எழுத வேண்டிய முகவரி:
G. P. O. பாக்ஸ் 909, கல்கத்தா-1.







டாக்டர்கள் நம்பி உபயோகிப்பது




பஜாஜ்
மயூர்
சீலிங் மின்விசிறிகள்




## நவீனக்கோவ வனப்பு— நவ்விழைவான உழைப்பு

வெப்ப நிலைகளுக்கு ஏற்ற பொருத்தமும், விரிவான பரப்பளவுக்கு சுகமான தென்றலை அள்ளி வீசும் ஆற்றலும் அமைவுமாக தனிப்பட உருவாக்கப்பட்ட உத்தர மின் விசிறி. சிற்றடக்கமானது, முழுதும் மூடப்பட்ட கெபாசிட்டர் மோட்டார், ஐந்து வேக நிலைகளைப் பொருத்தக் கூடிய, ஒலைமியிக் எதிர்ப்பு ஏக ரெகுலேட்டர்.

பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்
45,47, வீர் நரிமன் ரோடு, பம்பாய்-1.
இந்தியாவெங்கும் கிளைகள்.

heros'-SE 69 TAM

# கடுங்கோடையின் சோர்வை நீக்கி புத்துணர்வு அளிக்கும் **கிஸான்** ஸ்குவாஷ்

## அன்றே பறித்த பழத்தின் சாறு தரும் சத்தெல்லாம் உள்ளது **கிஸான்** ஸ்குவாஷ்

கடும்கோடையின் குழந்தைகள் சோர்வையும், களைப்பையும், விருந்தினர் அலுப்பையும் தவிர்க்க உடனே ஒரு கிளாஸ் சத்துமிகு கிஸான் ஸ்குவாஷ் கனிரசம் அளித்திடுங்கள். அவர்கள் முகம் எப்படி மலருகிறது எனக் கண்டு களியுங்கள். ஒரு பாட்டிலில் 16 கிளாஸ் தயாரிக்கலாம்!

உங்களுக்கும் சிறந்தது அது. நோய் எதிர்ப்பு சக்திக்கு தேவையான வைட்டமின் C சத்து இயல்பாகவே இருப்பது கிஸான் ஸ்குவாஷ். நல்ல கனிகளும் தூய கரும்புச்சர்க்கரையும் சேர்ந்து தயாராகும் கிஸான் ஸ்குவாஷ் கிடைப்பவற்றில் மிகச் சிறந்தவை. இந்தியாவில் அவைகள் ஏராளமாக விற்பனையாவதில் வியப்பில்லை

தேர்ந்தெடுக்க அருமையான சுவையில் 5 வகைகள்: ஆரஞ்சு, லெமன், மாங்கோ, லெமன்பார்லி, லைம்ஜூஸ் கார்டியல்.

**கிஸான் பிராடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்-16**




**கிஸான்** *தோட்டக்கனியின் [illegible]*

# கல்கி

விரோதிகிருது, சித்திரை 12 — ஏப்ரல் 25, 1971

பொருளடக்கம்





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம்: | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |

# மர்பி டிரான்ஸிஸ்டர்கள்

## கொஞ்சும் எழிலோடு சக்தியும் இணைந்தவை



தேர்ந்தெடுக்க பல ரகங்கள் உண்டு. ஒவ்வொன்றும் கண்ணைக் கவரும், செவிக்கு விருந்தாய் அமைந்துள்ளன
ஒவ்வொரு மர்பியும் தெளிவான சக்தி வாய்ந்த உன்னத ஒலிபரப்பிற்கு "மாக்னி-ட்யூன்" செய்யப்பட்டுள்ளது.



—மூஸிஷியன்—
25 மீட்டர் பாண்ட்ஸ்ப்ரெட் கொண்ட மத்திய அலை வரிசை ரூ. 125*



ம்யூஸிக் மாஸ்டர்
2 பாண்டு ரூ. 160*



—மினி மாஸ்டர்—
2 பாண்டு ரூ. 310*



மினி பாப் [illegible]
2 பாண்டு ரூ. 175*



மஸ்தாரு
3 பாண்டு ரூ. 345*



[illegible]—முஸாபிர்
4 பாண்டு 'டீலக்ஸ்' ரூ. 328

*விலைகள் எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டவை. உள்ளூர் இதரவரிகளும் தனி.



**மர்பி இல்லத்தை மகிழ்விக்கிறது!**

NAS-C-45 G



மலர் 30



இதழ் 39

# சுதந்திரக் கட்சியின் பணி

புதுதில்லி ஆட்சியினரை எதிர்த்து ஒரு வலுவான ஜனநாயக முன்னணியை உண்டாக்குவதற்குச் சுதந்திரக் கட்சித் தலைவர் ஸ்ரீ எம். ஆர். மஸானி மிகவும் பாடுபட்டார். ஆனால் அது பலிதமாக வில்லை. இந்தத் துரதிர்ஷ்டக் கதையைப் பற்றி ஸ்ரீ மஸானி தயாரித்துள்ள அறிக்கை பம்பாயில் சுதந்திரக் கட்சிப் பொதுக் குழுக் கூட்டத்தின் முன் வைக்கப்பட்டது. இந்த இதழ் அச்சாகி வெளிவருவதற்கு முன்னரே சுதந்திரக் கட்சிக் கூட்டம் முடிவுற்று, அதன் தீர்மானங்கள் வெளியாகும்.

நல்ல காரியத்துக்காக முயற்சி எடுத்து, அது தோற்றுப் போனாலும், அதை அவமானமாக எண்ண வேண்டிய தில்லை. நல்ல காரியத்துக்காக முயற்சி செய்வது நமது கடமை. அது தோல்வி யுற்றால் அது நம் பிழையல்ல. தேசத்தில் யதேச்சாதிகாரத்தை எதிர்த்து ஜன நாயகக் கட்சிகள் ஒன்றுபட்டு வெற்றி பெறவேண்டும் என்ற நல்ல நோக்கத் துக்காகப் பெரிய முயற்சி எடுத்தோம். அது பலனளிக்காதது நமது குற்றமல்ல.

சுதந்திரக் கட்சி செய்ய வேண்டிய பணியில் அது இனியும் தொடர்ந்து ஈடுபட வேண்டியதுதான். அப்பணியைப் பின்வருமாறு சுருங்கக் கூறலாம்: முத லாவதாக, தேசத்தின் உச்சஸ்தானத்தில் யதேச்சாதிகாரம் ஏற்படாதிருக்கப் போராட வேண்டும். ஜனநாயக சுதந் திர உரிமைகளை அளிக்கும் அரசியல் சாஸனம் சிதைக்கப்படாமல் அதைப் பாதுகாக்க வேண்டும். இரண்டாவதாக, மக்களுக்குப் பொருளாதார உண்மை களை உணர்த்த வேண்டும். உற்பத்தி உயர்வினால்தான் நாட்டின் செல்வம் பெருகும். சுதந்திரமான தனியாரின் போட்டியில்தான் இவ்விதம் உற்பத்தி பெருக இடம் உண்டு. உற்பத்தித் தொழில்கள் பெருகினால்தான் ஏழை களுக்குக் கைகொடுக்கமுடியும். தனியார் தொழிலுக்கு ஊக்கம் தந்தாலே மக்க ளின் வேலை வாய்ப்புப் பெருகும். இந்த உண்மைகளை மக்கள் அறியவில்லை. அவர் களின் அறியாமையைப் போக்கி விஷயங் களைத் தெளிவுபடுத்துவது சுதந்திரக் கட்சியின் பணி. யோக்கியதாம்சங்களைப் பாராமல் அதிகார ஸ்தானத்தைப் பெற்று விட்டவர்களையே ஆதரிக்கும் மனப் போக்கு படிக்காதவர்களிடம் காணப்படுவது போலவே படித்தவர் களிடமும் காணப்படுகிறது. இவர்க ளுக்கு அறிவுத்தெளிவு உண்டாக்குவதும் சுதந்திரக் கட்சியின் பணியாகும்.

சுதந்திரக் கட்சி ஏற்றுள்ள இவ்விரு பணிகளும் கடினமானவை. கடினமாயி னும் நாம் இப்பணிகளைச் செய்ய உறுதி பூண்டிருக்கிறோம்; தளர்ச்சி யடையா மல் நம் முயற்சியைத் தொடர்வோம்.

ஆள்கிற கட்சியின் தீவிரத் திட்டங் களுக்குத்தான் வெகுஜன ஆதரவு இருப் பதாக நினைத்து ''எங்கள் கொள்கையும் இதே சோஷலிஸம்தான்'' என்று மற்றக் கட்சிகள் கூறுகின்றன. இப்படிச் சொன் னால்தான் தாமும் ஆளும் வாய்ப்பைப் பெற முடியும் என்று நினைக்கிறார்கள். இவ்வாறு 'ஆள்கிற கட்சிக்கு அநுசரணை யானதே எங்கள் கொள்கை' என்று சுதந் திரக் கட்சியும் சொல்லுவது தவறாகும். அது பயனற்ற காரியம். மற்றக் கட்சிகள் எவ்வாறாயினும் செய்யட்டும். நமக்கு இந்தப் பயனற்ற ஆசையும் முறை யும் வேண்டாம். சத்தியத்துக்கே தன்னை அர்ப்பணம் செய்து கொண்டு, மக்களுக்கு நல்லறிவு போதிக்கும் பணியை மேற்கொண்ட சுதந்திரக் கட்சி இவ்விஷயத்தில் மற்றக் கட்சிகளின் வழி யைப் பின்பற்றுவதற்கில்லை. ஆள்கிற கட்சிக் கொள்கைகளுக்கு ஒத்துப் பாடி னால்தான் பிழைக்க முடியும் என்கிற நிலை ஏற்பட்டால், அப்போது கட்சி யையே கலைத்து விடுவதுதான் சிலாக்கி யம். யதேச்சாதிகார ஆட்சியின் கொடு மையை அநுபவித்து மக்கள் தாமே அறிவு பெறட்டும்என்று விட்டுவிடலாம். கஷ்ட நஷ்டங்களை அநுபவித்து ஒரு நாடு படிப்பினை பெற முடியும் என்பது வாஸ் தவம். ஆனால் நம் தேசம் இவ்விதக் கஷ்டத்துக்கு ஆளாகாமல் அறிவு ஊட்டு வதே சுதந்திரக் கட்சியின் பணி.

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)

# ராஜாஜியின் கருத்துக்கள்

இன்று சர்வதேச அமைப்பு உருவாகியுள்ள நிலையில், பாகிஸ்தான் போராட்டத்தில் தலையிட்டு அமைதிகரமான உடன்படிக்கை காண்பதில் மாஸ்கோவுக்கு உள்ள பொறுப்பிலிருந்து அது விடுபட முடியாது. ருஷியாவுக்கு உள்ள அதிகார சக்தி காரணமாகவே அது இப்பொறுப்பைப் பெற்றிருக்கிறது. அதிருஷ்ட வசமாக ருஷிய சர்க்கார் வெளிநாட்டு விவகாரங்களில் ஈடுபடலாகாது என்று அந்நாட்டுப் பொது மக்கள் சர்க்காரை நிர்ப்பந்திக்கவில்லை. இவ் விஷயத்தில் அமெரிக்காவும், பிரிட்டனும் ருஷியாவுக்கு உதவி அளித்தால் அந்த அளவுக்கு நல்லதே. ஆயினும் மேல் நாட்டு வல்லரசுகள் என்ன தீர்மானம் பண்ணுகிறார்கள் என்று ருஷியா காத்திருப்பதற்கில்லை. ருஷியா காலம் தாழ்த்தும் ஒவ்வொரு தினமும் சீனத்துக்கு அநுகூலம் வளரும் தினமாகும். பங்களா தேஷ் இயக்கத்தை ஒடுக்க மேற்குப் பாகிஸ்தானுக்கு உதவி புரிந்தும், அதே சமயத்தில் பங்களா தேஷ் மக்கள் நடத்தும் கிளர்ச்சியை ஊக்குவித்தும் சீனம் விஷமம் புரிவதாகத் தோன்றுகிறது. இச் சமயத்தில் மேலும் கால விரயம் ஆக இடம் தருவது ஆபத்தாகும்.

சுதந்திர பங்களா தேஷை அங்கீகரிக்கும் விஷயத்தில் ஸ்ரீமதி இந்திரா காந்தி மிகவும் ஜாக்கிரதையாக இருப்பது போற்றுதலுக்கு உரியது.

★

சென்னை ஐலண்டு மைதானத்தில் புதிய கட்டடங்கள் எழுப்புவதைத் தமிழ் நாட்டு முதன் மந்திரி வன்மையாகக் கண்டித்திருப்பது மிகவும் சரியாகும். தமது ஆட்சேபணைக்கு அவர் நல்ல காரணங்கள் காட்டியிருக்கிறார். குறிப்பாக, சென்னை நகரின் ஆரோக்கியத்தை இது பாதிக்கும் என்று எடுத்துக் காட்டியிருக்கிறார். இதே காரணத்துக்காகத்தான் பல ஆண்டுகளுக்கு முன் ஐலண்டு மைதானத்தில் ரிஸர்வ் பாங்க் கட்டிடம் கட்டும் யோசனையை மத்திய சர்க்கார் கைவிட வேண்டியதாயிற்று. இதைப் பழைய தஸ்தாவேஜிலிருந்து முதன் மந்திரி பார்த்துக் கொள்ளலாம். நகரச் சூழலைச் சுத்தம் செய்யும் கடற்காற்றைத் தடுக்கும் விதத்தில் ஏற்கனவே பல உயர்ந்த கட்டடங்களைக் கட்டிச் சென்னையின் சுகாதாரத்துக்குப் பெரும் தீங்கு விளைவித்தாகி விட்டது. எப்பாடு பட்டாயினும் ஐலண்டு மைதானத்தைக் காக்க வேண்டும்.

★

கட்சி விட்டுக் கட்சி மாறும் விளையாட்டு அதி வேகமாக வெட்கமே இல்லாமல் பரவி வருகிறது. இதிலிருந்து பூரண அநுகூலம் பெறுவது புதுதில்லியில் ஆள்கிற கட்சியே. உச்சியில் உள்ளவர்களின் பலத்தை ஆதாரமாகக் கொண்ட அக்கட்சி இப்படிப்பட்ட தந்திரோபாயத்தில் ஈடுபட வேண்டியதே. இதைக் கண்டு ஸ்தாபன காங்கிரஸ் பலவீன உணர்வு பெறக் கூடாது. தளர்ச்சியுறாமல் சாஸனத்தையும் மக்களின் நன்னெறியையும் காப்பதில் முனைய வேண்டும். உற்பத்தி உயர்வுக்கு உதவும் கொள்கைதான் வறுமையை நிச்சயமாய்ப் போக்கும் என்று மக்களுக்கு உணர்த்தும் பணியில் சுதந்திரக் கட்சியும் இவ்விதமே தளர்வின்றி முயல வேண்டும். பெர்மிட் — லைசென்ஸ் வழங்கும்



பொறுப்பைக் கட்சிச் சார்பற்றதொரு சுதந்திர அமைப்பிடம் விட்டாலே உற்பத்தி உயர்வுக்கு உதவ முடியும். வரி போட்டு வருவிக்கும் பணத்தைச் சர்க்கார் செய்ய வேண்டிய பொதுப் பணிகளுக்கே பிரயோசனப்படுத்த வேண்டும். தனியாரின் சுதந்திரப் போட்டியின் கீழ் நல்ல முறையில் நடக்கக் கூடிய தொழில்களுக்காக வரிப் பணத்தை முதலீடு செய்யலாகாது.

★

'ஒபீனியன்' பத்திரிகையில் ஸ்ரீ எம்.ஆர். பை எழுதுவதாவது:

இந்தியாவில் சாமானிய காலத்திலேயே சர்க்கார் இயந்திரத்தைத் தனிமனிதர்களுக்காகத் துஷ்பிரயோகம் செய்வது வழக்கமாகி விட்டிருக்கிறது. இந்தத் துஷ்பிரயோகம் சென்ற தேர்தலின் போது படுமோச நிலை அடைந்தது.

ராணுவ விமானங்களைப் பிரதமர் தமது தேர்தல் பிரசாரத்துக்காகத் துஷ்பிரயோகம் செய்து கொண்டார். வானொலியானது பொதுமக்கள் அனைவருக்கும் கடமைப்பட்டிருக்கும் உணர்வை மறந்து, அப்பட்டமாக ஒரு கட்சியையே ஆதரிக்கலாயிற்று. விளம்பரம், கண்காட்சி ஆகியவை குறித்த சர்க்கார் துறைகளும் ஆளும் கட்சிக்கே பணிபுரியலாயின. எல். ஐ. ஸி.யும், சர்க்கார் உடைமையான பாங்குகளும் ஆள்கிற கட்சிக்குக் கட்டுப்பட்டு உதவின.

பொதுத் தேர்தலுக்கு மூன்று மாதங்கள் முன்பே மந்திரிசபை ராஜிநாமா செய்ய வேண்டும்; அல்லது இடைத் தேர்தல் நடத்தப்பட்டால், சட்டசபையைக் கலைத்தவுடன் மந்திரிசபையும் பதவியிலிருந்து விலக வேண்டும். இவ்விதம் செய்தால் தான் அதிகார துஷ்பிரயோகத்தைத் தடுக்க முடியும். இச்சமயத்தில் கட்சிப் பற்றற்ற பெரியோர்களைக் கொண்ட மந்திரிசபையின் ஆலோசனையுடன் ராஷ்டிரபதியும், கவர்னரும் ஆட்சி புரிய வேண்டும்.

★

ஸ்தாபன காங்கிரஸின் தலைமையை யார் ஏற்க வேண்டும் என்பது பற்றிப் பத்திரிகைகளில் பலவித ஹேஷ்யங்கள் வெளியாகியிருக்கின்றன. ஸ்ரீமதி ஸுசேதா கிருபளானியை இத்தலைமைப் பதவிக்குத் தேர்வு செய்வதே மிகச் சிறந்த ஏற்பாடாகும் என யோசனை தெரிவிக்கிறேன். சம்பந்தமற்ற விஷயத்தில் நான் தலையிடுவதாக எண்ணலாகாது. அநுபவத்தினாலும், அந்தஸ்து காரணமாகவும் ஸ்ரீமதி ஸுசேதா கிருபளானி இதற்கு நிரம்பத் தகுதி பெற்றிருக்கிறார். ஸ்ரீ நிஜலிங்கப்பாவின் சேவையை மைசூர் இன்று மிகவும் எதிர்பார்க்கிறது. எனவே, மைசூருக்குத் தம்மால் இயன்றதனைத்தையும் செய்வதற்கு ஸ்ரீ நிஜலிங்கப்பாவைச் சுதந்திரமாக விட்டுவிட வேண்டும். தேசம் முழுவதிலும் ஸ்தாபன காங்கிரஸைச் சீரமைக்கும் பெரிய பளுவை இப்போது அவர் மீது சுமத்தலாகாது.

# சங்கர ஜயந்திக்கு ஒரு சத் காரியம்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசார்யாளின் அநுக்கிரஹத்துடனும், அவர்கள் உவந்து அளித்த ரூ. 2000 நன்கொடையுடனும் நாகபுரியில் ஸ்ரீ பகவத்பாத சபைக் கட்டடம் தொடங்கப்பட்டது. ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதர்களுக்குப் பூஜா மண்டபம் எழுப்பப்பட்டிருக்கிறது. பஜனைக் கூடத்துக்குக் கூரை வேயும் பணி மீதமுள்ளது. பஜனைக்கூடம் முற்றுப்பெற்றபின், விவாகம் உபநயனம் முதலிய வைதிக காரியங்களுக்குக் குறைந்த வாடகையில் விடப்படும். இந்த நல்ல பணிக்கு ரூ. 12,000 தேவைப்படுகிறது. இம்மாதம் 29ந் தேதி ஸ்ரீ பகவத்பாதர்களின் ஜயந்தி நடைபெறுவதை முன்னிட்டு, அவரது புனிதப் பெயர் தாங்கிய இந்தக் கைங்கரியத்துக்கு ஆஸ்திகர்கள் உதவி புரிய வேணும். நிதி அனுப்பவேண்டிய முகவரி: ஸ்ரீ கே. நாராயண அய்யர், தலைவர், பகவத்பாத சபை, 89ஏ, ராமநகர், நாகபுரி - 1.

# அன்பு

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் அருளுரை

உலகத்தில் நாம் காண்கிற அன்பை மூன்று வகையாகப் பிரிக்கலாம். மகான்கள், யோக்கியர்கள், சத்திய சந்தர்கள், பரோபகாரிகள், ஞானிகள், அநுக்கிரக சக்தி வாய்ந்த உத்தமர்கள் ஆகியோரிடம் அவர்களது குணத்துக்காக அன்பு ஏற்படுகிறது. பந்துக்களுடனும், சிநேகிதர்களுடன் சேர்ந்து பழகுவதால் அவர்களிடம் ஒருவித அன்பு உண்டாகிறது. மூன்றாவது, ஒரு காரியத்துக்காக, லாபத்துக்காகச் சிலரிடம் அன்புவைக்கிறோம். உதாரணமாக வியாபாரத்தில் சகாயம் செய்வார் என்பதற்காக ஒரு தனிகரிடம் சிநேகம் பாராட்டுகிறோம்; சம்பளம் கொடுக்கிறார் என்பதால் யஜமானரிடம் அன்பாக இருக்கிறோம்.

இந்த மூவகை அன்பும் உண்மையானதல்ல; சாசுவதமானதல்ல. யஜமானர், ''நீ போய் விடு'' என்றால் உடனேயே நம் அன்பும் போய்விடும். பழகினவர்கள் தூர தேசம் போனாலோ, காலகதி அடைந்தாலோ, வேறு விதத்தில் அவர்களுடன் பழக்கம் போய் விட்டாலோ நாளடைவில் அன்பும் போய் விடுகிறது. முதலில் பிரிவின்போது அழுத அழுகை அப்புறம் எப்படியோ மறைந்து விடுகிறது. உண்மையான அன்பானால், அந்த அழுகை என்றைக்கும் அப்படியே தானே இருக்க வேண்டும்? உத்தம புருஷர்களான மகான்களிடம் வைக்கும் அன்புகூட நிரந்தரமில்லைதான். மகானிடம் குணம் குறைந்தால் — அல்லது குறைந்ததாக நமக்குத் தோன்றினாலே போதும் — அவரிடம் வைத்த அன்பும் குறைந்து விடுகிறது.

மூவகை அன்பும் காரணத்தால் ஏற்பட்டது. எனவேதான் அவை நிரந்தரமல்ல. உத்தம புருஷர்களிடமும் இன்ன குணம் இருக்கிறது என்பதால், அந்தக் குணத்தைக் காரணமாகக் கொண்டே அன்பு வைக்கிறோம். அதோடு அவர்கள் நம்மை உய்விப்பார்கள் என்ற சுய காரியமும் உள்ளூற இருக்கவே செய்யும்.

இப்படி எல்லாம் எக்காரணமும் வியாஜமும் இன்றி இருப்பதுதான் உண்மை அன்பு. ஒருவர் நம்மிடம் நெருங்கிப் பழகாவிட்டாலும் சரி, அவருக்கு ஆத்ம குணங்களும் அநுக்கிரக சக்தியும் இல்லாவிட்டாலும் சரி, அவரால் நமக்கு எந்தக் காரியமும் ஆகாவிட்டாலும் சரி — அப்போதும் நாம் அன்பு கொண்டால் அதுவே உண்மையான அன்பு. அப்படிப்பட்ட அன்பு யாரிடமாவது இருக்கிறதா? ஒரே ஒருவரிடம் இருக்கிறது. ஸ்வாமியிடம் இருக்கிறது. ஸ்வாமிக்கு நம்மிடம் இருக்கும் அன்புக்கு ஒரு காரணமும் இல்லை. காரணத்தை அவர் பாராட்டுவதாக இருந்தால் நமக்கு ஒரு வேளை சோறுகூடப் போட மாட்டார்! நம் பிழைகளையெல்லாம் பொறுத்துக் கொண்டு, நம்மை இந்த மட்டும் காப்பாற்றுபவர் அன்பு மயமான பரமேசுவரரே. இந்தப் பரமசிவ அன்பின் திரிபே உலகில் காணும் மூன்று வகை அன்புகள்.

அந்தக் காரணமற்ற பரமசிவ அன்பை நாமும் அப்பியசிக்க வேண்டும். தப்பு செய்பவன் என்று காரணம் பார்த்து நாம் ஏன் ஒருவனை வெறுக்க வேண்டும்? நாமே தப்புச் செய்கிறோமே, அப்போது நம்மை நாமே உதறித் தள்ளுகிறோமா? அப்படியே மற்றவர்களிடத்திலும் இருக்க வேண்டும். மகா பெரியவர்களிடத்தில் அன்பு இருப்பது விசேஷம் இல்லை. மகா பாவியிடமும் அதே அன்பு இருக்க வேண்டும். இன்னும் சொல்லப் போனால் அவனிடமே அதிக அன்பு வைக்க வேண்டும். ''நாம் தப்புச் செய்வது போலவே, இவனும் செய்கிறான். இவன் மனம் இவனை இப்படித் தூண்டுகிறது. அந்த மனத்தை நல்லதாக்க முயற்சி பண்ணுவோம்'' என்று நினைக்க வேண்டும். ஈசுவர கிருபையால் அநுக்கிரக சக்தி பெற்றிருப்பவர்கள், அதைக் கொண்டு பாவியிடம் உள்ள பாவங்களை நிவிருத்தி பண்ணுவதையே முக்கியமாகக் கொள்ள வேண்டும்.

ஆரம்பத்தில் ஒரே ஒரு மனிதரிடம் காரணமில்லாத தூய அன்பை வைக்கப் பழகிவிட்டால், பின்னால் அதுவே நம்மை அன்பு மயமாக்கி, அந்த அன்பை எல்லோரிடமும் பரப்ப உதவி புரியும். குருவிடம் இவ்விதம் பயன் எதிர்பாராமல் பூரண அன்பு வைக்கப் பழக வேண்டும் என்பது பெரியோர்களின் விதி. குருவிடம் காரணம் பார்க்காமல், வியாஜமும் இல்லாமல் அன்பு செலுத்த ஆரம்பிக்க வேண்டும். பின்பு அந்த அன்பு தருகிற ஆனந்தத்தில் பழகிப் பழகி லோகம் முழுவதும் குருவாக நினைத்து, சமஸ்தப் பிராணிகளிடமும் காரணமில்லாத சமமான அன்பு செலுத்த வேண்டும். லோகம் முழுதும் அன்பை நிரப்பினால் அதுவே ஆனந்த நிலை, அதுவே பரிபூர்ண நிலை, அதுவே பரம சாந்தி.



# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

### 73

குழந்தைகளாவது, வாலிபர்களாவது, விருத்தாப்பியம் அடைந்தவர்களாவது மரணமடைந்து நம்மைவிட்டு நீங்கினால் அதற்காக நாம் அமைதி இழக்கலாகாது. ஒவ்வொரு நிமிஷத்திலும் ஓர் உயிர் தோன்றுகிறது; ஒவ்வொரு நிமிஷமும் ஓர் உயிர் உடலை விட்டுப் பிரிந்து போகிறது. இந்த உலகத்தில் ஒரு குழந்தை பிறந்தது என்றாவது, ஒருவர் இறந்து போனார் என்றாவது மகிழ்ச்சி அடைவதும் அழுவதும் இரண்டுமே பைத்தியக்காரத்தனம். இந்துக்களும் முஸல்மான்களும் பாரசிக மதத்தினரும் எல்லாருமே இந்த உடல் வேறு, இந்த உடலில் குடி கொண்டிருக்கும் ஆன்மா வேறு என்று திடமாக அவர்கள் மதத்தின்படி நம்புகிறார்கள். ஆன்மாவுக்கு மரணமில்லை என்றும் அறிவார்கள். உயிருடன் இருப்பவர்களுடைய ஆன்மாக்களும் மரணம் அடைந்தவர்களின் ஆன்மாக்களும் பேதப்படவில்லை. இரண்டுக்கும் ஒன்றும் வித்தியாசமில்லை. பிறப்பும் இறப்பும் இடைவிடாமல் நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. அவற்றில் நாம் வருத்தப்படுவதற்கோ மகிழ்ச்சி அடைவதற்கோ காரணம் ஒன்றுமில்லை. மற்ற நாடுகளை மறந்துவிட்டு நம்முடைய நாட்டை மட்டும் கவனித்தாலும் நாட்டில் எவ்வளவோ குடும்பங்கள். மரணத்துக்கு அழுவதென்றால் அதற்கு முடிவு இல்லை. இறந்து போனவர்களைப் பற்றி அழ ஆரம்பித்தால் கண்ணீரைத் துடைப்பதற்கே அவகாசமில்லாமற் போகும். மரணத்தைப் பற்றிப் பயப்படுவதையும் வருந்துவதையும் முற்றிலும் ஒழித்துவிட வேண்டும்.

(யங் இந்தியா, 13-10-22)

இறப்பும் பிறப்பும் ஆன்மாவைப் பொருத்தமட்டில் ஒரு வேறுபாடுமில்லை. இரண்டிலும் மகிழ்ச்சிக்கும் காரணமில்லை; துயரத்துக்கும் காரணமில்லை. ஆன்மாவுக்குப் பிறப்பாவது! இறப்பாவது இல்லை.

(யங் இந்தியா, 20-11-24)

ஒரு பயனை அடைவதற்குப் பல வழிகள் உண்டு. பயனே முக்கியம்; சாதனங்களைப் பற்றி எதுவானால் என்ன என்று சிலர் எண்ணுகிறார்கள். இது தவறு. என்னுடைய கொள்கையின்படி ஒரு பயனை அடைவதற்காக நாம் எடுக்கும் முறைகளே மிக முக்கியம். முறைகள் பிழைபட்டால் பயனும் பிழைபட்டதேயாகும். பயன் வேறு; பயனை அடையும் வழி வேறு என்பது பொய். முயற்சியே பயனும் ஆகும். நாம் எடுக்கும் முயற்சி மட்டுமே ஓரளவு நம்முடைய சுவாதீனம். பயன் ஆண்டவனுடைய ஆதீனம். ஆனபடியால் நாம் எடுக்கும் முயற்சியும் முறையுமே நம்முடைய பொறுப்பு. நாம் கையாளும் முறைகள் குற்றமான முறைகளானால் எந்தப் பயனும் நமக்கு நன்மை தராது. இது என்னுடைய உறுதியான கொள்கை. இதற்கு எந்த விதிவிலக்கையும் ஒப்புக் கொள்ள மாட்டேன்.

(யங் இந்தியா, 17-7-24)

கடவுளைக் காண வேண்டுமானால் தன் உயிரைப் போலவே பிற உயிர்களையும் காண வேண்டும். அற்ப ஜீவன்களையும் தன் உயிரைப் போலவே மதிக்க வேண்டும். நம் உயிரில் நாம் வைத்துக் கொண்டிருக்கும் பற்று பிற உயிர்களிடம் ஜீவகாருண்யமாகப் பரிமளிக்க வேண்டும். ஒருவன் தன் உயிரைப் போலவே பிற உயிர்களையும் மதித்தால் அவன் எந்த விவகாரத்தை இது என் பொறுப்பல்ல என்று விலகி நிற்க முடியும்? முடியாது. ஆனபடியால்தான் உண்மையை உபாசிக்கும் நான் அரசியலில் வேலை செய்து வருகிறேன். அரசியல் விவகாரத்துக்கும் தெய்வபக்திக்கும் சம்பந்தமில்லை என்று எண்ணுபவர்கள் அறியாமையால் அப்படி நினைக்கிறார்கள். பக்தி அல்லது சமயம் இன்னதென்று சரியாக உணராதவர்கள்தான் சமயம் வேறு, அரசியல் வேறு என்று எண்ணுவார்கள். இதைப் பற்றி எனக்குக் கொஞ்சமேனும் சந்தேகமில்லை. வேறு அபிப்பிராயம் கொண்டவர்களிடம், இதை மிக வணக்கமாகச் சொல்கிறேன்.

(சுயசரிதம்)

இதோ, புதிய
ரெக்ஸோனா

உங்கள் சருமத்தைப்
பாதுகாத்து
ஊட்டமளிக்கிறது




காரணம், அதிலுள்ள

கேடில் ப்ளஸ்-சருமத்திற்கான 5 டானிக்குகளின் கலவை

லின்டாஸ்-RX. 48-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# மரண நதி பாய்கிறது!

நிறைந்த மகிழ்ச்சியிலும், ஆழ்ந்த சோகத்திலும்தான் கவிதை பிறக்கிறது — என்று கூறுகிறார் கவிஞர் திரு எஸ். டி. சுந்தரம். மகிழ்ச்சிக் கவிதையைவிடச் சோகக் கவிதையை இவர் சொல்லும் போது, நாமும் சோக மயமாகிறோம். அவர் எண்ணத்தில் நாமும் ஒன்றுகிறோம்.

1945ம் ஆண்டு.

அமெரிக்க விமானங்கள் ஜப்பானில் அணுகுண்டுகளைப் போட்ட செய்தியைக் கவிஞர் கேள்விப்படுகிறார்.

அணுகுண்டு விழுந்ததாலே ஆயிரக்கணக்கான மக்கள் உயிரிழந்தார்கள். குழந்தை குட்டிகள், வாயில்லாத கால் நடைகள் அனைத்தும் மடிந்






தன. எங்கும் மரண ஓலம். இங்கிருந்தே அதைக் கேட்கிறார் கவிஞர். கண்ணீர் விடுகிறார். 'இந்த அழிவு தேவை தானா? விஞ்ஞானத்தின் அரிய சக்தி அழிவுக்குத்தான் பயன்பட வேண்டுமா ?' பொங்கிப் பெருக்கெடுத்துப் பாய்கிறது, 'மரண நதி' என்னும் கவிதை.

"அந்தோ மானிடனே!
அறிவின் மானவனே!
அழிவை எண்ணிப்பின்
அழுவோர் உயிர்கூட
அவனியில் இல்லாமல்
அழிந்தாய் மூளையும்
குழந்தைகள் என்செய்தார்?
குருத்துகள் என்செய்தார்?"

என்று கவிஞர் ஏங்கிக் கேட்கும்போது ஏக்கத் துளிகள் கண்ணீராய் விழவில்லையா?



இதைவிடப் பெருந் துயரம், அதிர்ச்சி ஒன்று கவிஞர் வாழ்க்கையில் ஏற்பட்டது. அதுதான் 1948ல் மகாத்மா காந்தி மரணம் அடைந்த செய்தி. வானொலியில் செய்தியைக் கேட்டதும் கவிஞர் அதிர்ச்சி அடைந்தார். கண்ணீர் பெருகிற்று. கூடவே கவிதையும் பிறந்தது.

வெள்ளிக் கிழமையிலே
விளக்கேற்றும் மாலையிலே
அள்ளும் சுடர்சாந்த
அறவிளக்கு அணைந்ததடா!
இல்லையடா பெருஞ்சோதி
இவ்வுலகக் கோடிமக்கள்
உள்ளமெல்லாம் ஒளிகாட்ட
ஒருகூட்டை விட்டதடா!

இவரது பிரசித்தி பெற்ற பாடலான 'சிங்க நாதம் கேட்குது' என்ற பாடல் எழுந்தது எப்படி?

1962ஆம் ஆண்டு. அதி காலை நான்கு மணி.

சீனப் போர் மூண்ட காலம். பீகிங் ரேடியோ இந்தியாவைப் பற்றியும், ஆசிய ஜோதியைப் பற்றியும் பிதற்றிக் கொண்டிருந்தது. தமிழில். கேட்ட கவிஞரின் உடல் கொதித்தது. புயங்கள் இனவெடுத்தன. பொங்கும் வீரம் கண்களிலே ஒளி வீசியது. வீணன் சீனனை விரட்டி அடிப்போம் என்று உறுதி கொண்டது மனம். அவன் பிடரியில் அடிப்பது போல்,

"சிங்கநாதம் கேட்குது
சீனநாகம் ஓடுது
சுதந்திரத்தின் சுந்தர
சங்கநாதம் கேட்குது.
சீனன்வந்த போதிலும்
சிரமறுத்த போதிலும்
சேனைகொண்டு செங்களத்தில்
சேர்ந்தெதிர்த்த போதிலும்"

சிங்கநாதம் கேட்குது, சீன நாகம் ஓடுது என்று போர்ப் பரணி பாடுகிறார், கவிஞர்.

சோகக் கவிதையே சொல்லிவந்த கவிஞர் கொஞ்சம் மனத்துக்கு ஆறுதலாக நகைச் சுவையும் வழங்குகிறார். அதையும் வாங்கி ருசி பார்ப்போமே!

பட்டி மன்றத்துக்கு இவர் போயிருந்தார். விவாதங்கள் முடிந்தன. முடிந்த பிறகும், மேடையிலிருந்து இறங்கி வந்த சிலர் காரசாரமாகப் பேசிக் கொண்டார்களாம். முடிந்து போன ஒன்றை வைத்து ஏன் இப்படிச் சண்டை போட்டுக் கொள்கிறார்கள்? உடனே கவிஞருக்கு இதை வைத்து ஒரு கவிதை எழுத வேண்டும் என்று தோன்றியது. செரிக்



காத வயிற்றுக்குச் சோறு எதற்கு? முடிந்து போன ஒன்றுக்கு விவாதம் எதற்கு?

"செரிக்காத வயிற்றுக்குச்
சோறெதற்கு?
சொரியாத முடவர்க்குச்
சிறங்கெதற்கு?
ஜெனிக்காத பிள்ளைக்குப்
பேரெதற்கு?
ஜெயிக்காத தேர்தலில்
செலவெதற்கு?
ஆடாத மயிலுக்கு
அழகெதற்கு?
பாடாத குயிலுக்குக்
குரலெதற்கு?
ருசிக்காத வாய்க்கு ஒரு
விருந்தெதற்கு?
ரசிக்காத பாவிக்குக்
கவிஎதற்கு?"

பேட்டி: பி.வி. கிரி

# ஆயிரத்தைக் கண்டவர்



அறுபது வருடங்களுக்கு முன்பு சென்னை—திருவல்லிக்கேணியில் நிகழ்ந்தது.

பத்தொன்பது வயது வாலிபர், சபையோர் முன்பு நின்று கொண்டிருந்தார். வேதாந்த பண்டிதர்கள் கூடியிருந்தனர்.

திவ்யப் பிரபந்தங்களிலிருந்தும், ரகசிய கிரந்தங்களிலிருந்தும் கேட்கப்படும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டும்! கேள்விக்குப் பதில் சொல்லத் தவறினால், சபையோர் முன்பு, நாவை, சூரிக் கத்தியினால் அறுத்துக் கொள்ள வேண்டும்!....

இந்தக் கடும் நிபந்தனைக்கு உடன்பட்டு நின்ற வாலிபர் சூரிக்கத்திக்கு வேலை இல்லாமல் செய்து வெற்றி பெற்றார். சன்மானங்கள் குவிந்தன. வாலிபப் பிராயத்திலேயே இக் கடினமான பரீட்சையில் வெற்றி பெற்றவர் காஞ்சிபுரம் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசாரியார் சுவாமிகள்.

இவரது எண்பதாண்டு நிறைவு விழா அண்மையில் மிகச் சிறப்பாகக் காஞ்சியிலும் சென்னையிலும் கொண்டாடப்பட்டது.

சில மணி நேரம் அவரது இல்லத்தில் இருந்தால் அவர் அஷ்டாவதானம் செய்யும் காட்சியைப் பார்க்கலாம்.

'ஸ்ரீ ராமாநுஜன்' என்னும் மாத இதழின் 'புரூப்' பார்த்து முடிக்கிறார். உடனே, 'எக்ஸ்பிரஸ்' தபால்களுக்குக் கைப்படக் கடிதம் எழுதி உறையின் மீது முகவரி எழுதி, அவரே அதனை ஒட்டி முடிக்கிறார்! எழுபத்தொன்பது வயதிலும் என்ன சுறுசுறுப்பு! அச்சாகும் புத்தகங்களின் 'ஃபாரங்கள்' பார்வைக்கு வருகின்றன; சென்னையிலிருந்து வந்திருக்கும் ஆப்த சிஷ்யர்களுடன் உரையாடல்; வெளியூர் வாசிகளின் கேள்விக்கு வேதாந்த விளக்கமான பதில்; இவை முடிந்தவுடன், எழுத்து வேலை தொடங்குகிறது. வேதாந்தக் கட்டுரை ஒரு வெளியூர் மலருக்கு!.... கட்டுரை எழுதியானவுடன் 'மிகப் பெரிய 'பைண்டு வால்யூம்' களைப் புரட்டி, குறிப்புக்கள் எழுதி, பக்க அடையாளம் செய்து கொள்கிறார்!

இப்படியாகக் காலை முதல் மாலை வரை தினசரி ஓய்வின்றி அலுவல்கள். இவையெல்லாம் பிரதிதினமும், வேத பாராயணம் செய்து விதிப் பிரதட்சிணம் முடிந்தவுடன் நடைபெறும் நிகழ்ச்சிகளாகும்!

'ஆயிரத்தைக் கண்டவர்' என்றால் ஒன்றிரண்டு துறைகளில் மட்டுமல்ல!

மூவாயிரத்துக்கும் மேற்பட்ட காலட்சேபங்கள் நிகழ்த்தியிருக்கிறார்—நாடு முழுதும்.

ஆயிரத்து இருநூறுக்கும் மேற்பட்ட கட்டுரைகள் வரைந்திருக்கிறார் — வேதாந்த விளக்கம், சர்ச்சை, வரலாறு, விமரிசனம், வியாக்கியானம் போன்றவை. எண்ணூறு நூல்கள் எழுதி, வெளியிட்டிருக்கிறார்!

இவருடைய முதல் புத்தகம் — 1908ல், பம்பாயில் வெளியிடப்பட்டது. சம்ஸ்கிருத மொழியில் வெளி வந்ததாகும். நூறு பக்கங்கள், எட்டணா விலை. காகிதம் இன்னும் வெண்மையுடன் இருக்கிறது..... !

"தாங்கள் எழுதிய புத்தகங்களில் அதிக காலம் செலவிட்டு எழுதிய புத்தகம் எது என்பதைத் தெரிவிக்க வேண்டும்" என்றேன்.

"நாலாயிர திவ்ய பிரபந்தம் — வியாக்கியானம் புத்தகம் எழுதப் பத்து வருடங்கள் ஆயிற்று. 1927 முதல் 1937 வரை எழுதி

## சூரிக்கத்திக்கு வேலை இல்லை!

னேன். எட்டாயிரம் பக்கங்கள்! இப்போது அப்புத்தகத் தொகுதிகள் நாலாவது பதிப்பாக வெளியாகப் போகின்றன. அச்சு வேலைகள் நடக்கின்றன....." என்றார்.

"தாங்கள் எத்தனை மொழிகளில் நூல்களைப் பிரசுரிக்கிறீர்கள்?"

"தமிழ், சம்ஸ்கிருதம், தெலுங்கு, இந்தி, ஆங்கிலம்" எனப் பதில் தெரிவித்தார்.

'ஸ்ரீ ராமாநுஜன்' எனும் பெயர் கொண்ட மாத இதழ் தமிழ், தெலுங்கு, சம்ஸ்கிருதம், இந்தி ஆகிய மொழிகளில் பிரசுரமாகிறது. அதன் ஆசிரியரும் இவரே. முப்பத்திரண்டு வருடங்களாக வெளியிடப்பெற்று வருகிறது.

ஸ்ரீ அண்ணங்கராசாரியாரிடம் கேட்டேன்:

"ஐந்து வருடங்களுக்கு முன் சென்னை சம்ஸ்கிருதக் கல்லூரியில் பேசிய திரு ஜி. டி. பிர்லா, இந்தியாவில் நல்ல சம்ஸ்கிருத அகராதி கிடைக்கவில்லை. ஜெர்மனியில் இருநூறு பவுன்களுக்கு (சுமார் மூவாயிரத்து ஐந்நூறு ரூபாய்) வாங்கினேன் என்றாரே, அப்படியொரு அகராதி வெளியாகவில்லையா?"

"ஸ்ரீ பிர்லா சொன்னது சரிதான். நல்ல சம்ஸ்கிருத அகராதி வெளியிடும் முயற்சியில் எனக்கும் பங்கு உண்டு. அகராதி வேலை தொடங்கி ஐந்து ஃபாரங்கள் முடிந்திருக்கின்றன. அந்த வேலை தற்போது தடைப்பட்டிருக்கிறது...!" என்று பதில் தந்தார்.

சென்னையில் நாற்பத்தைந்து வருடங்களாக, மார்கழி மாதம் முப்பது நாட்களும் ஆண்டாள் திருப்பாவை உபந்யாசத்தைத் தொடர்ந்து நடத்தி வருகிறார்.

கணீரென்ற குரலில், கேட்போரைப் பரவசப்படுத்தும் அவரது விரிவுரைகள் ஒரு நாள் கேட்டால் போதும், தொடர்ந்து கேட்கத் தோன்றும். பேட்டி: ஏ. சுவாமிநாதன்



# மகுடபதி



அமரர் கல்கி

## மூன்றும் அத்தியாயம்

## ஓடைக் கரை

சென்ற அத்தியாயத்தின் இறுதியில், 'தேனினும் இனிய பெண் குரல்' என்று நாம் சொன்ன போது, மகுடபதியின் செவியில் அக்குரல் அவ்விதம் தொனித்தது என்பதைத்தான் குறிப்பிட்டோம். மற்றவர்களுக்கு அது சாதாரணப் பெண் குரலாகவே தோன்றியிருக்கலாம்.

அந்தத் தேனினும் இனிய குரல், மகுடபதிக்கு அளித்த வியப்பையும் கிளர்ச்சியையும் வர்ணிக்கத் தரமன்று. அந்தக் குரலைச் சுமார் ஒன்றரை வருஷத்துக்கு முன்னால் ஒரு தடவை மகுடபதி கேட்டிருக்கிறான். ஒரே ஒரு தடவை தான். ஆனால், அதைக் கேட்ட இடமும் சந்தர்ப்பமும், அந்தக் குரலில் கூறப்பட்ட விஷயங்களும், அவன் மனத்தில் என்றும் மறக்க முடியாதபடி பதிந்து கிடந்தன.

மீண்டும், இப்படிப்பட்ட எதிர்பாராத வேளையில், எதிர்பாராத இடத்தில், அந்தக் குரலைக் கேட்டபோது, மகுடபதிக்கு உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கிப் போட்டு விட்டது. குரல் கேட்ட அதே காலத்தில் மகுடபதி அண்ணாந்து பார்த்தான். அழுது வடிந்த அரிக்கன் லாந்தரின் மங்கிய வெளிச்சத்திலும், அந்தப் பெண்ணின் சிறிது குனிந்த முகம் அவனுக்குப் பளிச்சென்று புலப்பட்டது. ஆமாம்; அவள்தான். சந்தேகமில்லை. பார்த்தது பார்த்தபடியே நின்றான் மகுடபதி.

அந்தப் பெண்ணோ, மின்னல் வீச்சைப் போல் ஒரு தடவை அவனைப் பார்த்துவிட்டுக் கிழவனை நோக்கினாள். கிழவன் தடுமாறியவண்ணம், "அம்மா, செந்திரு! இதோ ஒரு 'நிமிட்டி'லே வந்து விடுகிறேன், தாயி! கொஞ்சம் பொறுத்துக்கொள்" என்றான். உடனே மருடபதியைப் பார்த்து, "தம்பி! நான் ஏன் உன்னைப் போகச் சொன்னேன் என்று தெரிகிறதா? உடனே போய்விடு, அப்பா! உன்னை ஒரு களவாணிப் பயலும் ஒன்றும் செய்ய மாட்டான். பழனியாண்டவர் காப்பாற்றுவார்" என்றான்.

மருடபதிக்கோ, கிழவன் சொன்னது ஒன்றும் காதில் விழவேயில்லை. செந்திருவின் முகத்தையே அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்த அவனுக்கு, ஒரு விஷயம் மிகுந்த ஆச்சரியத்தையும் ஏமாற்றத்தையும் அளித்தது. அந்தப் பெண் தன்னைத் தெரிந்து கொண்டதாகவே காட்டிக் கொள்ளவில்லையே, ஏன்? இருட்டினால் தெரியவில்லையா? ஒரு வேளை அடியோடு மறந்துவிட்டாளா? மறந்திருக்க முடியுமா? — என்ன ஏமாற்றம்?

செந்திரு, அடுத்தாற்போல் பெரியண்ணனைக் கேட்ட கேள்வி அவனுடைய ஏமாற்றத்தை அதிகமாக்கிற்று. "இவர் யார், பாட்டா? உனக்கு ரொம்பப் பழக்கமானவர் போலிருக்கிறதே? இந்த ஊர்க்கார மனுஷராயிருந்தால் கொஞ்சம் இங்கே அழைத்துக் கொண்டு வா, சில விஷயங்கள் பேச வேண்டும்" என்றாள்.

தன்னை மேலே அழைத்து வரும்படி சொன்னது மருடபதிக்குச் சிறிது திருப்தியளித்தாலும், அவள் தன்னைத் தெரிந்து கொள்ளவில்லை என்ற ஏமாற்றம் மனத்தை வருத்திற்று.

பெரியண்ணனோ, இன்னது செய்வதென்று தெரியாமல் திகைத்தான். மேலே செந்திருவின் முகத்தை நோக்கினான்; பிறகு மருடபதியின் முகத்தைப் பார்த்தான். "தம்பி!...." என்று இழுத்தான்.

"பாட்டா! நீ கவலைப்பட வேண்டாம்; நான் போகிறேன்" என்றான் மருடபதி.

"இல்லை, தம்பி! குழந்தை உன்னிடம் என்னமோ கேட்க வேணும் என்கிறது...."

"பாட்டா! நான் உனக்குத்தான் குழந்தை; ஊருக்கெல்லாம் குழந்தையா?" என்று மேலிருந்தபடி செந்திரு கேட்டாள்.

மருடபதி கிழவனிடம், "இல்லை, பாட்டா! உனக்கு என்னத்திற்கு வீண் கஷ்டம்? நான் போய் வருகிறேன். நீ இங்கே தனியாய் இருக்கிறதாக நினைத்துக் கொண்டு அவ்வளவு பிடிவாதம் பிடித்தேன். வேறு யாரோ இருப்பதாக மட்டும் தெரிந்திருந்தால் இங்கே வந்திருக்கவே மாட்டேன். உனக்குத்தான் தெரியுமே, அப்படி ஒன்றும் நான் உயிருக்குப் பயப்படுகிறவன் அல்ல" என்றான்.

அச்சமயம் அவன் மேலே நோக்கிப் பார்க்கவில்லை. பார்த்திருந்தால், செந்திருவின் முகத்தில் ஒரு விஷமப் புன்னகை தோன்றிக் கணத்தில் மறைந்ததைக் கவனித்திருக்கலாம்.

மச்சுப் படிகளில் இரண்டு படிகள் செந்திரு பரபரப்புடன் இறங்கிச் சற்று மெதுவான குரலில், "பாட்டா! இங்கே கொஞ்சம் சீக்கிரம் வா! சற்று முன்னால் இரண்டு தடியர்கள் இந்தத் தெருவோடு போனார்கள். அவர்கள் கையில் கத்தியும் தடியும் இருந்தது. எனக்கு ரொம்பவும் பயமாயிருந்தது. இப்போது அவர்கள் மறுபடியும் திரும்பி வருகிறார்கள். சட்டென்று இங்கே வந்து பார்!" என்றாள். உடனே மருடபதியை ஒரு பார்வை பார்த்துவிட்டு, "பாட்டா! அவரைக் கூட இப்போது போகச் சொல்லாதே! கதவைத் திறந்தால் அந்தத் தடியர்கள் உள்ளே வந்தாலும் வந்துவிடுவார்கள். அவர்களைப் பார்த்தாலே எனக்குக் கதி கலங்குகிறது. உன் சிநேகிதரை இங்கேயே கொஞ்ச நேரம் இருந்து விட்டுப் போகச் சொல்லு. அவருக்கு உயிருக்குப் பயமில்லாமற் போனாலும், எனக்குப் பயமாயிருக்கிறது" என்றாள்.

பெரியண்ணன் அப்போது மருடபதியின் கையைப் பிடித்துக் கொண்டு, "வா, தம்பி! மச்சுக்குப் போய் அஞ்சு நிமிஷம் இருந்துவிட்டு அப்புறம் போகலாம். அப்படியொன்றும் ரொம்ப நேரமாகிவிடவில்லையே? ஏழரை மணிதான் இருக்கும்" என்றான். பிறகு அவன் ஒரு கையால் மருடபதியின் கையைப் பிடித்து இழுத்தவண்ணம் மச்சுப்படியில் ஏறத் தொடங்கினான்.

மருடபதிக்கோ மச்சுப் படியில் ஏறுகையில் ஒரே மனக் குழப்பமாயிருந்தது. அந்தப் பெண் யார்? பதினெட்டு மாதங்களுக்கு முன்பு, அந்த அழகிய நீரோடைக் கரையில் தான் சந்தித்த பெண்தானா, இல்லையா? அந்தக் காட்சி நேற்றுத்தான் நடந்தது போல் அவன் மனக் கண்ணின் முன்னால் வந்தது.

மகாத்மா காந்தி உப்பு சத்தியாக்கிரக இயக்கம் ஆரம்பித்த போது, மருடபதி கல்லூரிப் படிப்பை நிறுத்தி

# லக்ஷ்மீஸ்

## கோல்டு கிரவுன்

'டெரின்',/காட்டன்
ஷர்ட்டிங்குகள்

. . . மற்றும்

ஸ்டெல்லார் ஸெல்லுலர்
மார்க்குவிஸ் 2x2

லக்ஷ்மீஸ் கோல்டு கிரவுன் உங்களை பொலிவு பெறச் செய்கிறது. முன்னேற்றத்தின் துணைவனாகிறது. என்றென்றும் தனித்தன்மைப் பெறச் செய்கிறது. லக்ஷ்மீஸ் 'டெரீன்',/ காட்டன் ஷர்ட்டிங்குகள் உலகப் புகழ் பெற்ற 'டெரீன்',/ 67 விகிதமும் பருத்தி 33 விகிதமும் சேர்ந்து இழைக்கப்பட்டுள்ளது. உங்களை நாகரீகத்தின் முன்னணியில் இணையற்று விளங்கச்செய்கிறது.



ஸ்ரீ
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்

## எடுத்துக்காட்டு!

Criterion LM2438 A



விட்டு வந்து சத்தியாக்கிரக இயக்கத்தில் ஈடுபட்டான்.

அவனுக்கு ஆறு மாதம் கடுங்காவல் தண்டனை கிடைத்தது. அது பூர்த்தியாகி வெளியில் வந்த போது, கோய முத்தூர் ஜில்லாவில் மதுவிலக்கு இயக்கம் தீவிரமாக நடந்து வரு வதை அறிந்தான். அவனும் அந்த இயக்கத்தில் ஈடுபட ஆவல் கொண்டான். நீலகிரி மலையின் அடிவாரத்தில் உள்ள மேட்டுப் பாளையத்துக்கருகில் வேங்கைப் பட்டி என்பது அவனுடைய கிராமம். அந்தக் கிராமத்தில் போய்த் தங்கி, மேட்டுப் பாளை

யம் தாலூக்கா முழுவதும் சுற்றித் தீவிரமான மதுவிலக்குப் பிரசாரம் செய்யத் தொடங்கினான்.

இந்த வேலையில் ஈடுபட்டிருந்த காலத்தில்தான் ஒரு நாள், மருடபதி மிதிவண்டியில் சாலையோடு போய்க்கொண்டிருந்த போது, அந்த மறக்க முடியாத சம்பவம் நடந்தது. காலை ஒன்பது மணி இருக்கும். சாலை ஓரத்தில் ஓர் அழகான ஓடை; இரண்டு மூன்று நாட்களுக்கு முன்னால் நன்றாக மழை பெய்திருந்தபடியால், ஓடையில் நிரம்பத் தண்ணீர் இருந்தது. தெளிவான பளிங்கு போன்ற தண்ணீர்; சுற்றிலும் பசுமையான மரங்கள்; ஓங்கி வளர்ந்த மரங்கள் அல்ல; குட்டையான மரங்கள்தாம். சற்றுத் தூரத்தில் மரங்களுக்கு மேலே ஒரு பெரிய வீட்டின் மேல் பாகம் மட்டும் தெரிந்தது. பசுமையான மரங்களுக்கு மேலே, தூய வெள்ளைச் சுண்ணாம்பு அடித்த சுவரும், அதன் மேலே சிவப்பு ஓட்டுக் கூரையும், கூரைக்கு மேலே நீல ஆகாசமும் ஒரு வர்ணக் காட்சி போல் புலப்பட்டன. நீரோடையின் ஒருபுறத்தில் இரண்டு வெண்ணிறக் கொக்குகள் ஒற்றைக் காலால் நின்று தவம் செய்த காட்சி அதைவிட அருமையாயிருந்தது.

மருடபதி அந்த ஓடைக் காட்சியைக் கண்டு சிறிது நேரம் இன்புற எண்ணி, மிதி வண்டியிலிருந்து இறங்கினான். மிதிவண்டியை ஒரு மரத்தடியில் சாத்திவிட்டு, ஓடையில் தண்ணீர்க் கரைக்குச் சமீபமாய்ச் சென்றான். அப்படிப் போகும்போது, சுற்றுமுற்றும் பார்க்கையில், அவனுடைய நெஞ்சை ஒருகணம் ஓடாமல் நிறுத்திய ஒரு காட்சி தென்பட்டது. ஒரு மரத்தடியில்

ஓர் அழகிய இளம் பெண் படுத்துக்கொண்டிருந்தாள். அவளுடைய கண்கள் மூடியிருந்தன. அந்த நிலையில் அவளைப் பார்க்கும் போது சாதாரண மனிதப் பெண்ணாகத் தோன்றவில்லை. நிசப்தமான அந்த ஏகாந்தப் பிரதேசத்தில் — அந்த அழகிய ஓடைக் கரையில் — இந்த நேரத்தில் படுத்துத் தூங்குவது மனிதப் பெண்ணாயிருக்க முடியாது; வன தேவதையாகத்தான் இருக்க வேண்டும்! — இப்படி எண்ணிய மருடபதிக்குச் சட்டென்று இன்னொரு நினைவு உண்டாயிற்று. அவள் தூங்குகிறாளோ, அல்லது ஏதாவது ஒரு காரணத்தினால் மூர்ச்சையாகித்தான் கிடக்கிறாளோ? — இவ்விதம் எண்ணியதும், அவன் விரைந்து சென்று அந்தப் பெண்ணின் அருகில் நெருங்கினான். குனிந்து பார்த்தான். மூர்ச்சையாயிருக்கிறாளா, தூங்குகிறாளா என்று தெரிந்துகொள்ள வழி தெரியவில்லை. மூக்கின் அருகில் விரலை நீட்டிய போது, மிக மிக இலேசாக மூச்சு வருவது போல் தெரிந்தது. அதே சமயத்தில் அந்த முகத்தின் அழகும் அவன் கண்ணுக்குத் தெரியாமல் போகவில்லை. மூடியிருந்த கண்கள் கூம்பிய நீலோற்பல மொட்டுக்களை அவனுக்கு ஞாபகப்படுத்தின. ஒரு கொசுத் தேனீ அம்முகத்தினருகில் வந்து அப்போது வட்டமிட்டது. "இந்த முகத்தைத் தாமரை மலர் என்று எண்ணித்தான் இந்தத் தேனீ வட்டமிடுகிறது" என்று நினைத்தான்.

வெறுமே இப்படிப்பட்ட வர்ணனைக் கற்பனைகளில் அவன் அதிக காலம் கடத்தி விடவில்லை. 'தூங்குகிறவளாயிருந்தால் இவ்வளவு சமீபத்தில் நாம் வந்து நிற்கும்போது விழித்துக் கொள்ளாமல் இருப்பாளா? மூர்ச்சையாகத்தான் இருக்க வேண்டும்' என்று நிர்மானித்துக் கொண்டு ஓடைக் கரைக்கு ஓடினான். கைக் குட்டையைத் தண்ணீரில் நனைத்து எடுத்துக் கொண்டு ஒரு நொடியில் ஓடி வந்தான். அந்தத் தண்ணீரைப் பிழிந்து முகத்தில் தெளித்தவுடனே, அவள் பளிச்சென்று எழுந்து உட்கார்ந்து முகத்தைத் துடைத்துக் கொண்டதோடல்லாமல், மருடபதியைப் பார்த்துக் கலகலவென்று சிரிக்கவும் தொடங்கினாள். மருடபதிக்கு முதலில் சிறிது வெட்கமாயும் கோபமாயும் இருந்தது. ஆனால், அவளுடைய கலகலப்பான இனிய சுபாவமும், சாதுரியமான பேச்சும் அதை மாற்றி விட்டன. முகத்தின் மோகன சௌந்தரியத்தோடு, கவிகள் வர்ணிப்பது போல், காதளவு நீண்ட கண்களின் காந்த சக்தியும் சேர்ந்து விட்டால், பிறகு கேட்பானேன்? அந்த மரத்தடியிலேயே நிம்மதியாக உட்கார்ந்து இருவரும் பேசத் தொடங்கினார்கள்.

மருடபதி அந்தப் பெண்ணைப் பற்றிய விவரங்களை யெல்லாம் அறிய விரும்பினான். அவளோ தன்னைப் பற்றி ஒன்றும் அதிகமாய்ச் சொல்லாமல் மருடபதியைப் பற்றியும் அப்போது அவன் செய்த வேலையைப் பற்றியும் மூச்சு விடாமல் கேள்வி கேட்டு அவனைத் திணற அடித்தாள். "ஆறு மாதம் ஜெயிலில் இருந்துவிட்டு வந்தேன்" என்று மருடபதி சொன்ன போது, "இது ஒரு பிரமாதமா? நான் மூன்று வருஷங்களா ஜெயிலில் இருக்கிறேனே? அதோ அந்த வீடுதான் என் ஜெயில்" என்று அவள் சொன்னாள். இதைக் கேட்ட மருடபதிக்கு மனத்தை என்னவோ செய்தது. அதைப் பற்றி மேலும் விசாரிப்பதற்குள் அவள் பேச்சை மாற்றி விட்டாள். மருடபதி இன்னொருசமயம் பேச்சினிடையே "பாரதத் தாயின் விடுதலைக்காகத்தான் நாங்கள் எல்லாரும் பாடுபடுகிறோம்" என்றான். அப்போது அந்தப் பெண் பெருமூச்சுடன், "என்னை யார் வந்து எப்போது விடுதலை செய்யப் போகிறார்களோ, தெரியவில்லை!" என்றாள்.

"நான் செய்கிறேன்; தேசம் விடுதலையடைந்தவுடனே நானே வந்து உன்னை விடுதலை செய்கிறேன்" என்று மருடபதி பளிச்சென்று பதில் சொன்னான்.

"இந்த வார்த்தை சத்தியமா?" என்று அவள் கேட்டாள்.

"சத்தியம்" என்று மருடபதி உறுதி கூறி, "ஆனால் நீ உன்னைப் பற்றி ஒன்றுமே சொல்ல மாட்டேன் என்கிறாயே?" என்று கேட்டான். இந்தச் சமயத்தில் சற்றுத் தூரத்தில் மோட்டார் வண்டியின் ஹாரன் சப்தம் கேட்டது. "ஐயோ! சித்தப்பா வருகிறார். உன்னையும் என்னையும் சேர்ந்து கண்டால் இங்கேயே கொலை விழுந்து விடும்" என்று சொல்லி விட்டு அந்தப் பெண் எழுந்து விரைந்து போய் மரங்களுக்குப் பின்னால் மறைந்துவிட்டாள்.

'அந்தப் பெண்தானா இவள்? அல்லது நமக்குத்தான் சித்தப் பிரமையா' என்று மருடபதி மச்சுப்படி ஏறும்போது சிந்தனை செய்தான். 'அடடா! அன்று தன்னுடைய பெயர் என்ன என்று கூடச் சொல்லாமற் போய் விட்டாளே? செந்திரு! என்ன அழகான, அபூர்வமான பெயர்! அந்தப் பட்டுக்காட்டுப் பெண்ணுக்கு இவ்வளவு அழகான பெயர் யார் வைத்திருக்க முடியும்?' (தொடரும்)

# வெட்டுக் காயங்கள்! சுட்ட புண்கள்!
# விரைவில் இட்டுப் பாருங்கள் பர்னால்

## குளுமையுடன் இதமளிக்கும் நிவாரணி







வீடு என்றால் விபத்துக்கள் சேர்ந்தான் செய்யும். அடிக்கடிக்கும் குழந்தைக்கு அடிக்கடி அடிபடுவது சகஜம். சமையலறையிலோ எதிர்பாராத் திரும் கொதி எண்ணெய் தெறிக்கலாம்; காய்கறி நறுக்கும்போது விரலிலே பட்டு விடலாம். எனவே எப்போதும் கைவசம் இருக்கட்டும் பர்னால்! குளுமையுடன் இதமளிக்கும் பர்னால், தீப்புண், வெட்டு, சிராய்ப்பு, கட்டி மற்றும் காயங்களை ஆற்றும் பலபயன் நிவாரணி. இட்டவுடன் இதமளித்து ஆற்றுவது பர்னால்

**பர்னால் 40 ஆண்டுகளுக்கும் மேலாக கணக்கற்ற இல்லங்களில் காயமாற்றிவரும் நம்பகமான நிவாரணி**







பூட்ஸ் ப்யூர் டிரக்கம்பெனி (இந்தியா) லிட.,

ASP/B/B-14 TM



# ராமாயணம்

## ராஜாஜி

ஏந்தப் பகைவனும் தன்னை ஜயிக்க முடியாது என்று ராவணன் சொல்லி விட்டுத் தானே அரண்மனை மாளிகையின் மேல் ஏறிச் சென்று சத்துரு பலத்தை நேரில் பார்த்தான். பிறகு மந்திரிகளோடு நீண்ட நேரம் பேசினான். சத்துரு சைன்யத்திலுள்ள வீரர்கள் யார் யார் என்பதை யெல்லாம் தூது சென்று திரும்பியவர்களை விசாரித்தான்.

அவர்களும் ஒவ்வொரு வானர வீரனைப் பற்றியும் அவன் கொண்டு வந்திருக்கும் படையைப் பற்றியும் எடுத்துச் சொன்னார்கள். பூ மண்டலத்தின் பல வேறு வனங்கள், மலைகள், நதிப் பிரதேசங்களிலிருந்து வந்து கூடியிருக்கும் அந்தப் பெரிய வானர, கரடிச் சேனை

யின் பலத்தை எடுத்துச் சொன்னார்கள். அவர்களுக்குள்ள தேக பலமும் வீரியமும், அவர்கள் ராமனிடத்தில் வைத்திருக்கும் அசையாத பக்தியும், அவர்கள் அனைவருக்குள்ளும் இருக்கும் ஒற்றுமையும், ராக்ஷசர்களை வதம் செய்ய வேண்டும் என்கிற ஆத்திரமும் எல்லாம் மந்திரி சாரணனால் சொல்லப்பட்டது. வானர சேனைக்குள் புகுந்த போது சாரணன்கூடச் சென்ற மற்றொரு மந்திரியும் ராவணனுக்கு வானர வீரர்களைப் பற்றி விசேஷமாகச் சொன்னான்:

''அதோ பார்! அவன்தான் ராமசந்திரன்! அதோ பார்! அவன் பக்கத்தில் லக்ஷ்மணன். நீதி சாஸ்திரம், யுத்த சாஸ்திரம், அனைத்தும் அறிந்தவன். இவன் ராமனுக்கு நடமாடும் இரண்டாவது உயிரும் வலது கையுமாவான். அதோ பார்! அவன் பக்கத்தில் வாலியினுடைய மாலையை அணிந்து கொண்டிருக்கிற சுக்ரீவன். வாலிக்குச் சமவீரன். அதோ பார்! அவன் பக்கத்தில் உன் தம்பி விபீஷணன். இவர்களை வெல்வது சுலபமல்ல. வெற்றிக்கு வேண்டிய முயற்சிகளையெல்லாம் யோசித்துச் சரியாகச் செய்வீராக!'' என்றான்.

பகைவனுடைய பலத்தைப் புகழ்ந்து பேசிய மந்திரிகளின் பேரில் ராவணனுக்குக் கோபம் மேலும் மேலும் பொங்கிற்று. மூர்க்கனுடைய குணம் இது. உண்மையைச் சொல்லும் தூதர்கள் பேரிலும் க்ஷேமத்தைக் கோரிப் பேசும் மந்திரிகளின் பேரிலும் புத்திசாலியான அரசன் கோபிக்க மாட்டான். ஆனால், ராவணனுடைய மதி இப்போது கலங்கிப் போயிருந்தது! அவனுக்கு இப்போது உண்மையும் பிடிக்கவில்லை; ஹிதமான உபதேசமும் பிடிக்கவில்லை.

ஏதோ யோசனை செய்தான். தன்னுடைய மனப் போக்கை வைத்து ராமனுடைய குணத்தை அளந்தான். இது தானே உலக இயற்கை? சீதை



தனக்கு எப்படியாவது உடன்பட்டுவிட்டால் ராமன் அவமானமடைந்து மனமுடைந்து திரும்பி விடுவான் என்பது அவன் எண்ணம். ஆனபடியால் இப்போது இன்னொரு முயற்சி செய்து அவளை எப்படியாவது உடன்படச் செய்ய வேண்டும் என்று தான் அறிந்த யுக்தி முறையில் தீர்மானித்தான். இதற்காக ஒரு மாயக்கார அரக்கனுடைய உதவியை நாடினான்.

''மின்னல் நாயகனே! உனக்கு எல்லா மாய வித்தையும் தெரியுமல்லவா? நான் உனக்குச் சொல்லி அனுப்புவேன். அப்போது நீ வந்து சீதையின் முன் அவளுடைய புருஷன் ராமனுடைய தலையைப் போல் ஒன்று செய்து அதைக் கொண்டு வந்து வைக்க வேண்டும்'' என்று சொன்னான். அந்த மாயவித்தைக் காரனும் அப்படியே செய்வதாக ஒப்புக் கொண்டு தயாரானான்.

அதன்மேல் ராவணன் அசோகவனம் சென்று மறுபடியும் ஜானகியைக் கண்டு பலவாறு சொல்லி ஏமாற்றி, ''உன் புருஷனும் அவன் சேனையும் ஹதம் செய்யப்பட்டார்கள். என் வீரர்கள் கடல் தாண்டிச் சென்று, ராமனும் அவன் வானர சேனையும் களைப் படைந்து தூங்கிக் கொண்டிருந்த சமயத்தில் திடீரென்று தாக்கி ராமன் உள்பட எல்லோரையும் கொன்றுவிட்டார்கள். சேனை சிதறி ஓடிப்போயிற்று. உன் புருஷன் ராமனுடைய தலையை என்னுடைய வீரன் எனக்குக் காண்பிக்கக் கொண்டு வந்திருக்கிறான். இன்னும் ஏன் பிடிவாதம் செய்கிறாய்? என் அந்தப்புரத்துக்குத் தலைவியாகிச் சுகமாக இருப்பாயாக. மூர்க்கம் செய்யாதே. லங்கைக்கு அரசி ஆவாய். நான் சொல்வதைக் கேள்!'' என்று சொல்லி, ஓர் அரக்கியை அழைத்து, ''போய் வித்யுஜ்ஜிஹ்வனை வரச் சொல்!'' என்றான்.

அந்த மந்திரவாதி அரக்கனும் ராமனுடைய தலையைப் போலவே இருந்த ஒரு மாய சிருஷ்டியைச் சீதையின் முன்னிலையில் வைத்தான்.

* * *

சீதை பார்த்துத் திடுக்கிட்டாள். தன் கதி இப்படி ஆயிற்றே என்று பிரலாபிக்கலானாள்.

இதற்கிடையில் ராமனுடைய சேனை லங்கையை நெருங்கி விட்டபடியால் மந்திரிகளும் சேனாதிபதிகளும் அவசரமாக வந்து ராவணனைப் பார்க்க அனுமதி கேட்டுச் சொல்லி யனுப்பினார்கள். ராவணன் உடனே சீதையை விட்டு விட்டுச் சபைக்குப் போக வேண்டியதாயிற்று. ராவணனுடைய இருப்பு அந்த மாயத்தில் இன்றியமையாத ஓர் அம்சம். அவன் அந்த இடம் விட்டுப் போனதும் மாயா உருவம் தானாகவே கரைந்து போயிற்று. ராமனுடைய தலை என்று காட்டப்பட்ட பொய்த் தலை புகை போல் மறைந்து போய் விட்டது.

விபீஷணனுடைய மனைவியான ஸரமை என்பவள் சீதைக்குத் தோழியாக இருந்து வந்தவள், ராவணன் செய்த மாய வித்தையைச் சீதைக்கு விளக்கி ஆறுதல் தந்தாள்.

''ராமனை யாரும் கொல்லவில்லை. அவனும் அவனுடைய பெரும் படையினரும் இலங்கை வந்து சேர்ந்து விட்டனர். கடலைத் தாண்ட அற்புதமான ஒரு சேது கட்டிவிட்டு அதன் மேல் மற்றொரு கடலைப் போன்ற பெரும் வானர சேனை வந்து இறங்கி விட்டது. ராக்ஷசர்கள் எல்லோரும் திகில் அடைந்திருக்கிறார்கள். ராவணன் உன்னை மாய வித்தையால் ஏமாற்றப் பார்க்கிறான்'' என்று சீதைக்கு உண்மையைச் சொன்னாள்.

ஸரமை சீதைக்கு இன்னும் சில விஷயங்களைச் சொன்னாள்:

''ராவணனுடைய மந்திரிகள் பலர் அவனுடைய க்ஷேமத்தை விரும்பி, 'சீதையை ராமனிடம் ஒப்புவித்துவிடு. அழியாமல் தப்பலாம்' என்று சொன்னார்கள். எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை. 'யுத்தத்திலாவது உயிரை விடுவேன். ராமனிடம் நான் வணங்கி நிற்க மாட்டேன்' என்று ராவணன் தீர்மானமாகச் சொல்லி விட்டான். அம்மையே! உனக்கு ஓர் அபாயமும் இல்லை. ராமன் வெல்வான். இந்தக் கொடியவன் மாள்வான்'' என்றாள்.

இப்படி ஸரமை சொன்ன சமயத்தில் திடீரென்று வானர சேனையின் பேரிகைகளும் சங்கங்களும் ஒலிக்கும் சத்தம் கிளம்பிற்று.

ராவணன் அழிந்தான் என்று சீதை நிச்சயம் செய்து கொண்டு மகிழ்ந்தாள். லங்கையில் அதே சமயம் அந்தப் பெருஞ் சத்தத்தைக் கேட்ட அரக்கர்கள் பயத்தால் நடுங்கினார்கள். (தொடரும்)



**லாக் - அவுட் அங்கு இல்லை!**

ட்வா விமானக் கம்பெனி அடைந்த நஷ்டத்தை ஈடு செய்ய அதன் விமானிகள் மாதம் 25 டாலர் கம்பெனிக்குக் கொடுக்கப் போகிறார்களாம்!

பாலி - தீம்மத்




சென்ற 5-4-71ல் எங்களது சொந்தக் கிராமமான இடையாத்துமங்கலத்துக்குச் சென்றிருந்தேன். அங்கு நடைபெற்ற ஒரு சம்பவத்தை எழுதவே கை கூசுகிறது. அன்று அங்கு பிராமணர் குடியிருக்கும் தெருவில் இராமர் படத்தைச் செருப்பால் அடிக்கும் 'விழா' நடைபெற்றது. இச்சம்பவத்தை நான் கண்ணால் காண விரும்பாவிடினும் மைக் மூலமாக ஒருவர் கொடுத்த நேர்முக வர்ணனை, அங்கு நடந்தவற்றை எனக்கு உணர்த்திற்று. பலர் ''ஒழிக'' கோஷத்துடன் இராமர் படத்தைச் செருப்பால் அடிக்கும் ஓசையை மிக்க துயரத்துடன் கேட்டோம். இது போன்ற சம்பவங்கள் தேச ஒற்றுமைக்கு நிச்சயம் வழிவகுக்கப் போவதில்லை.

இது போன்று பல இடங்களில் திராவிட கழகத்தினர் நடத்த உத்தேசித்திருப்பதாயும் பல இடங்களில் இது போன்ற சம்பவங்கள் நடைபெறுவதாகவும் அன்று அவர்கள் பேசிய பேச்சிலிருந்து அறிகிறோம்.

தமிழக அரசு எந்த அளவுக்கு நிர்வாகத் துறையில் கடமை உணர்வுடனும், பொறுப்புடனும் நடக்கிறது என்பதற்கு இந்த ஒரு சான்றே போதும்.

திருச்சி,
6-4-71 அ. மாதவன்

சில மாதங்களாகக் கரூர், மணப்பாறை ஆகிய பகுதிகளிலும், சுற்றுப்புறங்களிலும், அம்மை நோய் வேகமாகப் பரவி வருகிறது. அரசாங்கம் அம்மை நோய் பரவுவதைத் தடுக்க ஆவன செய்ய வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

கரூர்
25-3-71 எஸ். ஜெயராமன்

சேலம் நகராட்சி ஏப்ரல் முதல் தேதி முதல் ஹிந்து, எக்ஸ்பிரஸ், தினமணி போன்ற நாளிதழ்களையும், ஸ்வராஜ்யா, கல்கி, ஆனந்தவிகடன் போன்ற வார இதழ்களையும் நிறுத்திவிடத் தீர்மானித்திருப்பதாக 'ஹிந்து' பத்திரிகையில் 26-3-71 அன்று ஒரு செய்தி வெளியாகியிருக்கிறது. மொத்த அங்கத்தினர்களில் பத்துப் பேர் இதை ஆட்சேபித்து வெளி நடப்புச் செய்தும், மேற்படி தீர்மானத்தை நகராட்சி நிறைவேற்றியிருக்கிறது.

நிதி நிலைமைதான் மேற்படி முடிவுக்குக் காரணம் என்பது ஒரு கண் துடைப்பு. ஆளும் கட்சியை மேற்படி பத்திரிகைகள் தேர்தலின்

★ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

போது ஆதரிக்காததால்தான், அப் பத்திரிகைகளை நிறுத்த முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இதனால் அப்பத்திரிகைகளுக்கு நஷ்டம் ஏதுமில்லை. ஜனநாயகத்துக்குத்தான் நஷ்டம்.

மேடைதோறும் தாங்கள் ஜனநாயகவாதிகள் என்று முழங்குவதோடு நில்லாமல் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் இவ்விஷயத்தில் உடனே தலையிட்டு, சேலம் நகராட்சியின் முடிவை மாற்றுவதன் மூலம் கண்ணியத்தைக் காக்க முற்பட வேண்டும்.

சென்னை.
27-3-71 ரா. ஜெயராமன்

★ அமெரிக்காவில்! நமது ரூர்கேலா போன்ற எஃகு ஆலையில் சுமார் ஆறுயிரம் பேர்கள்தான் வேலையில் இருப்பார்களாம். ரூர்கேலாவில் எத்தனை பேர் வேலை பார்க்கிறார்கள் தெரியுமா? 19,000 பேர்கள்!

சிந்திரி உரத் தொழிற்சாலையில் வேலை பார்க்கிறவர்கள் எண்ணிக்கை 9,000. அமெரிக்காவில் இதே போன்ற ஒரு தொழிற்சாலையில் ஆயிரம் பேர்கள்தான் இருப்பார்களாம். நமது பொதுத் துறை நிறுவனங்கள் ஏன் நஷ்டத்தில் நடக்கின்றன என்பது புரிகிறதா?

பத்து லட்ச ரூபாய் விலையுள்ள சில இயந்திரங்களை ஹிந்துஸ்தான் ஸ்டீல் இறக்குமதி செய்தது. பல ஆண்டுகளாக அவை உபயோகிக்கப்படாமல் இருந்ததால் வீணாயின. பிறகு இன்னொரு ஒன்பது லட்சம் ரூபாய் செலவில் அவற்றைப் பழுதுபார்த்து உபயோகத்துக்குக் கொண்டு வந்தார்களாம்!

3500 கோடி ரூபாய்களுக்கு மேல் விழுங்கியிருக்கும் நமது பொதுத் துறை நிறுவனங்கள் லாபம் அளிக்காவிட்டாலும் நஷ்டம் இல்லாமல் இருக்கக் கூடாதா? 1970 முதல் அரை ஆண்டில் இந்த நிறுவனங்களின் நஷ்டக் கணக்கு 41 கோடி ரூபாய்!

கல்கத்தா போக்குவரத்து கார்ப்பரேஷன் தொடர்ந்து பத்து ஆண்டுகளாக நஷ்டத்தில் நடந்து வருகிறது. மொத்த பஸ்களில் சுமார் நாற்பது சதவிகித பஸ்களே அங்கே ஓடுகின்றன. மற்றவை யாவும் ரிப்பேர்! இதற்கு முக்கிய காரணம் என்ன தெரியுமா? விலை உயர்ந்த ஸ்பேர் பார்ட்ஸ்களை யெல்லாம் சோஷலிஸ மனம் கொண்ட அதன் ஊழியர்கள் திருடிச் சென்று விடுகிறார்களாம்!

கேரள மீன்கள் கார்ப்பரேஷன் ஓர் அரசாங்க நிறுவனம். இதன் முதலீடு 45 லட்சம் ரூபாய். இதுவரை அடைந்துள்ள நஷ்டம் 35 லட்சம் ரூபாய்! எப்படி?

ஸ்ரீநகரில் உள்ள அரசாங்கப் பட்டுத் தொழிற்சாலையின் கதை என்ன?

1947ல் 105 லட்சம் பவுண்டு பட்டு உற்பத்தி 1967ல் 67 லட்சம் பவுண்டாகக் குறைந்திருக்கிறது! இந்த இடைக்காலத்தில் ஊழியர்கள் எண்ணிக்கை 1996லிருந்து 2036 ஆக உயர்ந்திருக்கிறது!

இவற்றையெல்லாம் பற்றி நமது சோஷலிஸ அரசியல்வாதிகள் வாயைத் திறக்க மாட்டார்கள்!

சென்னை-21
6-4-71 நாகலட்சுமி ராமச்சந்திரன்

இருபத்தொன்பதாம் அத்தியாயம்

## சந்தேக விபரீதம்

**பொ**ன்னியின் செல்வர் அரண்மனைக்கு உள்ளே சென்றபிறகு, காவாந்தக கண்டர் அரண்மனை வாசலில் வந்து சேர்ந்து கொண்டிருந்த வேளக்காரப் படை வீரர்களை நெருங்கினர்.

"இது என்ன கூச்சல்? அரண்மனைக்குள்ளே சக்கரவர்த்தி நோயுடன் படுத்திருப்பது உங்களுக்குத் தெரியாதா? கோட்டையைச் சுற்றிப் பகைவர் படை டையை முற்றுகை யிட்டிருக்கிறார்?" என்று கேட்டார்.

"சின்ன இளவரசரைச் சிம்மாசனத்தில் ஏற்றி முடிசூட்டுவதற்காக என்று கேள்விப்படுகிறோம்" என்றான் வேளக்காரப் படைத் தலைவன்.

"அது உங்களுக்கெல்லாம் சம்மதமா?" என்று சின்னப் பழுவேட்டரையர் கேட்டார்.




சூழ்ந்திருப்பது தெரியாதா?" என்று கடுமை தொனிக்கும் குரலில் கேட்டார்.

வேளக்காரப் படையின் தலைவன், "ஐயா! கோட்டையைச் சூழ்ந்திருப்பவர்கள் பகைவர்கள்தானா? கொடும்பாளூர்ப் பெரிய வேளார் நமக்குப் பகைவர் ஆனது எப்படி?" என்று கேட்டான்.

சின்னப் பழுவேட்டரையர் பொங்கி வந்த கோபத்தை அடக்கிக் கொண்டு, "அதை அவரிடந்தான் கேட்க வேண்டும்! பகைவர் இல்லையென்றால், எதற்காகச் சைன்யத்துடன் வந்து கோட்

வேளக்காரப் படைத் தலைவன் தன் வீரர்களைத் திரும்பிப் பார்த்து, "நீங்களே சொல்லுங்கள்!" என்றான்.

வீரர்கள் உடனே, "சம்மதம்! சம்மதம்! பொன்னியின் செல்வர் வாழ்க! ஈழங் கொண்ட இளவரசர் வாழ்க!" என்று கோஷித்தார்கள்.

இம்முறை அந்தக் கோஷம் முன்னை விட அதிக வலுவுடையதாயிருந்தது.

சின்னப் பழுவேட்டரையரின் முகம் சிவந்தது. மீசை துடித்தது. ஆயினும் பல்லைக் கடித்துக் கொண்டு, "முடி

சூட்டுவது பெரிய வேளாரின் இஷ்டத்தைப் பொறுத்ததா? அல்லது உங்கள் விருப்பத்தைப் பொறுத்ததா? சக்கரவர்த்தியின் விருப்பத்துக்கு மதிப்பு ஒன்றும் இல்லையா?'' என்று கேட்டார்.

வீரர்களில் ஒருவன், ''தளபதி! சக்கரவர்த்தி சௌக்கியமாயிருக்கிறாரா! நிச்சயந்தானா?'' என்று கேட்டான்.

''இது என்ன கேள்வி?'' என்று காலாந்தகர் சீறினார்.

'' சக்கரவர்த்தியைப் பற்றி ஊரில் ஏதேதோ வதந்தி பரவியிருக்கிறது. நாங்களும் அவரை இன்று பார்க்க முடியவில்லை! அதனால் அவருடைய சுகத்தைப் பற்றி எல்லாரும் மிக்க கவலை அடைந்திருக்கிறோம்!'' என்று வேளக்காரப் படை வீரர்களின் தலைவன் கூறினான்.

''சக்கரவர்த்தியை நீங்கள் பார்க்க முடியாத காரணம் முன்னமே நான் சொல்லவில்லையா? சக்கரவர்த்தியின் மனக் குழப்பம் இன்று அதிகமாயிருந்தது. யாரையும் பார்ப்பதற்கு அவர் விரும்பவில்லை. சபா மண்டபத்துக்கு வருவதற்கும் மறுத்து விட்டார்....''

''சக்கரவர்த்தியின் மனக் குழப்பத்துக்குக் காரணம் என்ன? ஏன் எங்களுக்குத் தரிசனம் அளிப்பதற்கும் மறுக்க வேண்டும்? நாங்கள் அதையாவது தெரிந்துகொள்ளலாம் அல்லவா?''

''நல்லது; சொல்லுகிறேன். ஈழத்துக்குச் சென்றிருந்த இளவரசரைப் பற்றி ஒன்றும் தெரியாமல் இருந்தது தான் சக்கரவர்த்தியின் கவலை அதிகமானதற்குக் காரணம். இப்போது இளவரசரே வந்துவிட்டபடியால்....''

'' இளவரசரை நாங்கள் பார்க்க வேண்டும். நன்றாக வெளிச்சத்தில் பார்க்க வேண்டும்!'' என்று அந்தப் படையினரில் ஒரு வீரன் கூறினான்.

''ஆமாம்; பார்க்க வேண்டும்! ஈழங்கொண்ட இளவரசர் வாழ்க!'' என்று எல்லாரும் சேர்ந்து கூவினார்கள்.

''இளவரசர் முதலில் சக்கரவர்த்தியைத் தரிசிக்க வேண்டும் அல்லவா? பிறகு இஷ்டப்பட்டால் உங்களையும் வந்து பார்ப்பார் !''

''நிச்சயந்தானா? ஒரு வேளை பாதாளச் சிறைக்கு அனுப்பப்படுவாரா?''

**வே**றொரு நாளாக, வேறொரு சந்தர்ப்பமாக இருந்தால், வேளக்காரப் படையினர் இவ்வளவு துடுக்காகப் பேசியதற்குச் சின்னப் பழுவேட்டரையரின் வீரர்கள் அவர்கள் மீது போர் தொடுத்திருப்பார்கள்; பெரிய ரகளையாகப் போயிருக்கும். ஆனால் இளவரசரின் திருமுகத்தைச் சற்றுமுன் பார்த்த காரணத்தினாலோ, என்னவோ, காலாந்தக கண்டரின் வீரர்களும் மௌனமாக நின்றுகொண்டிருந்தார்கள்.

சின்னப் பழுவேட்டரையருடைய கை அவருடைய உடை வாளை நாடியது. மேற்கண்டவாறு கேட்ட வீரனை ஒரே வெட்டில் வெட்டிக் கொன்றுவிட வேண்டுமென்று ஒருகணம் எண்ணினார். உடனே அந்தக் கோபத்தைச் சமாளித்துக் கொண்டு உரத்துச் சிரித்தார்.

''இவன் கேட்ட கேள்வி உங்கள் காதிலெல்லாம் விழுந்ததல்லவா? இளவரசர் பாதாளச் சிறைக்கு அனுப்பப்படுவாரா என்று கேட்கிறான். நல்லது; இளவரசரைச் சிங்காதனத்தில் ஏற்றி முடிசூட்டுவதோ, பாதாளச் சிறைக்கு அனுப்புவதோ என்னுடைய அதிகாரத்தில் இல்லை. சக்கரவர்த்தியின் விருப்பத்தின்படி நடக்கும். இளவரசரைப் பாதாளச் சிறைக்குக் கொண்டு போவதாயிருந்தாலும், இந்த வழியே தான் கொண்டு போக வேண்டும். அப்போது நீங்கள் அவரைப் பார்த்துக் கொள்ளலாம்!'' என்று காலாந்தக கண்டர் கண்களில் கனல் பறக்கக் கூறிவிட்டு, அரண்மனைப் பக்கம் திரும்பினார். வீரர்கள் மீண்டும் கோஷமிட்டதையும் பொருட்படுத்தாமல் அரண்மனை முன் வாசலை நோக்கிச் சென்றார்.

அங்கே வாசற்படிக்கு அருகில் பூங்குழலி தன்னந் தனியாக நின்றுகொண்டிருப்பதைக் கண்டார்.

''பெண்ணே! நீ ஏன் இங்கே நின்று கொண்டிருக்கிறாய்? உன்னை உள்ளே வர வேண்டாம் என்று தடுத்துவிட்டார்களா?'' என்று கேட்டார்.

''என்னை யாரும் தடுக்கவில்லை; நானாகவே நின்று விட்டேன், ஐயா!'' என்றாள் பூங்குழலி.

''ஏன்?''

''வெகு நாட்களாகப் பிரிந்திருந்த தந்தையும் மகனும் சந்திக்கும் வேளையில் எனக்கு என்ன அங்கே வேலை?''

''போகட்டும்; நீயாவது சக்கரவர்த்தி உயிரோடு இருக்கிறார் என்று நம்புகிறாயே? அந்தமட்டில் சந்தோஷம்!''

'' நம்புவது மட்டுமில்லை. சக்கரவர்த்தி சௌக்கியமாயிருப்பதைக் கண்ணாலேயே பார்த்து விட்டுத்தான் திரும்பி வந்தேன்.''

'' அதோ நிற்கிறார்களே, அந்த வேளக்காரப் படையாரிடம் நீ பார்த்ததைச் சொல்! அவர்கள் சந்தேகப்படுவதாகத் தோன்றுகிறது!'' என்றார்.

'' அவர்களுடைய சந்தேகத்துக்கு இந்த நிமிஷம் வரையில் ஆதாரம்

இல்லை. அடுத்த நிமிஷம் அது உண்மையாகாது என்று யார் சொல்லமுடியும்?''

''பெண்ணே! நீயும் சேர்ந்து என்னைக் கலவரப்படுத்தப் பார்க்கிறாயா? உங்கள் எல்லாருக்கும் பைத்தியம் பிடித்து விட்டதா?'' என்று கேட்டார்.

''தளபதி! என்னைப் பலர் 'பைத்தியம்' என்று சொல்லுவதுண்டு. நானே என்னைப் பைத்தியம் என்று சொல்லிக் கொள்வதும் உண்டு. ஆனால் இந்தப் பைத்தியத்தின் யோசனையைக் கேட்டபடியினால்தான் இன்று இளவரசர் இந்தக் கோட்டைக்குள் அபாயம் இன்றிப் புக முடிந்தது. சக்கரவர்த்தி உயிரோடிருக்கும் போதே அவரைச் சந்திக்கவும் முடிந்தது....''

''ஆகா! இது என்ன? சக்கரவர்த்தியின் உயிருக்கு நீயும் கெடு வைக்கிறாய் போலிருக்கிறதே! மூட ஜனங்களும் முட்டாள் ஜோசியர்களும் உளறுவதைக் கேட்டு நீயும் பிதற்றுகிறாயா? அல்லது உனக்கு வேறு ஏதேனும் தெரியுமா?''

''ஜனங்களும் ஜோதிடர்களும் மட்டுந்தானா கெடு வைக்கிறார்கள்? தங்கள் தமையனார் சொல்லி அனுப்பிய செய்தியைச் சற்றுமுன் கேட்டீர்களே?''

''அது உண்மை என்பது என்ன நிச்சயம்?'' என்றார் காலாந்தக கண்டர்.

''தளபதி! கொடும்பாளூர் இளவரசி எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்?''

''யார் கண்டது? அடுத்தாற் போல் சிங்காதனம் ஏறிப் பட்டமகிஷியாகும் ஆசையிருக்கலாம்....''

''தளபதி! நானும் அப்படித்தான் எண்ணியிருந்தேன். இளவரசி இன்று காலையில் செய்த சபதத்தைக் கேட்ட பிறகு என் எண்ணத்தை மாற்றிக் கொண்டேன்'' என்றாள் பூங்குழலி.

''பெண்ணே! ஒரு வேளை உனக்கே அத்தகைய ஆசை இருக்கிறதா, என்ன?'' என்று கேட்டுவிட்டுச் சின்னப் பழுவேட்டரையர் இலேசாக நகைத்தார்.

''தளபதி! உண்மையில் நான் பைத்தியக்காரிதான்! தங்களிடம் பேச நின்றேன் அல்லவா?'' என்று கூறிவிட்டுப் பூங்குழலி திரும்பிப் போக யத்தனித்தாள்.

காலாந்தக கண்டரிடம் உடனே ஒரு மாறுதல் காணப்பட்டது.

''பெண்ணே! கோபித்துக் கொள்ளாதே! நீ சொல்ல வந்ததைச் சொல்லிவிட்டுப் போ!'' என்றார்.

பூங்குழலி மறுபடியும் திரும்பி, ''ஆம்; சொல்லத்தான் வேண்டும். இல்லாவிடில் பின்னால் நானும் வருத்தப்படுவேன்; தாங்களும் வருந்தும்படி நேரிடும். ஐயா! சக்கரவர்த்தியின் உயிருக்கு ஏதாவது அபாயம் நேர்ந்தால் நாடு நகரமெல்லாம் தங்கள் பேரிலே தான் பழி சொல்லும். தங்களுடைய வீரர்களேகூடச் சொல்லுவார்கள்!'' என்றாள்.

சின்னப் பழுவேட்டரையரின் முகம் கருங்கிற்று. ''அப்படி ஏதாவது நேர்ந்து விட்டால் மற்றவர்கள் பழி சொல்லும் வரையில் காத்திருக்கமாட்டேன். பழிச் சொல் காதில் விழுவதற்குள்ளே என் உயிர் பிரிந்து விடும்! இந்த வேளக்காரப் படையினர் துர்க்கா பரமேசுவரி கோயிலில் சத்தியம் செய்த போது, எல்லாருக்கும் முதலில் சத்தியம் செய்து வழிகாட்டியவன் நான்!'' என்றார்.

''அதில் என்ன பயன்? சோழ ராஜ்யம் சக்கரவர்த்தியையும் இழந்து ஒரு மகாவீரரையும் இழந்து விடும்! அதைக் காட்டிலும் முன் ஜாக்கிரதையாக இருப்பது நல்லதல்லவா?''

''பெண்ணே! நான் முன்ஜாக்கிரதையாக இல்லை என்றா சொல்லுகிறாய்? இதோ இந்த அரண்மனையைச் சுற்றி இவ்வளவு வீரர்கள் கண் கொட்டாமல் நின்று காத்து வருகிறார்களே! எதற்காக? முதன் மந்திரி அநிருத்தர்கூட நான் அறியாமல் அரண்மனைக்குள்ளே போக முடியாது! தெரியுமா?''

''தெரியும், தளபதி! ஆனால் அரண்மனைக்குள்ளேயிருந்தும் அபாயம் வரலாம் அல்லவா?''

''என்ன பிதற்றல்? அரண்மனைப் பெண்கள் சக்கரவர்த்திக்கு விஷங் கொடுத்துக் கொன்று விடுவார்கள் என்று சொல்லுகிறாயா?... அல்லது ஒரு வேளை இப்போது இளவரசருடன் உள்ளே போனாளே, அந்தக் கொடும்பாளூர்ப் பெண்ணின் பேரில் சந்தேகப் படுகிறாயா?'' என்றார்.

''தெய்வமே! அந்தச் சாதுப் பெண்ணின் பேரில் சந்தேகப்படுகிறவர்களுக்கு நல்ல கதி கிடைக்காது. அவளுக்கு அவ்வளவு சாமர்த்தியமும் இல்லை. ஐயா! இந்த அரண்மனைக்குள் வருவதற்குச் சுரங்கப் பாதை ஒன்று இருக்கிறதல்லவா?....''

சின்னப் பழுவேட்டரையர் திடுக்கிட்டு, ''பெண்ணே! அதைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? எப்படித் தெரியும்? மூன்று நாலு பேரைத் தவிர அந்தப் பாதையைப் பற்றி யாருக்கும் தெரியாதே? தெரிந்தவர்கள் உயிரோடு திரும்பிப் போக முடியாதே?'' என்று பரபரப்புடன் கேட்டார்.

'' தளபதி ! அதைப் பற்றி இன்று அதிகாலையிலேதான் நான் தெரிந்து கொண்டேன். அங்கே கையில் கூரிய எறி வேலுடன் பாண்டிய நாட்டுச் சதிகாரன் ஒருவன் ஒளிந்து கொண்டிருப்பதையும் பார்த்தேன்....''

''கடவுளே! இது என்ன பயங்கரமான வார்த்தை சொல்லுகிறாய்? அந்தப் பாதை... அந்தப் பாதை... எங்கே போய் முடிகிறது என்று தெரியுமா?''

'' பொக்கிஷ நிலவறை வழியாகப் போகிறது!'' என்றாள் பூங்குழலி.

''ஆகா! நீ சொல்வது உண்மையாக இருக்கலாம். மனிதப் பெண் உருக் கொண்ட அந்த மாய மோகினியின் வேலைதான் இது! என் தமையனை அடிமை கொண்ட பெண் பேயின் வேலைதான் இது. ஐயோ! எத்தனை தடவை நான் எச்சரித்தேன்? பெண்ணே! நீ சொல்வது சத்தியமா? நீயே பார்த்தாயா? அந்தப் பாதை இருக்குமிடம் உனக்கு எப்படித் தெரிந்தது?....''

''என் அத்தை இன்று காலையில் அழைத்துப் போனபோது தெரிந்தது.''

''அவள் யார் உன் அத்தை?''

''முதன் மந்திரியின் கட்டளையின் பேரில் தாங்கள் அனுப்பிய பல்லக்கில் கோடிக்கரையிலிருந்து கொண்டு வரப்பட்டவள்தான், ஐயா! நாம் இதைப் பற்றி மேலும் இங்கே பேசிக் கொண்டே இருக்கும்போது....''

'' உண்மைதான் ! நான் உடனே பெரிய பழுவூர் அரண்மனைக்குப் போய் வேண்டிய ஏற்பாடு செய்துவிட்டு வருகிறேன். அதற்குள் நீ....''

''நான் இந்தப் பக்கத்து முனையில் நின்று பார்த்துக் கொள்கிறேன்....''

''ஆகா! உன்னை நான் எப்படி நம்புவது? நீ அந்தப் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களுக்கு உடந்தையானவள் இல்லை என்பது என்ன நிச்சயம் ? என்னைப் போக்குக் காட்டி ஏமாற்றிவிட்டு....''

''தளபதி! அப்படியானால் என்னுடன் தாங்களும் வாருங்கள்! ஒரு தீவர்த்தி எடுத்துக் கொண்டு வாருங்கள்! இரண்டு பேருமாகப் போய்ப் பார்ப்போம் ! போகும்போது எனக்குத் தெரிந்த மற்ற விவரங்களையும் சொல்கிறேன்....''

சின்னப் பழுவேட்டரையர் உடனே வாசற் பக்கம் சென்று தமது வீரர்களில் சிலரை அழைத்து அவர்களிடம் ஏதோ சொன்னார். அவர்கள் பழுவூர் அரண்மனைக்குப் போகிறார்கள் என்று பூங்குழலி ஊகித்துக் கொண்டாள். வீரர்களில் ஒருவன் கையில் பிடித்திருந்த தீவர்த்தியைக் கோட்டைத் தளபதி வாங்கிக் கொண்டு வந்தார்.

''பெண்ணே ! வழி காட்டிச் செல்! நீ சொன்னதெல்லாம் உண்மைதானா என்று பார்த்து விடுகிறேன்'' என்றார் காலாந்தக கண்டர்.

அப்போதும் அவர் மனத்தில் பூங்குழலியைப் பற்றிச் சந்தேகம் தீரவில்லை. இந்தப் பெண் பொய்யும் புனைசுருட்டும் சொல்லித் தன்னை ஏமாற்றப் பார்க்கிறாளோ, என்னமோ? சுரங்கப் பாதையைப் பற்றித் தன் மூலமாக அறிந்து கொள்ள விரும்புகிறாளோ, என்னமோ? அதன் வழியாகக் கொடும்பாளூர் ஆள்களைக் கோட்டைக்குள் விடுவதற்கு இது ஒரு சூழ்ச்சியோ, என்னமோ!... அப்படியெல்லாம் தன்னை எளிதில் ஏமாற்றிவிட முடியாது. இவள் அத்தகைய உத்தேசத்துடன் தன்னை அழைத்துப் போனால் இவளுக்குச் சரியான தண்டனை விதிக்க வேண்டும். பெரிய பழுவேட்டரையரைப் போல் நான்கூட ஏமாந்து விடுவேனா, என்ன? எல்லாவற்றுக்கும் இவள் முன்னால் போகட்டும். சுரங்கப் பாதை இவளுக்குத் தெரியும் என்பது உண்மைதானா என்று முதலில் தெரிந்து கொள்ளலாம். பிறகு அங்கே சதிகாரர்கள் ஒளிந்திருப்பது உண்மைதானா என்று அறியலாம். அது உண்மையாயிருந்தால், கடவுளே! எத்தகைய ஆபத்து! நல்ல வேளையாக அதைத் தடுப்பதில் கஷ்டம் ஒன்றுமில்லை. பொந்தில் ஒளிந்திருக்கும் நரியைப் பிடிப்பது போல் பிடித்துக் கொன்று விடலாம்!....

இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டு சின்னப் பழுவேட்டரையர் பூங்குழலிக்குப் பின்னால் நடந்தார். அவளுடைய நடையில் இருந்த வேகத்தைக் குறித்து அதிசயப்பட்டார்.

''ஆம்; பூங்குழலியின் உள்ளப் பரபரப்பு அப்போது உச்ச நிலையை அடைந்திருந்தது. அதற்குத் தகுந்தாற்போல் அவளுடைய நடையும் துரிதமாயிருந்தது.

பூங்குழலியின் வாழ்க்கையில் சில காலமாகவே அபூர்வமான சம்பவங்கள் நடந்து கொண்டிருந்தன. ஆனால் அன்றைக்கு நிகழ்ந்தவை போல் அதற்கு முன் என்றும் நடந்ததில்லை.

அதிகாலையில் அவளைத் தூக்கத்திலிருந்து அத்தை தொட்டு எழுப்பினாள். அவர்கள் படுத்திருந்த அந்தப்புரத்தின் மேல் மச்சுப் பலகணியில் கோரமான முகம் ஒன்று தெரிந்தது. உடனே அது மறைந்தது. மந்தாகினி சத்தம் செய்யா

மல் எழுந்து பூங்குழலியையும் அழைத்துக் கொண்டு மூடிக் கிடந்த சிற்ப மண்டபத்துக்குள்ளே சென்றாள். மேல் மச்சுப் பலகணியில் பார்த்த அதே பயங்கரமான முகம் இராவணனுடைய தலைகளுக்கும் அவன் கைகளினால் தாங்கிக் கொண்டிருந்த கைலையங்கிரிக்கும் நடுவில் ஒரு கணம் தெரிந்து மறைந்தது.

இருவரும் அச்சிலையின் அருகில் சென்று பார்த்தார்கள். இராவணன் தலைகளுக்கு இடையே சுரங்க வழி ஒன்று ஆரம்பமாகிச் செல்கிறது என்று பூங்குழலி அறிந்தாள். மந்தாகினி முதலிலும் பூங்குழலி அவளைத் தொடர்ந்தும் அச்சுரங்கப் பாதையில் இறங்கிச் சென்றார்கள். பூங்குழலிக்கு முதலில் கண்ணே தெரியவில்லை. அத்தகைய அந்தகாரம் சுரங்கப் பாதையில் குடிகொண்டிருந்தது. அத்தையின் கையைப் பிடித்துக் கொண்டு தட்டுத் தடுமாறித்தான் போனாள். பாதையிலிருந்து சில படிகள் ஏறி, ஒரு மண்டபத்துக்குள் இருவரும் வந்துவிட்டதாகத் தோன்றியது. அங்கேயும் இருளடர்ந்துதானிருந்தது. கையினால் தடவிப் பார்த்துக் கொண்டு தூண்களிலும் சுவர்களிலும் முட்டிக் கொள்ளாமல் போவதே கஷ்டமாயிருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் மேலே எங்கிருந்தோ சிறிய பலகணிகளின் வழியாகச் சொற்ப வெளிச்சம் வரத்தொடங்கியது. பொழுது நன்றாய்ப் புலர்ந்திருக்க வேண்டும் என்று பூங்குழலி ஊகித்தாள். அத்துடன் அவர்கள் சுற்றி அலைந்து கொண்டிருப்பது பொக்கிஷ நிலவறை என்பதையும் தெரிந்து கொண்டாள். ஆனால் மந்தாகினி அத்தை எந்த மனிதனைத் தேடிக் கொண்டு வந்தாளோ, அவன் அகப்படுவான் என்று தோன்றவில்லை. இருள் சூழ்ந்த அந்த நிலவறையில் ஒளிந்துகொள்வதற்கு எத்தனையோ இடங்கள். அவன் எங்கே ஒளிந்திருக்கிறானோ, என்னமோ? நாம் அவனைக் கண்டுபிடிப்பதற்கு முன்னால், அவன் நம்மைக் கண்டுபிடித்துப் பின்புறமாக வந்து குத்திக் கொன்றாலும் கொன்று விடலாம்; இந்த நிலவறையில் கேள்வி முறை ஒன்றும் இராது.

பூங்குழலி இப்படி எண்ணமிட்டுக் கொண்டிருந்த போது மந்தாகினி அவளுடைய அபூர்வமான குரலில், — மானிடக் குரல் என்றோ, பிராணியின் குரல் என்றோ கண்டுபிடிக்க முடியாத குரலில், — கூச்சலிட்டாள். அதைத் தொடர்ந்து பீதி நிறைந்த ஒரு மனிதக் குரல் ஓலமிட்டது. நிழல் போன்ற உருவம் ஒன்று தட தட வென்று ஓடியது. பலகணியில் முகத்தைக் காட்டிய மனிதனாகத்தான் இருக்க வேண்டும் என்று பூங்குழலி தீர்மானித்துக் கொண்டாள். அத்தையின் குரலைக் கேட்டு அவன் பேயோ, பிசாசோ என்று பயந்து ஓடுகிறான் என்று பூங்குழலி அறிந்தாள். இந்த எண்ணம் அவளுக்குச் சிரிப்பை உண்டாக்கியது. சிறிது நேரத்துக்கு ஒரு முறை மீண்டும் மீண்டும் மந்தாகினி அத்தை அம்மாதிரி குரல் கொடுத்து அம்மனிதனை அங்குமிங்கும் தெறி கெட்டு ஓடி அலையும்படி செய்தாள். கடைசியாக அவன் ஓடிப் போய் மரக் கதவு ஒன்றின்மேல் மோதிக் கொண்டான். பிறகு, அக்கதவைத் தடதடவென்று தட்டினான். விட்டு விட்டு நாலைந்து தடவை தட்டினான். பின்னர் கதவு திறந்தது. திறந்த இடத்தில் பெண் ஒருத்தி நிற்பது தெரிந்தது. அவளிடம் அம்மனிதன் ஏதோ கூறினான். அந்தப் பெண் சிறிது தயங்கியதாகவும், அம்மனிதன் அவளைப் பயமுறுத்தியதாகவும் தோன்றியது. பிறகு அவள் திரும்பிப் போனாள். மனிதன் கதவின் அருகிலேயே நின்று எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான்.




புளோரிடாவிலுள்ள கிரேக்க வலைஞர்களுக்கு விநோதப் பழக்கமும் நம்பிக்கையும் உண்டு. மீன் பிடிப்பவர்கள் செவ்வாய்க்கிழமையில் கடலில் மீன் பிடிக்கப் போக மாட்டார்கள். செவ்வாய்க்கிழமையில் எந்தக் காரியமும் தொடங்குவது அபசகுனம் என்பது அவர்கள் நம்பிக்கை. மீன் பிடிப்பவர்கள் புயலைக் கண்டு விட்டால் படகில் பாய்மரக் கம்பத்தின் உச்சியில் சிலுவையைப் பொறித்து ஒரு கத்தியையும் தொங்க விடுவார்கள். இப்படிச் செய்தால் புயலின் உக்கிரம் குறைந்து விடும் என்று நம்புகிறார்கள். கடும் புயலைப் பொருட்படுத்தாது பாய்மரக் கம்பத்தில் ஏறி இக்காரியத்தைச் செய்பவர் ஏதோ ஒரு பாபத்தைச் செய்ததாகக் கருதிப் பிறகு அதற்காகக் கடும் விரதத்தையும் அனுஷ்டிப்பார். ஆனால் கடும் புயலிலே அந்த ஆபத்தான செயலில் ஈடுபடக் கிரேக்க வலைஞர் யாராயினும் சற்றும் தயங்காமல் உறுதியாக முன் வந்து விடுகிறார்.

- பி. என். எம்.

சற்றுநேரத்துக்கெல்லாம் அந்தப் பெண் கையில் ஒரு விளக்குடன் வந்து சேர்ந்தாள். இருவரும் நிலவறைக்குள் நுழைந்தார்கள். மந்தாகினி பூங்குழலியையும் கையைப் பிடித்து அழைத்துச் சென்று ஒரு பெரிய தூணின் மறைவில் நின்று கொண்டாள். விளக்கு வெளிச்சத்தில் அந்த மனிதனுடைய முகத் தோற்றத்தை அவர்கள் நன்றாகப் பார்த்துக் கொண்டார்கள்.

அந்த மனிதனும் விளக்குக் கொண்டு வந்த பெண்ணும் நிலவறையின் உட்பகுதிக்குச் சென்றார்கள்.

''பேயாவது? பிசாசாவது? நன்றாகப் பீதி அடைந்து போயிருக்கிறாய்! இவ்வளவு பயந்தவன் இந்த மாதிரி காரியத்துக்கு ஏன் வர வேண்டும்?'' என்று அந்தப் பெண் கேட்டது பூங்குழலியின் காதில் நன்றாக விழுந்தது. 'எந்த மாதிரி காரியம்' என்பது அவ்வளவு நன்றாகப் பூங்குழலிக்கு விளங்கவில்லை.

நிலவறைக்குள்ளே விளக்குடன் அவர்கள் மறைந்ததும் மந்தாகினி பூங்குழலியைக் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக் கொண்டு போய்த் திறந்திருந்த கதவின் வழியாக வெளியேறினாள். நடைபாதையைக் குறுக்கே நடந்து கடந்து ஒரு பெரிய தோட்டத்துக்குள் அவர்கள் பிரவேசித்தார்கள். அங்கே ஏகாந்தமான ஓரிடத்தில் மந்தாகினி பூங்குழலியிடம் தான் சொல்ல வேண்டியதைச் சமிக்ஞை பாஷையினால் தெரிவித்தாள். ''என்னுடைய அந்திய காலம் நெருங்கி விட்டது. நான் கடைசியாகக் கண்ணை மூடுவதற்குள்ளே இளவரசனை ஒரு முறை பார்க்க வேண்டும். நீ போய் இச்செய்தியைச் சொல்லி அவனைக் கையோடு அழைத்து வரவேண்டும்'' என்பதுதான் அச்செய்தி.

பூங்குழலி அவளுடைய அத்தையிடம் கொண்டிருந்த அன்பு நாம் நன்கு அறிந்ததே. இம்மாதிரி சமயத்தில் அவளை விட்டு விட்டுப் போகவும் பூங்குழலிக்கு மனம் வரவில்லை; அவள் வார்த்தையைத் தட்டவும் இயலவில்லை. எனினும், அதே சமயத்தில் பொன்னியின் செல்வரைப் பார்ப்பதற்கு இது ஒரு சந்தர்ப்பம் என்னும் எண்ணம் அவளை உடனே முடிவுக்கு வரும்படி செய்தது. அத்தையிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றாள். தோட்டத்தின் மதில் ஏறிக் குதித்து அப்பால் சென்று தஞ்சை நகரின் கோட்டை வாசலையும் கடந்தாள். அங்கே ஆழ்வார்க்கடியானைச் சந்தித்தாள். அவனும் முதன் மந்திரியின் ஆக்ஞையினால் பொன்னியின் செல்வரைப் பார்ப்பதற்காகப் போவதாக அறிந்தாள். அந்த வீர வைஷ்ணவனுடைய உதவியினால் அவளுடைய பிரயாணமும் சௌகரியமாக நடந்தது.

அன்றைக்கு அதிர்ஷ்டம் நெடுகிலும் அவள் பக்கம் இருந்தது. குடந்தை ஜோதிடர் வீட்டின் வாசலில் இளைய பிராட்டியின் ரதத்தை அவர்கள் கண்டார்கள். இளவரசரைப் பற்றிக் குந்தவை தேவிக்கு ஏதேனும் செய்தி தெரிந்திருக்கலாம் என்று எண்ணி விசாரிப்பதற்காக ஜோதிடர் வீட்டில் நுழைந்தார்கள். அங்கே பெரிய பழுவேட்டரையரின் வாய் மொழியினால் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களைப் பற்றி அறிய நேர்ந்தது. பொக்கிஷ நிலவறையில் ஒளிந்திருந்தவன் அந்தச் சதிகாரர்களில் ஒருவன்தான் என்பதைப் பூங்குழலி நிச்சயித்துக் கொண்டாள். அதே சமயத்தில், இளவரசருக்கும் சதிகாரர்களினால் அபாயம் ஏற்படலாம் என்று அறிந்த அவள் உள்ளம் வேதனைப்பட்டது. வானதி செய்த சபதம் அந்த வேதனைக்கு ஒரு பரிகாரமாயிருந்தது. இளவரசி வானதியைக் காப்பாற்றப் போன இடத்தில் இளவரசரையும் சந்திக்கலாயிற்று.

எல்லாவற்றையும்விட அவளுக்குத் திருப்தி அளித்த காரியம், தஞ்சாவூருக்குப் போவது பற்றி அவளுடைய யோசனையை இளவரசர் ஏற்றுக் கொண்டது தான். இலங்கையில் தம்மைத் தெரியப்படுத்திக்கொள்ளாமல் யானைப்பாகனைப் போல் அவர் யாத்திரை செய்வதுண்டு என்பதை அவள் அறிந்திருந்தாள். அங்கே சேநாதிபதியையும் படைவீரர்களையும் அவர் பிரிந்து தன்னை மட்டும் யானை மேல் ஏற்றிக் கொண்டு கடற்கரைக்கு விரைந்து வந்ததையும் அவள் மறந்து விடவில்லை. எனவே, இச்சமயமும், இளவரசர் அதே முறையைக் கடைப்பிடித்தால் நல்லது என்றும், அவர் தனியாகப் போனால் தஞ்சைக் கோட்டைக்குள் போக இயலாது என்றும் தன்னையும் வானதியையும் அழைத்துப் போனால் யானைப் பாகன் என்று எண்ணி விட்டு விடுவார்கள் என்றும் சொன்னாள்.

''சமுத்திரகுமாரி! நல்ல யோசனை சொன்னாய்! ஒரு பெரிய ராஜ்யத்துக்கு முதன் மந்திரியாக இருக்க நீ தகுந்தவள்!'' என்று இளவரசர் கூறிய மொழிகளை நினைத்து நினைத்து அவள் உள்ளம் பூரித்தது.

ஆனால், இவ்விதம் அந்த நிமிஷம் வரையில் அவள் நினைத்தபடியே எல்லாம் நடந்திருந்தும் என்ன உபயோகம்? அவள் எதிர்பார்த்தபடி மந்தாகினி அத்தை சக்கரவர்த்தி படுத்திருந்த

அறையில் இல்லை! அவளைப் பற்றி அங்கே யாரிடமும் விசாரிக்கவும் முடியவில்லை. "என்னுடைய இறுதிக் காலம் நெருங்கி விட்டது" என்று அத்தை சமிக்ஞையினால் அறிவித்ததை எண்ணிய போதெல்லாம் பூங்குழலியின் நெஞ்சு பகீர் என்றது. இவ்வளவு சிரமம் எடுத்துச் சாதுர்யமாகப் பேசி இளவரசரை இங்கே அழைத்து வந்திருந்தும் என்ன பயன்? அத்தையைக் காணவில்லையே என்று அவள் நெஞ்சு துடிதுடித்தது. நிலவறையிலேயே இன்னும் இருக்கிறளோ என்று தோன்றியது. ஒரு வேளை அந்தப் பாதகச் சதிகாரனால் அங்கேயே கொல்லப்பட்டிருப்பாளோ என்று எண்ணியபோது அவள் நெஞ்சு பிளந்தே போயிற்று.

சுரங்கப் பாதை வழியாக நிலவறைக்குள் போய்ப் பார்க்க விரும்பினுள். ஆனால் அரண்மனையில் அப்போது இளவரசரின் வரவு காரணமாக ஒரே கோலாகலமாயிருந்தது. குறுக்கும் நெடுக்குமாகப் பெண்கள் போவதும் வருவதுமாயிருந்தார்கள். கூட்டம் கூட்டமாக வந்து சக்கரவர்த்தி படுத்திருந்த அறையை எட்டிப் பார்த்துவிட்டுப் போன வண்ணம் இருந்தார்கள். இதற்கிடையில் தான் மட்டும் அந்தப் பழைய சிற்ப மண்டபத்துக்குத் தனியாகப் போவதை யாராவது பார்த்தால் என்னநினைத்துக் கொள்வார்கள்? அந்தச் சதிகாரன் ஒருவேளை இன்னமும் அங்கே இருந்தால், தான் அவனிடம் தனியாகப் போய் அகப்பட்டுக் கொள்வதும் உசிதமல்ல. எத்தனையோ நெஞ்சுத் துணிவுள்ள பூங்குழலிக்கும் அந்த இருளடர்ந்த பொக்கிஷ நிலவறை சிறிது பயத்தை அளித்தது.

ஆகையினாலேயே சின்னப் பழுவேட்டரையரிடம் சொல்லி அவரையும் அழைத்துக் கொண்டு போய் நிலவறையில் தேடிப் பார்க்கத் தீர்மானித்தாள்.

காலாந்தக கண்டரோடு வாதம் செய்து அவர் மனத்தைத் திருப்பி அழைத்துப் போவதற்குச் சிறிது அவகாசம் ஆகிவிட்டது. அதை நினைத்துத் தான் அவள் இப்போது மிக விரைவாக நடந்தாள். விரைவில் ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என்று அவளுடைய உள்ளுணர்ச்சி கூறியது. அதனால் தனக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்தால் பாதகமில்லை; அத்தைக்கு ஒன்றும் நேரக் கூடாது என்று மனப்பூர்வமாக விரும்பினாள்.

சிற்ப மண்டபத்துக்குள் பிரவேசிக்கும் சமயத்தில், அரண்மனை மாடத்திலிருந்து ஏதோ கரிய நிழல் விழுவது போலிருந்தது; சுவர் ஓரமாக ஓர் உருவம் போவது போலவும் இருந்தது. அவை உண்மையா அல்லது பிரமையா என்று பார்த்துத் தெளிவதற்காகச் சற்று நின்றாள்.

"பெண்ணே! ஏன் நிற்கிறாய்? போய் வெளிப்பட்டு விடுமே என்று பயப்படுகிறாயா?" என்று சின்னப் பழுவேட்டரையர் கூறியது காதில் விழுந்ததும், மேலே விரைந்து நடந்தாள்.

சிற்ப மண்டபத்துக்குள் சென்றதும் இராவணன் தலைகளுக்கும் கைகளுக்கும் நடுவில் இருந்த துவார வாசலைப் பூங்குழலி சின்னப் பழுவேட்டரையருக்குச் சுட்டிக் காட்டினாள்.

"சரிதான்! இறங்கு முதலில்!" என்றார் கோட்டைத் தளபதி.

ஏனோ பூங்குழலிக்குத் தயக்கம் உண்டாயிற்று. அவள் உடம்பு நடுங்கிற்று.

அதே சமயத்தில் 'கிறீச்' என்று அமானுஷிகமான குரல் ஒன்று ஓலமிடும் சத்தம் கேட்டது.

அது தன்னுடைய அத்தை மந்தாகினியின் குரல் என்பதை உடனே உணர்ந்து கொண்டாள். அந்த ஓலக் குரல் அரண்மனைக்குள்ளே சக்கரவர்த்தி படுத்திருக்கும் அறையிலிருந்து வருகிறது என்பதையும் அறிந்தாள்.

உடனே அவளுடைய தயக்கம் தீர்ந்து விட்டது. சின்னப் பழுவேட்டரையரைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அரண்மனை அந்தப்புரத்தை நோக்கி விரைந்து ஓடினாள். மீண்டும் மீண்டும் அந்தப் பயங்கர ஓலக் குரல் கேட்டுக் கொண்டேயிருந்தது.

சக்கரவர்த்தி படுத்திருந்த அறைக்குள் அவள் பிரவேசித்த போது, அங்கே தோன்றிய காட்சி அவள் உள்ளத்தில் ஒரு பெரிய சித்திரக் காட்சியைப் போல் பதிந்தது.

சக்கரவர்த்தி சாய்ந்து படுத்தவண்ணம் தமது அருமைக் குமாரன் அருள்மொழியின் கைகளைத் தமது கைகளால் பிடித்துக் கொண்டிருந்தார். அவர்கள் இருவருக்கும் முன்னால் மந்தாகினி அத்தை நின்று ஓலமிட்டாள். ஒரு பக்கத்தில் வானதியும் அவளை மருமகளாகப் பெறுவதற்கிருந்த மலையமான் மகளும் நின்று கொண்டிருந்தார்கள்.

எல்லாரும், வெறி கொண்டவள் போல் கூச்சலிட்ட மந்தாகினியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மேல் மண்டபத்தின் முகப்பிலிருந்து பாய்ந்து வந்த கூரிய வேலை அவர்களில் யாரும் கவனிக்கவில்லை. பூங்குழலி தன் அத்தையை நோக்கி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்றாள். (தொடரும்)

# யாருக்கு என்ன பங்கு?

அந்தப் படத்தோடு எல்லாவற்றையும் பெட்டிக்குள் வைத்து மூடினேன். ஒன்றும் அறியாதவனைப் போல் நாற்காலியில் உட்கார்ந்து பத்திரிகையைப் படித்துக் கொண்டிருப்பதாக நடித்தேன். நான் எதிர்பார்த்தது போலவே அர்ஜுனன் உள்ளே நுழைந்தான்.

''அடப் பாவி, நீயா? எப்போடா வந்தாய்? அறை திறந்திருக்கிறதே? உள்ளே யார் யார் இருக்கிறார்களோ என்று யோசித்துக் கொண்டே வந்தேன்... நீயா?'' என்றான் அவன்.

நான் 'ஆமாம்' என்று தலையாட்டினேன் புன்சிரிப்புடன்.

''எனக்குத் தெரியாதா நீ சாவியை வைத்திருக்கிற இடம்? எடுத்தேன், திறந்தேன்!'' என்று கூறினேன். சிறிது நேரம் குடும்ப சமாசாரங்களை விசாரித்துக் கொண்டோம்.

''பிரசவம் ஒன்றும் கஷ்டமாக இல்லையே?'' நான் கேட்டேன்.

''இல்லை. அதெல்லாம் சுலபமாகவே முடிந்தது'' — அர்ஜுனன் பதில் சொன்னான். ''அப்புறம்... திடீரென்று இந்தப் பக்கம் விஜயம் என்ன காரணமாக?'' என்று என்னைப் பார்த்துக் கேட்டான் அவன்.

''ஒன்றுமில்லை. சும்மாத்தான்...'' என்று இழுத்தேன் நான். பிறகு? உண்மையைச் சொல்ல முடியுமா என்னால்? ஊரிலேயிருந்து என் மாமாவின் பெண்ணும் அவனுடைய மனைவியுமான மனோ எனக்குக் கடிதம் எழுதியிருந்ததையும், அதில் அவள் அவனைப் பற்றிச் சந்தேகப்படுவதையும் நான் அவனிடம் எப்படிச் சொல்வது? மனோவின் கடிதம் என் கண்முன் நிற்கிறது. அதிலும் முக்கியமாக அந்த வரிகள்... 'இவர் என்னை விட்டு ஒரு நாளும் பிரிய மாட்டார். வெட்கத்தை விட்டு எழுதுகிறேன் — அப்படிப்பட்டவர் என்னைப் பிரசவத்துக்கு அனுப்பிவிட்டு எப்படி வாழ்க்கை நடத்துகிறாரோ என்று எண்ணினேன். என் சந்தேகத்துக்கு ஏற்றாற்போல் சில விஷயங்கள் நடந்திருக்கின்றன. எனக்கு மாதம் ஐம்பது ரூபாய் அனுப்புகிறவர் இம்முறை முப்பது ரூபாய்தான் அனுப்பியிருக்கிறார். மணியார்டர் கூப்பனில் இரண்டு வரி.. அவ்வளவுதான். முன்பு வாரத்துக்கு இரண்டு கடிதாசிகள் வந்து கொண்டிருந்தன....இப்போ ஒரு மாதமாகக் கடிதமே கிடையாது. காரணம் தெரியவில்லை. அடுத்த தெரு நாராயணசாமியின் பெண் பங்கஜம் போன வாரம் வீட்டுக்கு வந்திருந்தாள். இவர் ஏதோ ஒரு பெண்கூடச் சினிமாவுக்கு வந்திருந்ததை அவள் பார்த்தாளாம்... இதெல்லாம் எனக்குப் பயத்தைத் தருகின்றன. இந்தக் கடிதம் கண்டதும் உறவு முறைக்காக என்று இல்லாவிட்டாலும் ஓர் அபலைப் பெண் என்பதற்காகவாவது நீ உடனடியாக அவரைப் போய்ப் பார்த்து வேண்டியதைச் செய்.'

மனோவின் கடிதப்படி அர்ஜுனனைத் தேடிச் சென்ற நான் அவன் அறையைத் திறந்து பார்த்தபொழுது... தற்செயலாக அவன் பெட்டியைத் திறந்தேன். நானும் அவனும் உரிமையோடு பழகியவர்கள். அந்தப் பழைய நினைவுகளிலேதான் நான் அவன் பெட்டியைத் திறந்தேன். பெட்டியின் உள் அறையிலிருந்த ஒரு புகைப்படம் அகப்பட்டது. ஒரு பெண்ணின் புகைப்படம் அது. முல்லை மாலை சூடி, கண்ணுக்கு மை தீட்டி, மெல்லிய புடவையும் அதனினும் மெல்லிய ஜாக்கெட்டும்... சந்திர ஹாரமும்.. பக்கவாட்டிலே தலையைச் சிறிது சாய்த்தபடி... இடுப்பு வரையில் உள்ள படம். சட்டென்று எனக்கு ஒரு சந்தேகம். புகைப்படத்தைத் திருப்பிப் பார்த்தேன். குண்டு குண்டாக எழுதியிருந்தது — 'என்டெ ப்ரியப்பெட்ட ஸாமிக்கெ' — எனக்கு மலையாளம் வாசிக்கத் தெரியும். படத்தைத் திரும்பவும் ஒரு முறை பார்த்தேன். மலையாளப் பெண் தான். முகத்தில் நன்றாகத் தெரிந்தது. அவள் கையெழுத்துப் போட்டிருந்தாள். பெயர்— 'நளினி'. நான் அந்தப் படத்தைப் பார்த்து முடித்துப் பெட்டியை மூடிய போதுதான் அர்ஜுனன் உள்ளே நுழைந்தான்.

அவளைக் கண்டுபிடிப்பதொன்றும் அவ்வளவு சிரமமானதாக இல்லை. ஒரு பெரிய



கம்பெனியை விட்டு மாலை ஐந்து மணிக்கு வெளியே வந்து கொண்டிருந்தாள் அவள்.

''மிஸ்...''

''யாரு நிங்ஙள்?'' — அவள் தமிழ் பேசியது விசித்திரமாக இருந்தது.

''ஞான்... அறிக்கட்டெ. உங்களோடு சில வார்த்தைகள் பேசணும். மிஸ்டர் அர்

ஜுனனைத் தெரியுமில்லையா? அவரோட வந்து....''

''ஓ... மிஸ்டர் அர்ஜுனனென்றெ...'' வார்த்தையைச் சொல்லும்போதே சிரித்தாள். கன்னத்தனத்தில் முகம் சிவந்தது.

நான் அவளோடு நடந்தேன். அவளுடன் சாவகாசமாகப் பேச வேண்டும் என்றும், அவள் என்னுடன் கூட வரப் பயப்பட வேண்டிய அவசியம் இல்லை என்றும் கூறினேன். நான் மலையாளத்தில் பேசினதாலோ அல்லது என் உருவத்தைப் பார்த்து 'இது சாதுவான பிராணி' என்று கருதியதனாலோ எதனாலென்றறியேன்... அவள் என்னுடன் கடற்கரை வரையிலும் வருவதாக வாக்களித்தாள்.

அர்ஜுனனோடு அவள் நட்புக் கொள்வது சரியல்லவென்றேன். காரணம் கேட்டாள். காரணம் பல கூறினேன் நான்.

அவளோ, ''அவர் எப்படியிருந்தாலும் என்னைப் பொறுத்தவரையில் நல்லவர். அவர் பரம ஏழையானாலும் அதற்காக என் சிநேகிதத்தில் ஏதும் மாறுதல் ஏற்படாது!'' என்று அடித்துக் கூறிவிட்டாள். அதோடு அவனைத் திருமணம் செய்துகொள்ள இருப்பதாகக் கூறி ஒரு பெரும் கல்லைத் தூக்கிப்போட்டாள்.

அவளுடைய பிரேமை இவ்வளவு ஆழம் போயிருக்குமென்று நான் எண்ணவில்லை. கல்யாணம் செய்து கொள்வாளாமே கல்யாணம்! மகளே உன் விதி இப்படியா ஆகவேண்டும்? மகளின் நிலையை நினைந்து நான் குமைந்தாலும் நளினியின் மனத்தைக் கண்டு செய்வது அறியாது விழித்தேன். இருந்தாலும் கடைசி அஸ்திரமாக, ''கல்யாணம் செய்து கொள்வது சாத்தியமில்லை'' என்றேன்.

''ஏன்? நான் தீர்மானித்தது தீர்மானித்ததுதான். யாராலும் அதை மாற்ற முடியாது.''

''அவருடைய மனைவி அதற்கு இடம் கொடுக்க மாட்டாள்!''

அவள் குரலில் வியப்பும் நடுக்கமும் தாண்டவமாடின. ''மனைவியா?''

''ஆமாம். அவர் கரம் பற்றிய மனைவி மிஸஸ் அர்ஜுனன். இப்போது விளங்கிற்றா?''

''மிஸ்டர் அர்ஜுனன் தமக்குக் கல்யாணம் ஆனதாகச் சொல்லவில்லையே?''

''புளுகன் அவன். நான் சொல்கிறேன். மிஸ்டர் அர்ஜுனன் கல்யாணம் ஆனவன். அவன் மனைவி பிரசவத்துக்குப் பிறந்தகம் போயிருக்கிறாள்!''

''அப்படியா?''

நளினி மௌனமானாள். கடல் அலைகளையே பார்த்துக் கொண்டு நின்றாள். அவள் நெஞ்சில் ஆசை அலைகள் எவ்வாறு தாவித் தாவி எழும்பி மடிந்தனவோ? அவள் கண்கள் கலங்கியதையும் இரண்டு சொட்டுக் கண்ணீர் அவளுடைய கன்னத்தில் உருண்டதையும் நான் கவனித்தேன். பாவம்... நானும் கொஞ்சம் வருத்தப்பட்டேன். தவறு அவள் பேரில் இல்லை. அர்ஜுனன்தான் தனக்குக் கல்யாணமான விஷயத்தை அவளிடம் மறைத்திருக்கிறான். அவனும் வேண்டுமென்றேதான் மறைத்தானோ? அல்லது அதைப்பற்றிப் பேசச் சந்தர்ப்பமே ஏற்படவில்லையோ...?

நெடுநேரம்... உண்மையின் பயங்கரப் பிடியிலே தத்தளித்துக் கொண்டு நின்ற நாங்கள் இருவருமே ஒன்றும் பேசவில்லை.

''என்றால்...என்றால்... என்னை க்ஷமிக்கணும்...'' அவள் நெகிழ்ந்த குரலில் கூறினாள்.



**நா. அனந்தகிருஷ்ணன்**



"ரொம்ப நேரமா எதையோ தேடறியே என்ன ?"
"உக்கிராண அறையில் பூசணிக்காய் ஒன்றைக் காணோம்."

கல் நெஞ்சும் கரையுமாறு. "நான் இனி மிஸ்டர் அர்ஜுனனைப் பார்க்க மாட்டேன். எனக்கு அவரோடு இனி ஓர் உறவும் இல்லை... ஆனாலும் என் வயிற்றில்...."

"ஐயோ!" — நான் நடுங்கினேன். சை! அர்ஜுனன் இவ்வளவு மோசமானவனா? அவனை மட்டும் சொல்லி என்ன பிரயோசனம்? இவளும் உடன்பட்டதனால்தானே?— அனுதாப உணர்ச்சி எகிறி விழ நான் கடுமையான குரலில் கூறினேன்: "அது உன் குற்றம்!"

"அந்தக் குற்றத்துக்காக அவரை மணந்து கொண்டு அப்புறம் மறந்து விடுவேன்!"

"அவன் விருப்பப்படா விட்டால்?"

"கட்டாயப்படுத்துவேன்."

நான் பதில் பேசவில்லை.

எனக்குக் கோர்ட்டு விதிகளும் சட்ட முறைகளும் தெரியாது. அர்ஜுனன் தனக்கு விவாகம் ஆகவில்லை என்று சொல்லி அவளை ஏமாற்றி யிருந்தால் சட்டப்படி குற்றவாளியாகிறானா இல்லையா? அவள் வழக்குத் தொடர்ந்தால் அவளுக்கு வெற்றி கிட்டுமா கிட்டாதா? இதெல்லாம் எனக்குத் தெரியாது. இருந்தாலும் மனத்துக்குள்ளே பெரிதும் குழம்பினேன்.

அர்ஜுனன் மீது அவள் வழக்குப் போட்டு அவன் பெயர் ஊர் சிரித்து அவன் ஜெயிலுக்குப் போகவோ அல்லது கட்டாயக் கல்யாணம் செய்து கொள்ளவோ நேரிட்டால் மனோ... அவள் கதி?...

"எத்தனை மாஸம்?"

"இரண்டு மாஸம்."

நான் ஒரு யோசனை கூறினேன்.

"அது மகா பாபம். அப்படிச் செய்ய எனக்கு விருப்பமுமில்லை" என்றாள்.

"கல்யாணம் ஆன ஓர் இளைஞனை வற்புறுத்தி விவாஹ பந்தத்தில் ஈடுபடுத்துவதும் ஓர் அபலையின் சாபத்தைச் சம்பாதிப்பதும் இதைக் காட்டிலும் பெரிய பாபமல்லவா?"

அவள் ஒன்றும் பேசவில்லை. பிறகு என்ன தோன்றிற்றோ, "அது என் குற்றமில்லை. கல்யாணம் ஆகவில்லை என்று அவர் அல்லவா சொன்னார்?" என்றாள்.

நான் செய்வதறியாது திகைத்தேன்.

"ரகசியத்தைச் சொல்லாமல் சட்டென்று யாரையாவது நீ திருமணம் செய்துகொண்டு விடேன்!"

"அப்புறம் விஷயம் தெரிந்தால் என்ன ஆகும் ? அப்படி வஞ்சிக்கிறவள் இல்லை நான்!" என்றாள் அவள்.

எனக்குக் கோபம் கோபமாக வந்தது.

"செய்வதையும் செய்து விட்டு..." குமுறினேன் நான்.

"நன்றாக இருக்கிறதே நீங்கள் சொல்வது? வேறு யாரோ கர்ப்பமுண்டாக்கிய ஸ்திரீயை நீங்கள் விவாகம் செய்து கொள்வீர்களா?"

வாயாடி! என்னையே மடக்குகிறாளே!

"சொல்லுங்கள், பதில் சொல்லுங்கள்!"

அடிப் பாவி! நேருக்கு நேரே கேட்டுவிட்டாளே! நான் அவஸ்தைப் பட்டேன். அவளை அறைக்கவோ கேள்வி கேட்டிருக்கவோ வேண்டாம்போல் இருந்தது. அட தெய்வமே!

அவள் எழுந்தாள். "ஒரு பெண்ணைக் காக்கும் மனத் திண்மை உங்களுக்கு இருக்குமானால், நீங்கள் இப்பொழுதே சொல்ல வேண்டும் என்பதுகூட இல்லை. ஒரு வாரத்தில் இதே நேரம் இதே இடத்துக்கு வருகிறேன். அப்பொழுது சொல்லுங்கள் போதும்!"

அதற்கு மேல் அவள் அங்கே நிற்கவில்லை. விடுவிடென்று நடந்து விட்டாள்....

"அன்பு மிக்க அண்ணா!

உன் காலடியில் விழுந்து என்னை மன்னிக்க வேண்டுகிறேன். என்னால் உனக்கு ரொம்பவும் தொல்லை. ஆனால் என் கணவனை எனக்கு மீட்டுத் தந்த தெய்வம் என்று உன்னைக் கும்பிடுவேன். என் பொருட்டு நீ செய்கின்ற தியாகத்தை என்னவென்பேன்? உன் கடிதத்தில் கண்ட விஷயங்களைப் படித்து விட்டுக் கொதித்துக் கொதித்து அழுதேன். இவர் புத்தி இப்படிப் போகவேண்டுமா? இச் சமயத்தில் நீ காப்பாற்றா விட்டால் என் கதி என்ன ஆகும்? உன்னைத் தெய்வமாக வணங்குகிறேன். புதிய மன்னிக்கு என் அன்பைத் தெரிவி. வளர்கின்றதை ஒன்றும் செய்ய வேண்டாம். பிறக்கட்டும். அதை நானே வளர்க்கிறேன். உன் அன்புள்ள மனோ."

என் பின்னால் காலடியோசை கேட்டது. திரும்பினேன். நளினி. குளித்துவிட்டு இழைய இழைய வாரிய கூந்தலை நுனி முடிச்சுப் போட்டுக் கொண்டு, மல்லைப்பூ... திலகம்... அலங்காரத்துடன் பார்த்தேன் அவளை — என் மனைவியை. பொருள் பொதியச் சிரித்தாள்.

"என்ன சிரிப்பு?" என்று ஆத்திரத்தைக் கொட்டினேன்.

"என்ன ஆத்திரம்? மனோ இன்னும் நாடகத்துக்குத் திரை விடவில்லையா?" மீண்டும் சிரிப்பை உதிர்த்தாள் நளினி.

"நாடகமா?"

"ஆமாம். என் உள்ளத்து ஆசையையும் கல்யாணமே செய்து கொள்வதில்லை என்ற பிடிவாதத்தோடு இருந்த உங்கள் உள்ளத்தையும் ஒன்று சேர்க்க மனோவும் அவள் கணவன் அர்ஜுனனும் சேர்ந்து நடித்தது நாடகம் இல்லாமல் என்னவாம் ?"

"அடி கள்ளி!" — அவள் சிரிப்பில் என் சிரிப்பும் கரைந்தது.

# சன்னிதித் தெரு

படிப்படியாக எதிர்பாராத பல திருப்பங்கள் கதையில் மர்மமான ஒரு சூழ்நிலையை உருவாக்கி விறுவிறுப்பைக் கூட்டுவது போலவே புதிர்கள் அவிழ்வதும் படிப்படியாக இரண்டு மூன்று காட்சிகளில் அமைந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும். அப்படியின்றி மர்ம நாவலின் கடைசி அத்தியாயம் போல் முடிச்சுக்கள் ஒவ்வொன்றும் அவிழ்க்கப்படுகின்றன, இறுதிக் காட்சியில். விளக்கத்துக்கு மேல் விளக்கமாக வளர்ந்து பொறுமையைச் சோதிக்கின்றன. இது நாடக பாணி அல்ல; நாவல் பாணி — தவிர்க்க வேண்டும்.

பார்த்திபனாகத் தோன்றிய சண்முகசுந்தரம்.... போதாது ஸார், போதாது. நடிப்பில் மட்டுமல்ல; தோற்றத்திலும் இன்னும் அதிக கவனம் செலுத்த வேண்டும். நடிப்புக் கலையில் மிளிர உடற்கட்டும் அவசியம்தான்.

எடுத்த எடுப்பிலேயே இரு குறைகளை எழுதக் காரணம், நாடகத்தில் குறைகள் மேற்கூறிய இரண்டு மட்டுமே என்பதுதான். வேறு எந்தவிதத்திலும் பழுது சொல்ல முடியாது. ஆனால் பாராட்டுக்களை நிறைய வழங்குவது சாத்தியமே.

காலத்தின் போக்குக்கு எதிர்நீச்சல் போட்டுத் திரு கோமல் சுவாமிநாதன் கிராமச் சூழ்நிலையில் துணிந்து கதை புனைந்து நாடகமாக்கியதே போற்றுதலுக்குரியதுதான்.

பாரத் ஃபைன் ஆர்ட்ஸ் ஆதரவில் அண்மையில் அண்ணாமலை மன்றத்தில் நிகழ்ந்த இந்த நாடகத்துக்குச் சன்னிதித் தெரு என்று ஏன் பெயர் வைத்தார்களோ? சந்நிதித் தெருவில் நடக்கும் நிகழ்ச்சிகள் என்பதற்காக இருக்கலாம். ஆனால் கதாநாயகி இறுதியில் கலைத் தேவிக்கே தன்னை அர்ப்பணம் செய்து வாழ்க்கைப் பாதையை அமைத்துக் கொள்வதும் தலைப்புக்குப் பொருத்தமான நல்ல முடிவுதான்; துணிச்சலான முடிவும்கூட.

ராஜபார்ட் ராஜமன்னார் (வலது) பட்டுப் பட்டென்று பேசினால் அவருக்கு 'ஆமாம் சாமி' போடவும் ஓர் ஆள் தேவைதானே?



திரு எஸ். வி. சகஸ்ரநாமத்தின் இந்தத் தயாரிப்பில் நல்ல கதை அமைப்பு, விறுவிறுப்பான திருப்பங்கள், ரசிக்கத்தக்க நகைச்சுவை எல்லாம் கச்சிதமாய்ப் பொருந்தியிருக்கின்றன. நகைச்சுவையில் அரசியல் கலப்பு இல்லாமல் போகவில்லை; ஆனால் அளவோடு நிற்கிறது; நயமாகவும் தொனிக்கிறது. வசனங்களில் — நல்ல வேளை, உபதேசமொழிகள்



மருதாநல்லூர் தபால் நிலையம்தான் — அது நாடகக் கலாநிலையமும்கூட !

இல்லவே இல்லை. உபன்யாசத்துக்கோ அல்லது மாதா கோயிலில் பாதிரியாரின் அருளுரைகளைக் கேட்கவோ போய் வந்த மாதிரி இன்றி நாடகம் பார்த்து விட்டு வந்த திருப்தியே ஏற்படுகிறது !

கதாநாயகியான சுபத்ரா என்ற பாத்திரம் சற்றே தாறுமாறாகக் கையாண்டால் நொறுங்கி விடக்கூடிய மெல்லிய கண்ணாடிப் பாத்திரம்தான். ஆனாலும் ரொம்ப நாசூக்காகக் கையாண்டு விரிசல் காணாமல் முழுசாகக் கொடுத்து விட்டார் கோமல் சுவாமிநாதன். சூர்ய பிரபா, கண்ணாடியானாலும் அதி நுணுக்கமான கலை வேலைப்பாடு நிரம்பிய பாத்திரம் என்பதை உணர்த்துகிறார், சிறப்பான நடிப்பின் மூலம்.

ராஜபார்ட் ராஜமன்னார் பட்டுப்பட்டென்று பேசுகிறார் என்றால் பட்டாமணியம் ராஜநடை போடுகிறார். இவ்வேடங்களைத் தாங்கும் சாமிக் கண்ணுவும் ராஜப்பாவும் விசேஷ பாராட்டுக்குரியவர்கள்.

வளர்த்துவானேன்? 'ஸ்டேஜ் ஃபிரெண்ட்'ஸின் இந்த முதல் நாடகம் முதல்தர நாடகம் என்றாலே போதாதா ?

**குட்டி கிருஷ்ணன்**


சிங்கக் கழுகு
பீட்டர் ஓடான்னல்
15
மாட்டியோவும் அல்போரினியும படுக்கை அறை வாசலில் சற்றுத் தயங்குகின்றனர்.
கதவை அகலத் திற: அவசரப் பட்டு நுழையாதே! திடீர்த் தாக்குதலுக்கு அவன் திட்ட மிட்டிருக்கலாம்.


எதிர்பாராதவிதமாகத் தாக்குதல் அவர்களுக்குப் பின்புறமிருந்து வருகிறது!


படுக்கையறைக்குள் தான் இருப்பதாகக் குரல் கொடுத்து ஏமாற்றி யிருக் கிறான் மாடக்டி.
உதை விழுந்த வேகத்தில் அல்போரினியின் கரத்தி லிருந்த கத்தி தற்செய லாக மாட்டியோவின் முது கில் ஆழப் பாய்ந்து விடுகிறது.
1772


காயத்தைக் கெட்டிப் பட்ட தார் மூடிக் கொள்ளவே கார்வின் காலணியில் மறைந் திருக்கும் கத்தியை உருவுகிறான்.
ரத்தப் பெருக்கை நிறுத்தியாகி விட்டது. இனி நம் கைவரிசையைக் காட்டவேண்டியதுதான்.


அதோ கார்வின்!... இறந்து விட்டானா என்று உறுதிப் படுத்திக் கொள்வது நல்லது.


படிக்கட்டு நோக்கி உடல் மிதந்து நெருங்குகிறது.
துப்பாக்கியால் சுடக் கூடாது: சத்தம் எழுவதை அல்போரினி விரும்ப மாட்டார்.
1773


கார்லினைத் தாக்க
ஹாமில் கோடாலியை
உயர்த்துகிறான்...


...அதே விநாடியில் கார்லின் வீசிய
கத்தி அவன் கழுத்தில்
பாய்கிறது.


மாடஸ்டியைக் கண்டு
பிடிக்க வேண்டும். விலங்கு
பூட்டிய கரங்களுடன்
அவன் இரண்டு பேர்களைச்
சமாளிப்பது ரொம்பக்
கஷ்டம். ஹாமில் நழுவ
விட்ட துப்பாக்கி எங்கே?
ஆ..இதோ!
1774


அரண்மனையின் பெரிய படுக்கையறையில்
மாட்டியோ இறந்து கிடக்கிறான். மாடஸ்டி
அல்போரினியை எதிர்த்து நிற்கிறாள்.
அல்போரினி! உன் முன்
னோர்கள் இங்குதானே
தங்கள் எதிரிகளை ஒழித்
துக்கட்டினார்கள்? அரண்
மனையைச் செப்பனிட்ட
போது ரகசியக்
கதவு கண்டு
பிடிக்கப்பட்டது.
மாக்ஸ் எனக்குக்
காட்டினான்..


...ரகசியக் கதவுக்குப் பின்
பாழும் கிணறு போன்ற ஓர்
அமைப்பு. இருநூறு அடி ஆழம்!
இதன் அடிவாரத்தில் எத்
தனை மனிதர்களின் எலும்
புக் கூடுகள் இருக்கின்
றனவோ?


சீக்கிரமே அங்கு
இன்னொரு
எலும்புக் கூடும்
அதிகப்படியாய்
இருக்கும்!
ஆமாம்!
1775


அல்போரினி கோடாலிக் காம்பினை வீசித் தாக்குகிறாள். மாடஸ்டி பின்புறம் பாய்ந்து தப்புகிறாள்.


மாடஸ்டி!


கார்லினின் குரல்! துாயிஸ் இறந்துவிட்டான் என்று அர்த்தம். பாக்கி இருப்பது நீ ஒருவன்தான் அல்போரினி!
1776


மாக்ஸ் நேர்மையானவன்; நல்ல இதயம் கொண்டவன். அவனைக் கேவலம் சில கற்களுக்காக நீ கொன்று போட்டாய்.
அவன் சாக வேண்டியவன்தான். நவரத்தினக் கற்கள் என் முன்னோர்களில் ஒருவனால் ஒளித்து வைக்கப்பட்டன. அப்புதையல் எனக்குத்தான் சேரவேண்டும்!


உனக்குக் கொஞ்சம் புத்தி பிசகிப்போயிருக்கிறது, அல்போரினி! ஆனால் அதைச் சாக்கிட்டு நீ மன்னிப்புப் பெற முடியாது. உன்னைத் தீர்த்துக் கட்டப் போகிறேன்.
ஓ! பெண் ஜன்மமே! என்னை நீ பயமுறுத்துவதா?
(தொடரும்)



# தின்னத் தின்ன இனிக்கும் மிட்டாய்

தின்னத் தின்ன இனிக்கும் மிட்டாய்
சிறுவரெல்லாம் விரும்பும் மிட்டாய்
அண்ணன் தம்பி தங்கையோடு
அப்பா கூடத் தின்னும் மிட்டாய்
பல்லில்லாத பாட்டிகூடப்
பையப்பைய சப்பும் மிட்டாய்
சொல்லட்டுமா அதன் பெயரை
சுவை மிகுந்த **நியூட்ரின்** மிட்டாய்

NCM_18 TAM




நியூட்ரின் கன்பெக்ஷனரி கம்பெனி பிரைவேட் லிமிடெட், சித்தூர் (ஆ.பி.)

# சுழிக்காற்று

## அத்தியாயம் ஆறு

இன்ஸ்பெக்டரின் அனுமதி பெற்ற காளியப்பனுடன் மஞ்சுளாவும் சேகரும் கோபாலும் முல்லைவாசலுக்குக் கிளம்பினார்கள். நிர்மலாவிடம் விடைபெற்றுக் கொள்ள முயன்ற மஞ்சுளாவின் கண்கள் கலங்கின. தன் உயிர்த் தோழிக்கு இப்படியொரு அவலநிலை ஏற்பட்டதை அவளால் தாங்கத்தான் முடியவில்லை. பாலுவின் உடலைப் பிரேதப் பரிசோதனைக்குப் போலீஸார் ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைத்தபோது நிர்மலா குமுறிக் குமுறி அழுது விட்டாள். வார்த்தைகள் ஏதும் அவள் வேதனையைப் போக்காது என்பதை உணர்ந்த மஞ்சுளா தன் தோழியை மார்போடு அணைத்துக் கொண்டாள். போலீஸ் ஸ்டேஷனில் அவளுக்குச் சில கடமைகள் இருந்ததால் தான் மஞ்சுளா அவளை அங்கு விட்டு விட்டுக் கிளம்பினாள். இல்லாவிட்டால் நிர்மலாவையும் மஞ்சுளா தன்னோடு கூட்டிக்கொண்டு போயிருப்பாள்.

''நீ போய் வா, மஞ்சுளா, நான் பிறகு உன்னைச் சந்திக்கிறேன்'' என்று நிர்மலா விடை கொடுத்தாள்.

மஞ்சுளா தன் காதலனுடன் காளியப்பனின் காருக்குள் நுழையப் போகும் சமயத்தில் 'பட பட' வென்று மோட்டார் சைக்கிளின் ஒலி கேட்டது. அடுத்த விநாடி டாக்ஸியின் அருகே பளபளவென்று ஒரு புதிய மோட்டார் சைக்கிள் வந்து நின்றது. அதன் மீது கம்பீரமாக வீற்றிருந்த மனிதருக்கு நாற்பது வயதிருக்கலாம். சிவந்த மேனி, செல்வச் செருக்கின் மிடுக்கான தோற்றம். பார்வையே கண்டிப்பான பேர்வழி என்பதைப் பறைசாற்றியது. மஞ்சுளா அந்த மனிதரைக் கண்டதும் முறுவலித்தாள். மற்றவர்களிடம் பழகிய அன்னியோன்னிய பாவம் அதில் இல்லை.

''இப்போதுதான் வருகிறாயா, மஞ்சுளா?'' என்றார் அந்த மனிதர். 'ஆமாம்' என்பதற்கு அடையாளமாகத் தலை அசைத்த மஞ்சுளா, அவரைச் சேகருக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள்.

''இவர்தான் டாக்டர் ரகுநாத். அதைவிட என் சின்னம்மாவின் சகோதரர் என்பதுதான் முக்கியம். இப்போது என் தகப்பனார் இவருடைய மேற்பார்வையில்தான் இருக்கிறார்.''

அழுத்தலாகச் சிரித்து மஞ்சுளாவின் வார்த்தைகளை ஆமோதித்த டாக்டர் ரகுநாத், ''மஞ்சுளா, நான் இப்போது முல்லைவாசலுக்குத்தான் போய்க் கொண்டிருக்கிறேன். கோகிலா சற்று முன்புதான் ஃபோன் செய்தாள். இப்போதைக்குப் பயப்படும்படியாக ஒன்று

கௌசிகன்




மில்லா விட்டாலும் நாம் எதற்கும் எச்சரிக்கையாக இருக்க வேண்டாமா? அப்பாவின் நிலைமையைத் தான் சொல்லுகிறேன். ரொம்ப சீரியஸ் தான். உனக்குத் தெரிஞ்சிருக்கணுமே? ஆனால், கோகிலா உன்னை வின்

விஜயா

கவலைகளுக்கு ஆளாக்க வேண்டாம் என்று உனக்கு எழுதும் கடிதங்களில் அதை எல்லாம் விவரமாகத் தெரியப் படுத்தி இருக்க மாட்டாள். நீ விரும்பினால் வீட்டுக்கு வந்ததும் நான் உனக்கு அப்பாவின் நிலையைப் பற்றி விவரமாகச் சொல்கிறேன்...'' என்றார் டாக்டர்.

''அவசியம் எனக்கு எல்லாம் விவரமாகச் சொல்லுங்கள் டாக்டர்'' என்றாள் உருக்கமாக மஞ்சுளா. ரகுநாதன் விடைபெற்றுக் கொண்டு மோட்டார் சைக்கிளைக் கிளப்பினார். அதன் சத்தத்துக்குத் தன் டாக்ஸி ஒன்றும் சளைத்ததல்ல என்று சொல்வது போல் காளியப்பனும் தன் வண்டியை எடுத்தான். புழுதியை வாரித் தூற்றிக் கொண்டு ஒரு குலுங்கலுடன் கிளம்பியது அந்த விநோத வாகனம்.

சாமுண்டிக் கோட்டையைத் தாண்டி முல்லைவாசலுக்குப் போகும் ரஸ்தாவில் போய்க் கொண்டிருந்தது காளியப்பனின் டாக்ஸி. மஞ்சுளா அவனுடன் பேச்சுக் கொடுக்க ஆரம்பித்தாள். ''ஏன், காளியப்பா! ராமு மறைந்த சமயத்தில் நீ எங்கே, என்ன செய்து கொண்டிருந்தாய் என்பதற்குத் தகுந்த அத்தாட்சி இல்லை என்று சொல்கிறாரே இன்ஸ்பெக்டர். அன்று இரவு நீ நிஜமாகவே இந்த ஊரில் இல்லையா? எங்காவது வெளியே போயிருந்தாயா?''

'இல்லை' என்பதற்கு அடையாளமாகக் காளியப்பன் தலையைஆட்டினான்.

'' அப்படியானால் நீ என்ன செய்து கொண்டிருந்தாய் ?''

காளியப்பன் வாயில் சேர்ந்திருந்த புகையிலைச் சாற்றை வெளியே உமிழ்ந்து விட்டு, ''ஷெட்டிலே இருந்தேன் '' என்றான்.

''புயல் அடித்த போதெல்லாம் நீ உன் ஷெட்டுக்குள்ளேயா இருந்தே...?''

''ஆமாம். என் வீடும் அதுதானே!''

''காருக்குள்ளேயே சும்மா உட்கார்ந்துகிட்டிருந்தாயா ?''

''சும்மா இல்லே, என் வாழ்க்கையிலே நடந்து போன விசயங்களையெல்லாம் நெனச்சுப் பார்த்துக்கிட்டிருந்தேன்'' என்றான் காளி.

''அதுதான் உன் வழக்கமாயிற்றே!'' என்று சொல்லிவிட்டு மஞ்சுளா சேகரிடம், ''காளியப்பன் போக்கே அலாதி. குடும்பம்,குழந்தை,குட்டி எதுவும் கிடையாது. அவன் வயிற்றுக்குச் சம்பாதித்துக் கொண்டால் போதும். இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்துக்கும் இந்த விஷயம் தெரியும்'' என்றாள்.

சேகர் எதுவும் பேசவே இல்லை. இருண்டு கிடந்த வயல்வெளிகளில் மினுக்கட்டான் பூச்சிகளின் வெளிச்சத்தை ரசித்தபடி உட்கார்ந்திருந்தான். சிள்ளுப் பூச்சிகளின் ஸ்வரமும் தவளைகளின் 'கொட கொடா' சத்தமும் காளியப்பனின் டாக்ஸி எழுப்பும் ஓசையும் ஒன்றாகச் சேர்ந்து கொள்ள ஏதோ ஒரு மேனாட்டு 'பாப்' இசையைக் கேட்பதைப் போன்ற பிரமையில் மூழ்கியிருந்தான் சேகர். கிராமப்புறத்துக் காற்றின் மணம் மனத்துக்கு இதமாக, ரம்மியமாக இருந்தது.

ரஸ்தாவின் மேடுபள்ளங்களை உள்ளிருப்போருக்கு உணர்த்தியபடி போய்க் கொண்டிருந்தது டாக்ஸி. சிறிது நேரத்தில் ஒரு சிறு வாய்க்காலின் மீது கட்டப்பட்டிருந்த பாலத்தைத் தாண்டி, கம்பீரமாக உயர்ந்து நின்ற கருங்கல் சுவர் ஓரமாகச் சிறிது நேரம் ஓடி, பிரம்மாண்டமான இரும்புக் கிராதிக் கதவுக்குள் நுழைந்து சென்றது காளியப்பனின் கார். தருமலிங்கத்தின் முல்லைவாசல் பண்ணைக்குள் நுழைந்துவிட்டோம் என்பதற்கு அடையாளங்கள் தாம் கருங்கல் கோட்டைச் சுவரும், இரும்புக் கேட்டும். தர்மலிங்கத்தின் அரண்மனை போன்ற பங்களாவுக்குப் போக இன்னும் நாலைந்து பர்லாங்காவது போயாக வேண்டும்.

இரண்டு பக்கமும் அடர்ந்து வளர்ந்திருக்கும் சவுக்குப் பந்தைகளை மார்பளவுக்குச் சுவர் போலக் கத்திரித்து ஒழுங்குபடுத்தியிருந்தார்கள். அந்தப் பாதையிலே வெகுதூரம் போனதும் தூரத்திலே கம்பீரமான பழங்காலத்துக் கட்டடமொன்று காட்சி அளித்தது. சரித்திர காலத்து அரசர்களின் இருப்பிடத்துக்கு வந்துவிட்டதுபோன்றதொரு பிரமையை உண்டாக்கிற்று அந்தக் கட்டடம். உண்மையும்கூட அதுதானே! மங்காப் புகழ்பெற்ற விஜயநகர சாம்ராஜ்யத்தின் கீழ் இருந்த ஒரு நாயக்க மன்னரின் அரண்மனையாக இருந்தது அந்தக் கட்டடம். காரையால் கட்டி இருந்தாலும் கருங்கல் கட்டடத்தையும் விட உறுதியானது. பிரம்மாண்டமான தூண்கள். விசாலமான கூடங்கள். பழங்காலத்துக் கட்டடமாக இருந்தாலும் தருமலிங்கம் அதில் சகல நவீன வசதிகளையும் பொருத்தியிருந்தார்.

முந்நூறு ஏக்கரா விஸ்தீரணமுள்ள அந்தப் பண்ணையின் நடுவே அந்தக் கட்டடம் கம்பீரமாக எத்தனையோ ரகசியங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு நின்றது. ஐம்பதுக்

கும் அதிகமான அறைகள் இருந்தன, அந்தப் பங்களாவில். இதை மஞ்சுளா அறிவித்த போது சேகர் தன் வியப்பைத் தெரிவித்தான்.

காளியப்பனின் கார் கட்டடத்தைத் தொட்டுவிடத் தட்டுத் தடுமாறியபடி முன்னேறிக் கொண்டிருந்தது. அதன் சத்தத்தைக் கேட்டுக் கட்டடத்தினுள்ளிருந்து ஓர் உருவம் ஓடி வந்தது. இருட்டில் சேகருக்கும் கோபாலுக்கும் அந்த உருவத்தை ஊகிக்க முடியாவிட்டாலும் மஞ்சுளா, ''வேலப்பா.....!'' என்று குழந்தையைப் போலக் குதூகலத்துடன் கூவி அழைத்தாள்.

''சின்னம்மா வந்தீங்களா?'' என்று மேலே பேச முடியாத மகிழ்ச்சியுடன் வாயெல்லாம் பல்லாக டாக்ஸியுடன் ஓடி வந்தான். ஓட்டப் பந்தயத்தில் கடைசியாக வருபவன் எப்படிச் சோர்ந்து தட்டுத் தடுமாறி அடைய வேண்டிய குறியிடத்துக்கு வந்ததும் பொத்தென்று உட்கார்ந்து பெருமூச்சுவிடுவானோ அதுபோலக் காளியப்பனின் டாக்ஸியும் வீட்டின் முன்னால் ஒரு பெருத்த சத்தத்துடன் போய் நின்றது.

முன்பக்கமிருந்த எஞ்சின் பகுதியின் மூடியின் உச்சியிலே ரேடியேட்டருக்குத் தண்ணீர் ஊற்றும் பகுதியிலிருந்துநீராவி 'குப் குப்'பென்று கொப்புளித்தபடி இருந்தது. உள்ளே எஞ்சின் சூடாகிவிட்டதால் நீராவி மூடியை உதைத்து விளையாடிக் கொண்டிருந்தது.

வேலப்பன் ஓடிப் போய் வாசல் விளக்கைப் போட்டுவிட்டுப் பரபரப்புடன் ஓடி வந்தான். அவன் உள்ளத்திலுள்ள படபடப்பை அவன் உடலினால் சமாளிக்க முடியவில்லை. ஸ்தூல சரீரியான அவன் என்ன செய்வது என்று தெரியாமல் இங்குமங்கும் நகர்ந்தபடி திண்டாடினான். கோட்டை வாசலின் கதவுபோல் இருந்தது அந்தப் பங்களாவின் கதவு. அவ்வளவு பெரியது, உறுதியானது. அதை வேலப்பன் சின்ன எஜமானியை வரவேற்பதற்காக அவசர அவசரமாக அகலத் திறந்த போது, யானைக்குட்டி ஒன்று கோட்டை வாசலை முட்டித் திறப்பது போலிருந்தது.

சேகர் வெளிச்சத்தில் வேலப்பனின் முகத்தை நன்றாகப் பார்த்தான். காளியப்பனின் சாயலாக அவன் இருப்பதைக் கண்டு, ''காளியப்பனுக்கு இவன் ஏதாவது உறவோ?'' என்று மஞ்சுளாவைக் கேட்டான்.

''ஆமாம், காளியப்பனுக்கு இவன் தம்பி முறையாகணும்'' என்றாள் மஞ்சுளா.

கூண்டிலிருந்து விடுபட்ட மிருகம் வெளியில் வந்து உடலை நிமிர்த்தி



'பட்ஜெட்டைப் பற்றி யாராவது பேசுவதாக இருந்தால் பேசலாம்!' என்று பெங்களூரில் இந்திரா காங்கிரஸ் கொறடா சட்டசபைக்கு வெளியே வந்து அறிவிப்பு செய்தார். அங்கத்தினர்களுக்கு பட்ஜெட் பற்றி அவ்வளவு அக்கரை!'' - பாபு - 'டெக்கான் ஹெரால்ட்'

நெட்டுயிர்த்துக் கொள்வது போலச் சேகரும் கோபாலும் டாக்ஸியிலிருந்து வெளிப்பட்டதும் கைகால்களை உதறி விட்டுக் கொண்டு நிமிர்ந்து நின்றார்கள். மங்கிய நிலவொளியில் குழந்தைகளின் மாயாஜாலக் கதைகளில் வரும் மர்மங்கள் நிறைந்த அரண்மனை போன்ற அந்த முல்லைவாசல் பங்களாவை வியப்புடன் பார்த்துக் கொண்டு நின்றார்கள் நண்பர்கள் இருவரும்.

''அப்போ நான் வரேம்மா....'' என்றான், டாக்ஸியின் கதவுகளை அறைந்து சாத்திக் கொண்டே காளி.

தன் கையிலிருந்த டம்பப் பையைத் திறந்து ரூபாய் நோட்டுக்களை எடுத்து அவன் கையில் திணித்துக் கொண்டே ''போய் வா, காளியப்பா! இன்ஸ்பெக்டர் உன்னை ஏதாவது பயமுறுத்தினால் எனக்குத் தெரியப்படுத்து. என்ன?'' என்றாள் மஞ்சுளா. காளியப்பன் மலர்ந்த முகத்துடன் தலையை அசைத்து விடைபெற்றுக் கொண்டு தன் வாகனத்தைக் கிளப்பினான்.

**ம**ஞ்சுளா சேகரைத் தன் வீட்டுக்குள் அழைத்துக் கொண்டு போனாள். மடக்க முடியாத ஒரு காலை ஊன்றுகோலின் உதவியினால் சமாளித்தபடி மெல்ல நடந்து வந்தான் சேகர். ஊன்றுகோலின் 'டக் டக்' ஓசை அந்தப் பழைய காலத்துக் கட்டடத்தில் பிரம்மாண்டமாக எதிரொலித்தது. பெரிய பெரிய தூண்கள், விசாலமான முன் வராந்தா, உயர்ந்த நிலைவாசல், உறுதியான வேலைப்பாடு அமைந்த கதவு — இவற்றின் நடுவே நிற்கும்போது தாங்கள் மிக மிகச் சிறியவர்களாகத் தோன்றியது, கோபாலுக்கு. 'சூழ்நிலை ஒரு மனிதனின் எண்ணங்களையும் தோற்றத்தையும் மாற்றும் என்கிறார்களே அது இது தானோ?' என்று வியந்து போனான் கோபால்.

சந்திரனின் குளுமையான ஒளியைப் போல வெளிரிய நீல நிற விளக்கின் மின்சார ஒளி, கூடம் முழுதும் பரவி ரமணீயமாக இருந்தது. ஹாலின் நடுவே காஷ்மீர் வேலைப்பாடமைந்த

வட்ட வடிவமான மேஜைமீது பூவேலை செய்த ரத்தினக் கம்பளம் விரித்து அதன் மீது பலவிதமான வர்ணப் பூக்களை ஒரு சீன தேசத்து ஜாடியில் கொத்தாக வைத்திருந்தது. அந்த வட்ட மேஜையைச் சுற்றி, வருபவர்கள் உட்காரத் திண்டுகள் உள்ள சோபாக்கள் வரிசையாகப் போடப் பட்டிருந்தன. இழைமெத்தென்ற விரிப்பு. சுவரிலே பார்வையாக அங்கொன்றும் இங்கொன்றுமாக ரவி வர்மாவின் உயிரோவியங்களும் இடை யிடையே தேசத் தலைவர்களின் ஜீவனுள்ள போட்டோக்களும் மாட்டப் பட்டிருந்தன.

ஹாலின் அமைப்பைப் பார்வையால் அளவெடுத்துக் கொண்டிருந்த சேகர் மாடிப் படியிலே நடுத்தர வயதுள்ள பெண் ஒருத்தி பரபரப்போ அவசரமோ ஏதுமின்றி நிதானமாக இறங்கி வருவதைக் கண்டான். பிரமாதமான அழகி என்று சொல்ல முடியா விட்டாலும், மனத்தைக் கவரும் ஒரு காந்த சக்தி அவளிடம் இருக்கத்தான் செய்தது. கட்டமைந்த உறுதியான உடல். உடலைப் போலவே உள்ளமும் உறுதியானது என்பதை அவள் முகமே சொல்லிற்று. இயற்கையிலேயே நிமிர்ந்த நோக்கோ அல்லது கருத்து, நீண்ட கேசத்தை முடிந்திருந்த கொண்டையின் கனத்தினாலே தலை நிமிர்ந்திருந்ததோ தெரியவில்லை. நேர் வகிடும், நிறைந்த தலைமயிரும், நிமிர்ந்த பார்வையுமாகக் கம்பீரமாகத்தான் இருந்தாள் அவள்.

மெல்ல இதழ் விரிய, நாசூக்காகப் புன்னகை செய்து மஞ்சுளாவை வரவேற்றாள். ''அதுதான் என் சிற்றன்னை, கோகிலா'' என்று அடக்கமான குரலில் சேகருக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள் மஞ்சுளா. இறுக்கி முடிந்த கச்சுக்கும், துவண்டு நின்ற பட்டுப் புடவைக்குமிடையே சிறு மடிப்பு விழுந்து தெரிந்த அன்னையிலே இருந்த கொத்துச் சாவியைக் கொண்டே அவள்தான் அந்தப் பங்களாவின் எஜமானி என்பதை அவன் ஊகித்து விட்டான்.

''உள்ளே போகலாம். வாருங்கள்'' என்று முன்னால் சென்றாள் கோகிலா. கூடத்தை அடுத்த ஒரு விசாலமான அறைக்குள் எல்லோரும் நுழைந்தார்கள். அங்கும் பல சோபாக்கள் போடப்பட்டிருந்தன. அறையின் நான்கு புறமும் கண்ணாடி பீரோக்கள். அதில் அடுக்கடுக்காகப் புத்தகங்கள். ஒரு சோபாவிலே ஒரு பெண் கால் மீது கால் போட்டபடி உட்கார்ந்து கொண்டிருந்தாள். அங்கு மெல்ல அமைதியாகச் சுழன்று கொண்டிருந்த மின்சார விசிறியின் மெல்லிய காற்றில் அவள் உடுத்தியிருந்த வெளிர் நீல நிறமான காஷ்மீர் பட்டுப் புடவை ஆடி அசைவது, கடல் அலை பொங்கிப் புரளுவது போலிருந்தது. உட்கார்ந்திருந்த உருவத்தின் கட்டமைந்த உடலைத்தான் பார்க்க முடிந்தது. முகத்தை ஒரு புத்தகம் மறைத்துக் கொண்டிருந்தது.

''லலிதா, யார் வந்திருக்கா பாரு'' என்றாள் கோகிலா. புத்தகம் தணிந்தது. ஆனால் உருவம் எழுந்து ஓடிவரவில்லை. நிமிர்ந்துகூட உட்காராமல், ''ஓ! மஞ்சுளாவா? அதுதான் வருவதாக நேற்றே தந்தி வந்ததே. பிரயாணம் சுகமாக இருந்ததா மஞ்சு?'' என்றாள் அந்தப் பெண்.

மஞ்சுளாவைவிட இரண்டொரு வயது மூத்தவளாகத் தோற்றமளித்தாள் அவள். புஷ்டியான உடல். சதைப் பிடிப்பான கன்னங்கள். வட்டமான கருவிழிகள். அதில் தெறித்து நின்ற அலட்சியமும் அகம்பாவமும் — தான் ஓர் அழகி என்ற நினைப்பால் உருவானவை அவை. அவள் அழகிதான், அதை யாரும் மறுக்கவில்லை. மறுக்கவும் முடியாது. அதற்காக...

லலிதாவை மஞ்சுளாவுக்குப் பிடிக்கவில்லை என்பதை அவள் முகபாவமே சொல்லிற்று. அவள் கேள்விக்குத் தலையை ஆட்டினாள் மஞ்சுளா. மறுபடி தன் முகத்தைப் புத்தகத்தால் மறைத்துக் கொண்டு படிப்பதில் மூழ்கினாள் லலிதா. கிராமப்புறத்துச் செருக்கு. அத்தனை கிறுக்குத்தனம்.

மஞ்சுளாவுக்கு லலிதாவை அப்படியே விட்டுவிட மனமில்லை. தன்னை அலட்சியம் செய்ததாக எண்ணியதோ என்னவோ அந்தப் பெண் உள்ளம். சுவாரசியமாகப் படிப்பதிலிருந்து அவள் கவனத்தைத் திருப்பி, ''லலிதா, இவர்தான் என் வருங்காலக் கணவர், காப்டன் புரொபலர் சேகர்'' என்றாள்.

முகத்தை மறைத்திருந்த புத்தகம் தணிந்தது. தன்னைச் சீண்டும் மஞ்சுளாவின் எண்ணம் அவளுக்குப் புரிந்திருக்க வேண்டும். ''நமஸ்காரம்'' என்றாள், புத்தகத்தையும் சேர்த்துக் கைகூப்பியபடி. மறு விநாடி தன் முன் நிற்போர் யாரையுமே லட்சியம் செய்யாத தோரணையில் கன்னத்தில் கையூன்றியபடி புத்தகத்தை மடியில் கிடத்தி, அதில் மூழ்கலானாள் லலிதா.

அவ்வளவு சுலபத்தில் அவளை விட்டு விலக மஞ்சுளாவுக்கு மனமில்லை. மறுபடியும் அவளை உசுப்பினாள். ''லலிதா இவரை உனக்கு அறிமுகப்படுத்தவேண்டாமா? இவர்தான் சேகரின் நண்பர் கோபால். பெரிய சாம்பியன்.....'' என்றாள். லலிதா தலை நிமிர்ந்து

# வனப்பும், புத்துணர்ச்சியும் பெற உபயோகியுங்கள்-சிந்தால்

நீங்கள் மாசுமருவற்ற எழிலைப் பெற, நாள் முழுவதும்
புத்துணர்ச்- சியுடன் திகழ, உபயோகியுங்கள்-
இருவகையில் நன்மை புரியும் சிந்தால் சோப்.
உலகிலேயே மிகச்சக்தி வாய்ந்த கிருமி
நாசினியாகிய ஜி-11(ஹெக்ஸாக்ளோரோஃபீன்)
அடங்கியதுசிந்தால்.

ஜி-11 அடங்கிய சிந்தால் மட்டுமே உங்களுக்கு
வனப்பையும், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது.




**சிந்தால் உண்மையிலேயே ஒரு துர் நாற்ற மகற்றும் சோப்**

Interpub/GS/20A Tam



## இப்படியும் ஒருவர் :

தோந்தே என்ற பம்பாய் எம். எல். ஏ. பார்லிமெண்ட் தேர்தலில் நின்று தோற்றுப் போனார். ஆ க வே அவர் தமது எம். எல். ஏ. பதவியையும் ராஜினாமா செய்திருக்கிறார்!

இந்துஸ்தான் டைம்ஸ்-நாசிக்

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

கோபாலைப் பார்த்தான். முகத்தில் எவ்விதச் சலனமுமின்றி வாய் திறவாமல் கைகூப்பி வணக்கம் செலுத்தினான். பிறகு அதற்கு மேல் அங்கு இருக்கப் பிடிக்காததினாலோ அல்லது அந்த வீட்டின் சின்ன எஜமானியின் சீண்டலை விரும்பாததினாலோ புத்தகத்துடன் அந்த அறையை விட்டு வெளியேறினான்.

அவனை அங்கிருந்து கிளப்பிய திருப்தி மஞ்சுளாவின் முகத்தில் படர்ந்தது.

வந்தவர்களை வரவேற்று விட்டு உள்ளே போயிருந்தாள் மஞ்சுளாவின் சித்தி கோகிலா. ஆகவே லலிதாவும் மஞ்சுளாவும் மோதிக் கொண்டதைக் கோகிலா காணவில்லை. ஒரு வேளை அப்படியொரு மோதலை எதிர்பார்த்தே அதைக் காண விரும்பாமல் தா ன் விலகிப் போனாளோ தெரியாது.

அத்தனை பெரிய ஹாலில் இப்போது அவர்கள் மூன்று பேர்களே இருந்தார்கள் — சேகர், கோபால், மஞ்சுளா. காரியப்பரின் டாக்ஸியில் முடங்கி வந்த உடம்பு வலி போகச் சேகரும் கோபாலும் கால்களைப் பரக்க நீட்டிய படி சோபாவில் முக்கால் படுக்கை நிலையில் விழுந்து கிடந்தார்கள்.

லலிதாவை அங்கிருந்து விரட்டிய பெருமையில் பூரித்துப் போய் உட்கார்ந்திருந்த மஞ்சுளாவிடம் கேட்டான் கோபால்:

"மஞ்சுளா, உன்னுடைய வழக்கமான காரியம் ஒன்றைச் செய்யத் தவறி விட்டாயே. மறந்து விட்டாயா? அல்லது வெற்றி மயக்கமா?" என்று கேட்டான்.

சட்டென்று மஞ்சுவுக்குப் புரியவில்லை. "எதைச் சொல்கிறாய் நீ?" என்று கேட்டாள்.

"சாமுண்டிக் கோட்டையில் இறங்கியதிலிருந்து இதுவரை பல அறிமுகப் படலங்கள் ஆகிவிட்டன. இப்போது புத்தகத்தைச் சுருட்டிக்கொண்டு உள்ளே போன பட்டுப்பூச்சியைப் பற்றி எங்களுக்கு எதுவும் தெரிவிக்கவில்லையே?" என்றான் கோபால். லலிதாவைப் பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வம் அவன் பேச்சில் அப்பட்டமாகத் தெரிந்தது.

"ஓ.... அதைச் சொல்கிறாயா?" என்று பலமாக, ஆனால் அழகாகச் சிரித்தாள் மஞ்சுளா.

"நான் ஒவ்வொருவரையும் அறிமுகப்படுத்தி வைப்பதைக் கிண்டல் செய்கிறாயா கோபால்? ஆனால் அந்த அறிமுகப் படலம் இல்லா விட்டால் இவர்களை யெல்லாம் நீங்கள் எப்படித் தெரிந்து கொள்வது? இப்போது பெரிய 'இவளை'ப் போல எழுந்து போனாளே — லலிதா, அவள் என் சித்தியின் தங்கை."

"ஓ!" என்று யோசனையில் மூழ்கினான் கோபால். கோகிலாவையும், லலிதாவையும் அழகில், உருவத்தில் ஒப்பிட்டுப் பார்க்க ஆரம்பித்தவனைப் போல் காணப்பட்டான்.

மஞ்சுளா சேகரின் காதோடு கூறினாள். "என் தோழி நிர்மலா இருக்கிறாளே அவள் காதலன் ராமுவின் மீது இவளுக்கு ஒரு கண். அவன் காதலுக்காக ஏங்கினாள். ஆனால் அவன் இவளை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. அவன் மனம் நிர்மலாவிடம்தான் இருந்தது. தன் தங்கையை நிராகரித்ததினாலேயே ராமுவுக்குத் திருட்டுப் பட்டமும் நிர்மலாவுக்கு இங்கிருந்து வேலை நீக்கமும் என் சித்தியால் வழங்கப்பட்டிருக்கின்றன."

சேகர் மௌனமாகக் கண்களை மூடியபடி காதலி கூறும் தகவல்களைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

அதே சமயம் கோகிலா உள்ளே நுழைந்தாள். அவள் பின்னால் ஒரு வேலைக்காரப் பெண் தட்டில் சிற்றுண்டியும் காப்பியும் கொண்ட பெரிய தட்டை ஏந்தியபடி வந்து கொண்டிருந்தாள்.

"பிரயாணமெல்லாம் வசதியாக இருந்ததா?" என்று கேட்டபடி ஒரு சோபாவில் உட்கார்ந்த கோகிலா அவர்கள் பதிலை எதிர்பாராமலே தொடர்ந்தாள்: "ஆனால் எங்களுருக்கு வரும் இந்தப் பாஸஞ்சர் வண்டியில் பிரயாணம் செய்பவர்களுக்கு அசதி தீர ஐந்து நாட்களாகும்!" இதைச் சொல்லிவிட்டு அவள் சிரித்த போது அந்தப் பல் வரிசையின் அழகில் சொக்கிப் போனான் கோபால். உருவத்துக் கேற்ற கம்பீரம். அதற்கேற்ற அழகு, அழகுக்கேற்ற சிரிப்பு என்று அடுக்கிக் கொண்டிருந்தது அவன் மனம்.

வேலைக்காரிப் பெண் ஒவ்வொருவருக்கும் பீங்கான் தட்டுக்களில் சிற்றுண்டியை விநியோகிக்கலானாள்.

(தொடரும்)

"அவரை உன் கணவர் என்று பார்க்கக் கூச்சமாக இருந்தால் ஒரு நோயாளி என்று வது பார், ஹேமா. வெளிப்படையாக உனக்குத் தெரிவது அவர் கால் ஊனம் மட்டும் தானே! ஆனால் அவர் மனம், உணர்ச்சி, எல்லாமே ஊனப்பட்டு ரணமாகிக் கிடக்கிறது. அவர் வாழ்க்கையில் நடந்தது ஒரு விபத்துத்தான். அதோடு நிற்கட்டும். நீயே அவருக்கு மற்றொரு விபத்தாக மாறி விடாதே!"

ராதா உள் வேலைகளை முடித்துக் கொண்டு, சபாபதிக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளையும் செய்துவிட்டு ஹேமா படுத்திருக்கும் அறைக்குத் தானும் படுக்க வந்தபோது, ஹேமா படுக்கையில் படுத்தவண்ணம் ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள்.

"ராதா!" என்று கடுகடுப்புடன் அழைத்த ஹேமா புத்தகத்தை ஆத்திரத்துடன் மூடிக் கீழே வைத்தாள். "பிறருடைய உணர்ச்சிகளை முழுமையாகப் புரிந்து கொண்டு பேச வேண்டும், ராதா. அதில்லாமல் ஒரு பக்கத்து உணர்ச்சிகளை மட்டும் மிகைப்படுத்திப் பேசி, மற்றொரு பக்கத்து உணர்ச்சிகளைக் குறைவாக மதிப்பிடுவதை நான் விரும்பவில்லை" என்றாள் ஹேமா.

"உன்னுடைய உணர்ச்சி எனக்குப் புரியுது, ஹேமா! அதற்காக நீ மேற்கொண்டிருக்கிற வழி சரியில்லே. அவருக்கு இப்படியாகிவிட்டதே என்று நீ அதிகம் துயரப்படுவதாகவே இருந்தாலும்கூட அத்துயரை நீ அவருடன் பகிர்ந்து கொள்ள வேண்டுமே தவிர இப்படி அவரைக் கவனிக்காமல், உன் துயரை நீ மறக்க வெளியே சுற்றுவது விவேகமான செய்கையே அல்ல. உன்னுடைய இந்த மாறுபட்ட செய்கையினால் அவரை ஒரு நிரந்தர நோயாளியாக்கி விட்டாய். நீ அவரைக் கவனிக்கிறதே இல்லே என்று குழந்தை மாதிரி அழுகிறார்டி.... நீ அவரை அழவிடலாமா?"

ஹேமாவிடமிருந்து பேச்சுமில்லே; பதிலும் இல்லே. ராதாவின் வார்த்தைகளை அலட்சியப் படுத்துவதைக் காட்டுவதற்காக மீண்டும் புத்தகத்தை எடுத்துப் பிரித்துக் கொண்டு திரும்பிப் படுத்தாள்.

ராதா அதற்குப்பின் பேசவில்லை. திரும்பி ஒருக்களித்துப் படுத்த அவள் நினைவில் சில சம்பவங்களின் எதிரொலிகள், அடிநெஞ்சிலிருந்து கேட்டன.

நடராஜா கலாகேந்திரம்!

நாட்டியக் கலைஞர்களை உருவாக்குவதில் நல்ல பெயர் எடுத்திருக்கிறது. புதுப் புது பாணிகளில், புதுப் புது அம்சங்களாகத் தேர்ந்தெடுத்து மேடையேற்றிப் பிரபலமாகிக் கொண்டிருந்த தருணத்தில் அதன் ஸ்தாபகனை சபாபதியை ஒரு முழு நீள நாட்டியப் படத்துக்கு நாட்டியம் அமைப்பதற்காக ஒரு பட அதிபர் ஏற்பாடு செய்து கொண்டார். மிகக் குறுகிய காலத்தில் நாட்டியப் பெருமைகளை நல்ல முறையில் பிரதிபலிக்கும் படமாக அது அமையவே, அதைத் தொடர்ந்து சபாபதிக்குக் கிராக்கி அதிகமாயது. இத்தனை நாட்கள் சினிமா அதிபர்களின் கவனத்தில் படாமலிருந்த சபாபதி அந்தப் படத்துக்குப் பின் நன்கு பிரபலமாகி விட்டான். மிக வேகமாகப் பல படங்களுக்கு நாட்டியப் பகுதிக்கான பொறுப்புக்களை ஏற்கச் சந்தர்ப்பங்கள் வந்து குவிந்தன. முழு நீள நாட்டியப் படங்களாக இரண்டு மூன்று படங்கள் அவன் மேற்பார்வையில் வளரத் தொடங்கின.

அக்கா ஹேமாவுக்கும் சபாபதிக்கும் உள்ள "காதல்" ராதாவுக்குத் தெரியும். அதிகமான படங்களில் நாட்டியத்துக்கான 'டைரக்ஷன்' பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டு விட்டானகையால் நடராஜா கலாகேந்திரம் நாட்டியப் பள்ளியில் அதிக கவனம் செலுத்த முடியவில்லை. நடராஜா கலாகேந்திரத்தில் சபாபதிக்கு உதவியாக இருந்த சிறந்த நர்த்தகி ஒருத்தியிடம் அதன் பொறுப்புக்களைச் சில நாட்கள் விட்டிருந்தான். ஆனால் அப்பெண் திடீரென்று வேறு கலாகேந்திரம் தொடங்கித் தன்னிடம் பயின்று கொண்டிருந்த மாணவிகளைத் தன்னிடம் இழுத்துக்கொண்டு விட்டதால், சபாபதி தன் கலாகேந்திரத்தை மூடும்படியாக நேர்ந்துவிட்டது.

வசதிக் குறைவான குடும்பத்தில் பிறந்த ஹேமா சபாபதியின் நடராஜா கலாகேந்திரத்தில் தயாரிக்கும் நாட்டிய நாடகங்களில் நடித்து வரும் வருமானத்தைக் கொண்டும் மெஜஸ்டிக் சர்க்கிளில் உள்ள ஒரு பிரபல ரேடியோ கம்பெனி ஒன்றில் 'அப்ரண்டிஸாக'ப் பணியாற்றும் தங்கை ராதாவின் சம்பாத்தியத்திலுமாகக் குடும்பத்தைப் பராமரித்துக் கொண்டு வந்தாள்.

வாழ்க்கையின் திருப்பு முனையில் மிக வேகமாகப் போய்க் கொண்டிருந்த சபாபதியின் அன்பு முன்பு இருந்ததைப் போலவே இருக்குமா என்பதில் சந்தேகமும் இலேசான பயமும் கொண்ட ஹேமா, அவன்மேல் முன்பு வளர்த்துக் கொண்ட காதலை இலேசாகத் துண்டித்துக் கொள்ளப் பிரயத்தனப்பட்ட தருணம் அது. காரணம் சபாபதி ஒரு வேளை இனி எட்டாப் பழமாகப் போய் விடலாம் என்றுதான். அதனால் ஆழப் பதிந்துவிட்ட அவன் நினைவை மெதுவாகப் பெயர்த்துக்கொண்டிருந்த தருணம், சபாபதியே அவளை ஆட்கொள்ள வந்துவிட்டான்.

ஒன்றை இப்படித்தான் அவள் நினைத்தாள்! எதிர்பார்த்து அது நமக்குக் கிடைப்பதைவிட எதிர்பார்க்காமல் ஒன்று கிடைத்து விட்டால் அதன் தன்மையே வேறுதானே! ஹேமாவின் உள்ளம் சலங்கை கட்டிக் கொண்டு துரித கதியில் மனோகரமான வசந்த கால ராகம் ஒன்றுக்கு ஆடும் பதங்கள் போல் ஆடியது!

பொருளாதார ரீதியில் இன்று ரொம்பவும் உயரத்தில் நிற்கும் சபாபதியின் நிலை அவளுடைய பெற்றோர் உட்படத் தங்கை ராதாவையும் தயங்க வைத்தது. எட்டாத கனி என்று அவர்கள் நினைத்தார்கள். ஹேமாவோ கை நழுவி விட்டது என்று நினைத்தது கைக்கு வந்துவிட்ட போது இழக்கத் துணியவில்லை.

ராதா தன்னுடைய எண்ணங்களை தெளிவாகக் கூற இயலாத நிலையில் பெற்றோர் மூலமாகச் சொல்லச் சொன்னபோது ஹேமா அதை அவ்வளவாக ஏற்கவில்லை. ஆனால் இந்த நிலையில் சபாபதியின் மற்றொரு பார்வைக் கோணத்தை உணர்ந்த போது ஹேமாவுக்கே சற்று அதிர்ச்சியாக இருந்தது. சபாபதி உள்ளன்புடன் காதல் வயப்பட்டு அவளைத் தேடி வந்திருக்கிறான் என்று தான் முதலில் எண்ணி அவன் இழுத்த இழுப்புக்கெல்லாம் உடன்பட்டாள். ஆனால் சபாபதி, அவளை உல்லாச இணைக்காக மட்டுமே பயன் படுத்திக் கொள்ள நினைத்தான். அவளுடைய ஏழ்மை நிலையும், வீட்டில் அவளை யாருமே இதற்காகக் கண்டிக்காததும் அவனுடைய உற்சாகத்தை அதிகமாக்கி விட்டது எனலாம்.

திருமணத்தைப் பற்றி ஹேமா பேசும் போதெல்லாம் அவன் அதிகமாக உற்சாகம் காட்டாமல் நழுவியது அவளுக்கு அதிர்ச்சியைத் தந்த நிலையில்தான் ஒரு முறை அந்தக் கூர்மையான கேள்வியைக் கேட்டாள். அன்றிலிருந்து அவன் அவளைத் தேடி வருவது நின்றுவிட்டது. பெரிய அதிர்ச்சிக்கு ஆளாகி அவனைத் தேடி ஒரு முறை சென்றபோது அவன் அவளுடைய கோரிக்கையை ஏற்கவில்லை. அவள் தாபத்தை உணரவில்லை. அவளுடைய உண்மை நிலையை அங்கீகரிக்கத் தயாராயில்லை. பலவீனப்பட்ட உணர்வுகளோடு, ஆசையைக் கிளறிப் பின் அதைக் காலில் போட்டு மிதித்து உதாசீனப்படுத்தி விட்டவனை வாய்க்கு வந்தபடி திட்டித் தீர்த்துவிட்டு அழுது கொண்டே வீட்டுக்கு வந்தவளைக் கண்டு ராதா தான் மனம் கொதித்தாள்; குமுறினாள். அதீத உணர்ச்சியால் தன்னைச் சபாபதிக்கு இழந்து பின் ஏமாந்து அழுது புலம்பும் தமக்கையின் நிலை அவளைக் கொஞ்சம் அதிகமாகவே உலுக்கி யெடுத்துவிட்டது.

"உங்களுடன்கொஞ்சம்பேசவேண்டும்."

பெங்களூர் கவிபுரத்தில் ராமகிருஷ்ண ஆசிரமத்துக்கு எதிர் ரஸ்தாவில் புதிதாக வாங்கியிருக்கும் சபாபதியின் பங்களாவுக்குள் ராதா நுழைந்தபோது அவன் ஒரு ஸ்டுடியோ வானில் ஏறிக் கொண்டிருந்தான்.

ராதாவின் குரலைக் கேட்டவன் சற்றே அலட்சியமாகச் சிரித்துவிட்டு, "நான் அவசரமாகச் சென்னைக்குப் போக வேண்டும். பிறகு பேசிக் கொள்ளலாமே!" என்றான்.

"நீங்கள் சென்னை போவதைவிட ரொம்ப அவசரமான விஷயம் இது. தயவு செய்து எனக்கு அனுமதி கொடுங்கள், உங்களுடன் பேச. உங்களுக்கு நிறைய வேலை இருக்கிறது என்பதை நான் மறுக்கவில்லை. ப்ளீஸ்...."

"சரி, வாங்க..." என்று காரில் ஏற இருந்தவன் காரைப் போகும்படி கூறிவிட்டு மீண்டும் பங்களாவுக்குள் ராதா பின்தொடர நுழைந்தான்.

அவனிடம் எப்படிப் பேச்சைத் தொடங்குவது, எப்படிக் கொண்டு செல்வது, எப்படி முடிப்பது என்பது பற்றிப் பெற்றோருடன் கலந்து பேசி ஒரு திட்டத்தோடு வந்திருந்ததால் ராதாவுக்கு அதிகச் சிரமம் உண்டாகவில்லை.

"பெண்மை என்பது அனுபவிக்க மட்டும் தான் என்று எண்ணி விடாதீர்கள். ஆட்



கொள்ளப்பட வேண்டியதும்கூட. மூன்னை தற்கு உரிமையைத் தானாக எடுத்துக் கொள்ள எப்படித் துணிவு உண்டாகிறதோ, அதே உரிமை ஆட்கொள்ளவும் வர வேண்டும். அப்பொழுதுதான் மனிதனுக்குச் சிறப்பு.''

சபாபதி ஒன்றும் பேசவில்லை. அவனை முதன் முதலில் பார்த்தவுடனேயே அவன் யாருக்கு வக்கீலாக வருகிறான் என்பதை ஊகித்துக் கொண்டவன்தான் அவன்.

'' உங்களுக்கும் ஹேமாவுக்கும் நீங்கள் கலாகேந்திரம் வைத்து நடத்தும்போது ஏற்பட்ட உறவு எப்படிப்பட்டதோ எங்களுக்குத் தெரியாது. அதன் தன்மையும் எங்களுக்குத் தெரியாது. நீங்கள் உங்களுடைய வாழ்க்கையில் நல்ல வசதிகளை அடைந்து உயர்ந்த நிலைக்கு உயரும் போது உங்களைப் பற்றிய நினைவுகளை அறவே மறந்துவிட்டு அவள் வாழ முடிவு செய்தாள். அவளிடம் அடங்கிவிட்ட உங்களைப் பற்றிய ஆசை நினைவுகளை மீண்டும் புதுப்பித்ததே நீங்கள்தான். அடங்கிய பெருமூச்சுக்களை மீண்டும் அதிகமாக்கியதும் நீங்கள்தான். அந்த ஆசையைக் கிளப்பி விட்டு இப்பொழுது அவளை அழ வைத்திருப்பதும் நீங்கள்தான்......''

சபாபதி சிரித்துக் கொண்டே கேட்டான்:

''இப்பொழுது என்ன செய்ய வேண்டும்?'' அவனுடைய சிரிப்பிலிருந்தும் கேள்வியிலிருந்தும் எதையுமே ஊகிக்க முடியவில்லை.

'' அக்காவின் கண்ணீரைத் துடைக்க வேண்டும்.''

சபாபதி இதற்கு நேரிடையாகப் பதில் சொல்லாமல் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்து மௌனமாக நடந்தான்.

''இதில் யோசிக்க ஒன்றுமே இல்லை சார்! மனப்பூர்வமாக நீங்களே வலுவில் வந்து எங்கள் பெற்றோரிடம் கூறியிருக்க வேண்டும். அதைத்தான் என் பெற்றோரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்த அதீதமான எதிர்பார்ப்பின் விளைவுதான் ஹேமாவை உங்களுடன் அதிகமாகப் பழக அனுமதித்ததே!''

சபாபதியின் முகத்தில் குப்பென்று வியர்வை அரும்பியது. நெற்றியில் துளித்த வியர்வை அவனுடைய உள் உணர்வின் வேகத்தை உணர்த்தியது. என்றாலும் அவன் மனம் அவ்வளவு எளிதில் அதை ஏற்றுக் கொள்வதாக இல்லை.

''எனது திருமணத்தைப் பற்றி இப்போது நினைக்கவே நேரமில்லை. படத்துக்கு மேல் படம். கொஞ்சம்கூட ஓய்வே இல்லாமல், சென்னைக்கும், மைசூருக்கும் பம்பாய்க்குமாகச் சுற்றிக் கொண்டிருக்கிறேன்.''

''உங்களுக்கு ஓய்வில்லை என்பதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். இதற்கெல்லாம் ஓய்வில்லை என்று சொன்னால் அது சரியான பதிலே இல்லை. ஓய்வில்லை என்பதன் பொருள் மனமில்லை என்றுதான் அர்த்தம்.''

''போன வாரம் ஹேமா வந்தாள். கொஞ்சம்கூட மரியாதையில்லாமல் நான்கு பேருக்கு முன்னால் என்னை ஏசி விட்டுப் போய்விட்டாள். ஹேமாவை நான் ரொம்பவும் சாந்தமான பெண் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். இவ்வளவு விவேகமில்லாதவளாக இருப்பாள் என்று நான் நினைக்கவில்லை. அதனால் வேறு ஏதேனும் உதவிகள் தேவைப்பட்டால் சொல்லுங்கள். அவசியம் செய்கிறேன். உங்களுடைய ஏழைமை நிலை எனக்குத் தெரியும்.''

'' உங்களுடைய பெருந்தன்மைக்கு மிகவும் நன்றி ஸார். உங்களிடம் நாங்கள் வேறு எந்தவிதத்திலும் எந்தவித உதவியும் எதிர்பார்க்கவில்லை. அக்கா அப்படி யெல்லாம் பேசி விட்டாளே என்பதை மனத்தில் வைத்துக் கொண்டு அவளை ஒதுக்க எண்ணாதீர்கள்'' என்று கூறிவிட்டு விடைபெற்றான் ராதா.

வீட்டில் ஹேமா சபாபதியை வாய்க்கு வந்தபடி வசைமாரி பொழிந்து கொண்டிருந்தாள்; வாழ்வைச் சீரழித்து விட்டதாகவும், அவனுக்கு ஆண்டவன் தகுந்த தண்டனையைத் தருவான் என்றும், கண்ணீர் மல்கச் சாபம் கொடுத்துக் கொண்டிருந்தாள். ராதாவின் சமாதான முயற்சியும், தோல்வியில் முடிந்து விட்டது என்றவுடன், தன் வாழ்வே நாசமாகி விட்டது போல் பொருமினான்.

ஹேமா கண்ணீர் விடுவதையும், வாய் ஓயாமல் புலம்புவதையும் பார்த்து ராதாவுக்கே அவள் மேல் இரக்கம் உண்டாகி அவளைச் சதா சமாதானம் செய்யலானான்.

''உன்னுடன்கொஞ்சம் பேசவேண்டும்.''

குரல் கேட்டுத் திரும்பினான் ராதா. சபாபதி நின்றுகொண்டிருந்தான்.

''உள்ளே அப்பா அம்மா இருக்கிறார்கள்'' என்று இழுத்தான் ராதா.

''பரவாயில்லை. நீயே அவர்களிடம் கூறி விடு'' என்றவன், அவனை நெருங்கித் தணிந்த குரலில், ''வருகிற புதன்கிழமை விசுவேசுவரபுரம் வெங்கடரமணஸ்வாமி சந்நிதியில் ஹேமாவை ஏற்றுக் கொள்ள முடிவு செய்துவிட்டேன். எல்லா ஏற்பாடுகளையும் நானே செய்துவிட்டேன். இதை உன் பெற்றோரிடமும், ஹேமாவிடமும் கூறி விடு. நெருங்கிய நண்பர்களுக்கு மட்டும்தான் அழைப்பு. அதிலும் பத்துப் பேர்களுக்குக் குறைவானவர்களே கலந்து கொள்கிறார்கள். ஹோட்டல் காமத்தில் விருந்துக்கு ஏற்பாடு செய்யப் போகிறேன்'' என்றான்.

''இந்த நல்ல செய்தியைப் பெற்றோரிடம் நீங்களே வந்து சொல்லி விட்டுப் போங்களேன்'' என்றான் ராதா கெஞ்சலும் குழைவுமாக.

''இருக்கட்டும். இந்த நல்ல செய்தியை என் சார்பில் நீயே சொல்லிவிடு. புதன் கிழமை எட்டிலிருந்து ஒன்பதுக்குள் கார் அனுப்புகிறேன். அவளையும் உன் பெற்றோரையும் அழைத்துக் கொண்டு அங்கே வந்துவிட வேண்டியது உன் பொறுப்பு. நாளைக்கு ஹேமாவுக்கு வாங்கிய நகை, புடவைகளை அனுப்புகிறேன்...'' என்று கூறிவிட்டு வேகமாகப் போய் விட்டான் சபாபதி. ஆர்வமிகுதியால் அவன் போவதையே பார்த்துக் கொண்டு நின்ற ராதா வேகமாக உள்ளே போகத் திரும்பியபோது ஹேமா அங்கே மௌனமாக நிற்பதைக் கண்டு துடிப்புடன் அவள் கைகளைப் பிடித்துக் குலுக்கினான்.

''இதை அவரால் உள்ளே வந்து சொல்லி விட்டுப் போக முடியவில்லையாமா? அவ்

(ஸ்தாபிதம் : 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்காராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

தந்தி : 'EVERMANS', போன் : 85834 • தபால்பெட்டி : 414

மதராஸ் சிட் பண்டு 1961 ஆக்ட்படி ஒழுங்காகவும் சிட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 OF 1961)

### நீண்ட காலச் சீட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTM | ரூ. 200/- | ரூ. 10,000/- |
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகிய காலச் சீட்டுகள்

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000 | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500 | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250 | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள் : புது டில்லி – பம்பாய் – பெங்களூர் – கல்கத்தா




எமது வெள்ளி விழா ஆண்டு

எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

வளவு அலட்சியம், அவ்வளவு அக்கறை" என்றாள் ஹேமா சிரிப்புடன்.

"இப்படி யெல்லாம் பேசாதே, ஹேமா. அவரை வாய்க்கு வந்தபடி யெல்லாம் பேசி விட்டு வந்திருக்கிறாய். அவருக்கு எப்படி உன்னை வர மனம் வரும்?"

"ஒரு நல்ல சந்தர்ப்பம் நழுவி விடும் அளவுக்குப் பேசி வாய்ப்பை இழந்து நிற்க எந்தப் பெண்ணும் விரும்பமாட்டாள். நான் அப்படிப் பேசினேன் என்றால் அவர் என்னைப் பேச வைத்து விட்டார் என்பதை நீ புரிந்து கொள்ள வேண்டும். அன்று அவர் என்ன சொன்னார் என்று உனக்குத் தெரியுமா? 'கல்யாணத்தைப்பற்றிப் பேசறதா இருந்தால் நீ இங்கே வரவே வேண்டாம். சில நேரங்களில் சில அவசியத்துக்காகவும் உணர்ச்சிகளின் அரிப்புக்காகவும் நாமாக உண்டாக்கிக்கிற தாற்காலிக உணர்வையெல்லாம் நிரந்தரமாக்கிக் கொள்ள வேண்டும் என்று எதிர்பார்த்தால் அது நடக்காது ஹேமா! மனிதர்களுக்கு அன்றாடம் எத்தனையோ தேவைகள் இருக்கும். அந்தத் தேவைகள் ஒரு காரண காரியத்துடன்தான் தோன்ற வேண்டும் என்பதில்லை' என்றெல்லாம் அலட்சியமாகக் கூறினார்."

"ஹேமா! போனதையெல்லாம் மறந்து விடு. காரியம் கைகூடுகிற நேரத்தில் கெடுத்துக்கொள்ளாதே!"

"நீ சுலபமாகச் சொல்லிவிட்டே, ராதா! நான் இப்ப இருக்கிற என் நிலைமையைச் சொல்லட்டுமா! சொன்னால் நீ, அப்பா, அம்மா எல்லாரும் ரொம்ப அதிர்ந்து போய் விடுவீர்கள். எனக்கு இப்போ அவரைக் கல்யாணம் பண்ணிக்கணும்கிற எண்ணமே இல்லை.... அவரோட அவர் மனைவியாக வாழப்போகிறேங்கிறதைக் கற்பனையில் நினைக்கப் பார்க்கக்கூட வெறுப்பா இருக்கு....."

"ஹேமா.........!" பதறினாள் ராதா. "வேண்டாம், ஹேமா! உன்னோட முடிவு தவறான முடிவு! கடைசி நேரத்திலே எல்லாவற்றையும் கெடுத்து விடாதே! வழக்காடி வெற்றி பெறுகிற விஷயமில்லே இது! ரொம்ப நாசூக்கா மனிதாபிமானத்தோடே போராடி வெற்றி கொள்கிற விஷயம். தயவுசெய்து இப்படியோர் அதிர்ச்சியை எங்க எல்லோருக்கும் தர நினைக்காதே! இந்த ஏற்பாடு என்னமோ ரொம்பச் சுலபமா நடந்திருக்கிறதாக நினைக்காதே!" என்று மன்றாடினாள்.

"இல்லே ராதா! நான் நிச்சயமா உங்களுக்கெல்லாம் அதிர்ச்சியைத் தரமாட்டேன். 'என்னோட முடிவு' வேறேயா இருந்தாலும் 'என்னுடைய எண்ணத்தைத்தான்' சொன்னேன். அவரை நான் நிச்சயமாகக் கல்யாணம் செய்து கொள்ளத்தான் போகிறேன். அவர் சொல்லி விட்டுப் போன பிரகாரம் வருகிற புதன் கிழமை எங்கள் திருமணம் நடக்கும். இதை எதற்குச் சொல்ல வந்தேன் என்றால் என்னோட நிலை உனக்குத் தெரிந்திருக்கட்டும் என்பதற்காகத்தான்."

ராதா அதற்குப்பின் ஒன்றும் பேசவில்லை.

சபாபதி சொல்லி விட்டுச் சென்றபடியே அடுத்த நாள் மாலை விவாகத்துக்காக ஹேமாவுக்கென்று விலை உயர்ந்த பட்டுப் புடவைகள், ஒன்றிரண்டு நகைகள் எல்லாம் எடுத்து அனுப்பியிருந்தான். ராதாவின் ரேடியோ கம்பெனிக்குப் போன் செய்து அவன் அனுப்பியவை வந்து சேர்ந்ததைக் கேட்டுத் தெரிந்து கொண்டவன் புதன்கிழமை வரவேண்டியதை மீண்டும் ஊர்ஜிதப்படுத்தினான்.

புதன் கிழமை வந்தது.

ஹேமா சபாபதிக்குத் திருமணம் நடந்தது.




"இந்த வாட்சை ரிப்பேர் செய்ய என்ன சார்ஜ் ஆகும்?"
"பதினைந்து ரூபாய்!"
"நீங்களே விலைக்கு எடுத்துக்கொள்வதானால்?"
"பதினைந்து ரூபாய்!"
"சரி! இதை எடுத்துக்கொண்டு பணத்தைக் கொடுங்கள்!"
"சரி! ரிப்பேர் செய்துகொள்ள சார்ஜ் பதினைந்து ரூபா கொடுங்கள்!"

ஹாலில் மெல்லிய மணி ஓசை ஒலித்தது. சபாபதிக்கு இரவு வேளையில் ஏதும் தேவைப்பட்டால் அவன் படுக்கையில் நெற்றிக்கு நேரே தொங்கும் மின்சார பட்டனை அழுத்துவான். அறையில் படுத்திருக்கும் ராதாதான் விழித்துக் கொண்டு அவன் தேவைகளைக் கேட்டறிவாள்.

ஹேமா ஒரு நாள்கூட அதை மதித்து எழுந்து சென்றதில்லை. 'காலிங் பெல்'லின் ஒலிக்கு, ஹேமா ஒரு முறைகூட எழுந்து வராமல் ராதாவே வருகிறாள் என்பதால் சபாபதியும் இரவில் ஏதேனும் அத்தியாவசியத் தேவை இருந்தாலன்றி அந்த மணியை, அவசியமின்றி உபயோகித்ததில்லை. ஜுர வேகத்தில் சில நாட்கள் படுக்கையில் தூக்கமின்றிப் புரண்டு புரண்டு படுத்து முனகும் ஓசை கேட்டு ராதா தானாகவே எழுந்து சென்று அவனைக் கவனித்துக் கொள்ளும் நாட்களும் உண்டு.

"என்ன வேணும், உங்களுக்கு?"

நடு இரவு இரண்டு மணி இருக்கும். ஹால் விளக்கைப் போட்டுவிட்டு அந்த ஒளியின் உதவியுடன் உள்ளே செல்லாமல் நிலைவாயிற் படியில் நின்று கொண்டு கேட்டாள் ராதா.

"தலைவலி ரொம்ப வலிக்கிறது, ராதா! அந்தத் தலைவலி மருந்தைக் கொஞ்சம் எடுத்துக் கொடுத்து விட்டுப் போயேன். உன்னைக் கூப்பிட வேண்டாம் என்றுதான் நினைத்தேன். தலைவலி ரொம்பப் பொறுக்க முடியவில்லை."

''நீங்கள் எப்பொழுது வேண்டுமானாலும் என்னைக் கூப்பிடலாம். உங்களுக்கு உதவி செய்வதில் எனக்கு எந்தவித சிரமமும் இல்லை. எப்பொழுது வேண்டுமானாலும் என்னை எழுப்பலாம் என்பதற்காகத்தான் இந்த 'காலிங் பெல்' முறை...'' என்று கூறியவாறே உள்ளே வந்தவன் வரிசையாக மருந்து சீசாக்கள் வைக்கப்பட்டிருக்கும் அலமாரியில் இருந்து மருந்து பாட்டிலை எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

''உனக்கு ரொம்பத் தொந்தரவு கொடுக்கிறேன்; இல்லே?''

''அதெல்லாம் ஒன்றுமில்லே. இதைப் போன்ற எண்ணங்களுக்கே இடம் தராதீர்கள்....!'' என்று கூறி விட்டு ராதா மீண்டும் தன் படுக்கைக்கு வந்தாள்.

ராதா ரேடியோ பழுதுபார்க்கும் வேலையைத் தன் கடையில்தான் செய்வது வழக்கம். ரேடியோ ரிப்பேருக்கான உபகரணங்கள் எல்லாம் அவனிடம் உண்டு. ரேடியோ ரிப்பேரோடு அவனுக்கு மற்ற சில தொழில் நுணுக்கங்களும் தெரியும். தையல் மெஷின் ரிப்பேர், டைப்ரைட்டிங் ரிப்பேர் போன்றவைகளும் செய்வான். வாரத்துக்கு ஒரு தடவை அல்லது பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை வெளியே தெரிந்த இடங்களுக்கு 'விஸிட்' செய்வதும் அவனிடம் உள்ள ஒரு புது முறை. வீட்டில் உபயோகப்படுத்தும் ரேடியோ, டைப்ரைட்டர், தையல் மிஷின் போன்றவைகளில் ஏற்படும் சிறு சிறு பழுதுகளை வீட்டிலேயே சரிசெய்து தந்துவிடுவான்.

சபாபதிகூடச் சில சமயம், அவன் ரொம்ப அலுத்துப் போய் வீடு திரும்புவதைப் பார்த்து அனுதாபத்துடன் கேட்பான்:

'' உன்னிடம் இருக்கிற தொழில் திறமைக்கு வாடிக்கைக்காரர்கள் உன் கடையைத் தேடித்தான் நிறைய வருகிறார்களே. வெளியில் இப்படிச் சுற்றி உடம்பைக் கெடுத்துக் கொள்ள வேண்டுமா ?''

''அப்படியில்லே. ரிப்பேர் செய்யும் இடத்தில்தான் அதைக் கொண்டு வந்து பழுது பார்க்கவேண்டும் என்ற அவசியமில்லாத சிறு சிறு ரிப்பேர்கள் எவ்வளவோ உண்டு. இந்தச் சாதாரண ரிப்பேர் தெரியாதவர்கள் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள்? ஐந்து ரூபாய்க்கு முடியும் ஒரு ரிப்பேரை வெளியே இருபது, இருபத்தைந்து என்று கொடுத்து ஏமாறும் ஏமாளிகளும், ஏமாற்றும், ஏமாற்றுக்காரர்களும் எத்தனையோ பேர்கள் உண்டு. இப்படி நான் வெளியே செல்வது நான்கு மனிதர்களோடு பழகி அவர்கள் உள்ளத்தில் நான் ஒரு திறமையான தொழிலாளி, ஏமாற்றாதவன், நியாயமானவன், நம்பகமானவன் என்ற எண்ணத்தை ஏற்படுத்த ரொம்பவும் உதவிகரமாக இருக்கிறது. மக்கள் மனத்தில் நல்ல நம்பிக்கையைப் பெற்றுவிட்ட எந்தத் தொழிலும், எந்தத் தொழிலாளியும் முன்னேற்றத்தைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லே'' என்பாள்.

இணைப்பு விட்டுப் போயிருந்த ரேடியோ ரெஸிஸ்டர் ஒன்றை சோல்டரிங் ஐயர்ன் அறுபது வாட் ஒயல் பிட் ஒன்றினால் இணைத்துக் கொண்டிருந்தாள் ராதா. வாசலில் ஆட்டோ ஒன்று வந்து நிற்கும் ஒலிகேட்டது.

''குமரப்பா! யார் பார் !'' என்று குரல் கொடுத்தாள் ராதா !

அதற்குள்ளாக ஆட்டோவில் வந்து இறங்கியவன் பங்களாவை நெருங்கி வந்து உள்ளே எட்டிப் பார்த்தான்.

'' யாரைப் பார்க்கிறீர்கள் ?'' என்று கேட்டாள் ராதா.

''மிஸ் ஹேமா அம்மா இருக்காங்களா?''

''இல்லையே !''

'' அவங்களைப் பார்க்கத்தான் வந்தேன்.''

''நீங்கள் யார் ?''

'' அவங்க இல்லையா?''

கேட்ட கேள்விக்கு வந்தவன் நேரிடையாகப் பதில் சொல்லத் தயங்குவதை உணர்ந்தவளாக, ''ஹேமா இல்லே. எங்கோ வெளியில் போவதாகச் சொல்லிவிட்டு மாலை நான்கு மணிக்கே வெளியே போய் விட்டாள்'' என்றாள்.

வந்தவன் பதிலேதும் சொல்லாமல் திரும்பிக் கொண்டிருந்தான். மீண்டும் அவனிடம் யார் என்பதைக் கேட்க அவள் தயாராக இல்லே. அவன் போவதைப் பார்த்துவிட்டு உள்ளே பார்த்தாள். இரண்டாவது வாயிற்படிக்கு நடுவில் சக்கர வண்டியில் சபாபதி வாசலையே கவனித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து இலேசாக அதிர்ச்சியுற்றாள்.

''ஹேமா வந்தால் ஹரிராம் வந்துட்டுப் போனதாகச் சொல்லுங்க. பிறகு அவங்களைச் சந்திக்க மற்றதைச் சொல்லிக்கறேன்!'' என்றான் சென்றவன் நின்று திரும்பிப் பார்த்து.

''ஹரிராம்'' என்று தனக்குள் ஒரு முறை முணுமுணுத்துக் கொண்டபோது வாசலில் காத்துக் கொண்டு நின்ற ஆட்டோ புறப்படும் ஓசை கேட்டது.

''யார் அது, யார் வேணுமாம்?'' என்று உள்ளிருந்தபடியே சபாபதி கேட்டான்.

சில விநாடிகள் தனக்குள் ஏதோ எண்ணி முடிவு செய்து கொண்டவளாக ராதா, ''சிவாஜி நகர்லே ஒரு வீட்டிலே ரேடியோ ஒன்னு ரிப்பேராம். அந்தப் பக்கம் 'விசிட்' வர அன்னிக்கு வந்து பார்க்கச் சொல்லி விலாசம் கொடுத்துச் சென்றார்'' என்று கூறி மழுப்பினாள்.

ராதா மீண்டும் கடைக்கு வந்து விட்டாள்.

மெதுவாக இருட்டிக் கொண்டு வந்தது.

மணி ஏழு அடிப்பதற்குள் கடையை மூடும்படி கஞ்சமலையிடம் கூறி விட்டாள்.

''சாப்பிடலாமா?''

வெளியிலிருந்து வந்த ஹேமா, தன் அறைக்குச் சென்றவள், வெகு நேரம் வரையில் சாப்பிட வராமல் இருக்கவே உள்ளே வந்து அழைத்தாள் ராதா.

''வேண்டாம்..... நான் டிபன் சாப்பிட்டுட்டேன்.'' – ஹேமா பதில் சொல்லிவிட்டுக் கையில் கொண்டு வந்திருந்த படங்கள் அடங்கிய சினிமா பத்திரிகை ஒன்றை ரசிப்பதில் லயித்தாள். சில விநாடிகள், அவளையே


ஆஹா...என்ன
இன்பம்!
லக்மே
லேவெண்டர்
பியூடி டால்க்
Lakmé
LAVENDER BEAUTY TALC
உங்களுக்குப் புதியது!
லேவெண்டரிலே
மிகச் சிறந்தது!
அன்றலர்ந்த மலர்களின் நறுமணத்தை
லக்மே லேவெண்டரில் புகுத்தியிருக்க
வேண்டும்! அதனால்தான் அத்தனை கோடி
இன்பம், அதனை மேனியிலே தூவும்போது!
அது உங்கள் மேனியை பட்டுப்போலாக்கிப்
பராமரிக்கிறது. அதன் இதமான நறுமணம்
நாள்முழுதும் உங்கள் மேனியுடன் உறவாடு
கிறது; முகப் பொலிவைப் பன்மடங்கு
பெருக்குகிறது!
ASP/L-81

பார்த்தவண்ணம் இருந்த ராதா பிறகு உள்ளே போய் விட்டாள்.

**இ**டன் வேலைகளை முடித்துக்கொண்டு வரும் போது ஹேமா கண்களை மூடிப் படுத்திருந்தான். அவன் மார்பின் மேல் அவன் பார்த்துக் கொண்டிருந்த ஆங்கில சினிமா வார சஞ்சிகை கிடந்தது. மெதுவாக அதை எடுத்த போது ஹேமா கண்களை ஒரு முறை திறந்து மூடினான்.

"மாலை நான்கு மணி இருக்கும் ஹரிராம் என்பவர் உன்னைத் தேடி வந்தார்." ராதா இப்படிக் கூறிக் கொண்டே சினிமா சஞ்சிகையைப் பிரித்துப் பார்த்தாள்.

கண்களைத் திறந்த ஹேமா ராதாவையே பார்த்தான்.

"என்ன கேட்டார்?"

"உன்னைக் கேட்டார்."

"என்ன சொல்லி விட்டுப் போனார்?"

"உன்னைக் கேட்டார். நீ இல்லை என்றேன். உன்னைப் பிறகு சந்தித்துப் பேசிக் கொள்வதாகச் சொல்லி விட்டுப் போய்விட்டார்.... யார் அவர்? உன்னைத் தேடிக் கொண்டு இங்கே ஏன் வர வேண்டும்?" மனத்தில் உண்டான தயக்கத்தையும் மீறிக் கேள்வியைக் கேட்டு விட்டாள் ராதா.

"ஹரிராம்... சினிமா உலகில் முக்கியமானவர்.... டான்ஸ் குழு ஒன்று வச்சிருக்கார். அந்தக் குழுவுக்கு அகில இந்திய மார்க்கெட் இருக்கு. சென்னை சினிமா உலகத்தில் அவர் நடனக் குழுவுக்குத் தனி மதிப்பு இருக்கு. அதோ நீ வைச்சிண்டு இருக்கியே, பத்திரிகை..."

"எனக்கு நீ சொல்வதில் எல்லாம் அவ்வளவு ஈடுபாடு இல்லை, ஹேமா! நான் கேட்க வந்த விஷயம் வேறே. அவரை உனக்கு எப்படித் தெரியும், உனக்கு அவரை எதற்குத் தெரியணும்....?"

ஹேமா திரும்பிப் படுத்துக் கொண்டு இலேசாகச் சிரித்தான்.

"இந்தச் சிரிப்புக்கு அநேக அர்த்தங்கள் உண்டு, ஹேமா... முடிந்தால், விருப்பமிருந்தால் நேரிடையாகப் பதில் சொல். இல்லையென்றால் பதில் சொல்ல முடியாது என்று கூறிவிடு. இரண்டுமில்லாமல் சிரித்து மழுப்பாதே!"

"நான்ஸென்ஸ்... மூடு, வாயை! நீ ஒன்றும் என்னைக் கேள்வி கேட்க வேண்டாம். நான் உனக்குப் பதில் சொல்லவும் தேவை இல்லை."

ராதா அதற்கு மேல் அவனிடம் ஒன்றும் கேட்கவில்லை. அவனுக்கு அருகில் தன் படுக்கையை விரித்தாள். விளக்கை அணைத்து விட்டு 'நைட் லேம்ப்'பைப் போட்டுவிட்டுப் படுத்தாள்.

"சோதனையான கால கட்டங்கள் பலவற்றைத் தாண்டி வந்திருக்கிறோம். பிறப்பாலே நாம் எவ்வளவு ஏழைகள் என்பது நான் சொல்லித்தான் உனக்குத் தெரிய வேண்டும் என்பதில்லை. அப்பா தபால்காரராக இருந்து சேர்த்துவைச்ச சொத்தைவிட நம் குடும்பத்துக்காகக் கடன்பட்டதுதான் அதிகம். வீட்டு வாசலிலே நின்று கொண்டு பால்காரி, தயிர்க்காரி, விறகுக் கடைக்காரன் எல்லாரும்



"வேலை இல்லாமல் திண்டாடுவதாகச் சொன்னாயே! உனக்கு மாதம் 150 ரூபாய் சம்பளத்தில் வேலைக்கு ஏற்பாடு செய்து தருகிறேன். பதிலுக்கு நீ எனக்கு ஓர் உதவி செய்யணும்."

"என்ன சார்?"

"முப்பது நாட்களுக்கு ஒரு தடவை நீ எனக்கு முப்பது ரூபாய் நன்கொடை தரவேண்டும்."

சத்தம் போட்ட நாளையெல்லாம் நீ மறந்து போயிருக்க மாட்டே....!"

"போதுமே உன் புலம்பல்! கொஞ்சம் பேசாமே இருக்க மாட்டே!" என்று ஹேமா சலித்துக் கொண்டான்.

"நம்மை எஸ். எஸ். எல் ஸி. படிக்க வைக்கிறதுக்குள்ளே குடும்பத்தில் எவ்வளவு ஏற்ற இறக்கங்கள் பார்த்தியா! நம்முடைய குடும்பத்தில் இவ்வளவு வறுமை இருந்தாலும் மான அவமானத்துக்குப் பயந்து இருக்கிறதிலே பெருமைப்பட்டோம்."

குன் கொட்டினான் ஹேமா!

"வீட்டின் வறுமையை ஓட்ட நீ மேற்கொண்ட துறையைவிட, நான் மேற்கொண்ட துறையைத்தான் நம் அப்பா, அம்மா சந்தோஷமாக வரவேற்றார்கள். நீ ஏற்றுக் கொண்ட துறையை நம் அப்பா அம்மா ஏற்காததற்கு அதன் மேல் அவர்களுக்கு உண்டான வெறுப்பு காரணமில்லை. உனக்கு அதில் இல்லாத அநுபவக் குறைவு தான் காரணம். ஆனால் நீயோ பிடிவாதமாக, நடராஜா கலா கேந்திரத்தில் சேர்ந்து விட்டாய்."

"நீ இப்போதைக்கு ஓயப் போவதில்லை. சொல்லு, கதை கேட்கிற மாதிரி இருக்கு" என்றான் ஹேமா, அவள் உணர்ச்சிகளை அவமானப்படுத்துவது போல.

"நான் கதை சொல்ல இதை ஆரம்பிக்கவில்லை, ஹேமா. இந்தப் பெரிய பின்னணியில் எது நம் குடும்பத்தில் பாதுகாக்கப்பட்டு வந்ததோ, பாதுகாத்து வரவேண்டும் என்று நம் அப்பா அம்மா விரும்பினார்களோ அதைப் பற்றித்தான் சொல்ல வரேன். மான அவமானம் நாலு பேர் நாலு விதமாப் பேசிவிட இடம் தந்துவிடக் கூடாது என்பதற்காகத் தான். நம் விஷயத்தில் கண்காணிப்பாக இருந்தும்கூட நீ இவரிடம் ஒரு சந்தர்ப்பத்தில் தாறுமாறாகப் பேசி, மீண்டும் நெருங்க முடியாத சூழ்நிலையை உண்டாக்கிக் கொண்டு தவித்த தவிப்பு எனக்குத் தெரியும்.

டரிசை அவருடன் சேர்ப்பதில் நான் தோல்வி அடைந்து விடுவேனோ என்று எவ்வளவு கவலைப்பட்டார்கள் தெரியுமா? உன்னிடம் இவ்விஷயத்தில் வேகம் இருந்த அளவு முன் விவேகம் இல்லேங்கறது எல்லோருக்கும் தெரிந்ததுதான். எப்படியோ விவாகம் நடந்தது. ஓரளவுக்கு எல்லோருக்கும் நிம்மதிதான். ....ஆனால் அதற்குப் பின்னால்... உன்னுடைய மனோபாவம்... உன்னுடைய மனோபாவத்தினால் அவரிடம் காணப்பட்ட பற்றில்லாத தன்மை! நீ ஒரு முனையையும் அவர் ஒரு முனையையும் அர்த்தமற்ற இலேச உணர்வுகளுக்கு மனத்தைப் பலி கொடுத்து இழுத்துக்கொண்டு நிற்கிறீர்கள். தாம்பத்தியப் பிணைப்பு என்பது தாலியில் போட்ட மூன்று முடிச்சுகளோடு நின்று விட்டன. ஒருவருக்கொருவர் இலேசத்தைத் தளர்த்திக் கொண்டு அருகில் வர வேண்டும் என்ற நினைப்பே அற்றவர்களாக இருக்கிறீர்கள். அது ஒரு நிலை என்றாலும்? இன்று அவருக்கு ஏற்பட்டிருக்கிற மிகப் பெரிய வாழ்வின் விபத்துக்குப் பிறகும் கூட நீ இப்படி நடப்பது....?''

ஹேமா திரும்பிப் படுத்திருந்தாள். அவள் தூங்குகிறாளா, விழித்துக் கொண்டிருக்கிறாளா என்று தெரிந்து கொள்ள முடியவில்லை.

ராதா அதற்குப் பின் பேசவில்லை. அறையில் மங்கிய விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

அடிமனத்தில் மீண்டும் சில சம்பவங்களின் எதிரொலிகள் விளம்பின.

''அவர் என்னிடம் அன்பாகவே இல்லை. கணவன் — மனைவி என்ற உறவின் போலிப் பூச்சான பாவனைகூட இல்லை. அப்படிப்பட்ட இடத்தில் நான் எப்படியம்மா காலம் முழுதும் இருக்கிறது?''—

தாயார் ஜானகியின் முன்னால் நிற்கிறாள் ஹேமா. இதை அவள் சொல்லும்போது அந்தத் தன்மைக்கான சோகமோ, ஆதங்கமோ, ஏமாற்ற உணர்வுகளின் ஆழமான சாயலோ இல்லை. அதற்குப் பதிலாக வீம்பின் சாயல் தொனிக்கிறது.

''அவர் உன்னிடம் அன்பாக இல்லை என்று சொல்கிறாயே. நீ அவரிடம் மனைவி என்ற பணிவுடன் நடந்து கொள்ளுகிறாயா? அவர் அன்பைப்பெற நீ முயன்றது உண்டா?''

ஹேமா ராதாவைக் கண்களில் கனல் தெறிக்க நோக்குகிறாள்.

''மரியாதை கொடுத்து மரியாதை பெறும் சாதாரண நட்பைப் போன்றதல்ல தாம்பத்தியம் — பணிவும், அடங்கிப் போகும் சுபாவமும் உன்னிடம்தான் அதிகம் இருக்க வேண்டும்.''

''உன் புத்திமதிகள் எனக்குத் தேவையில்லை.''

''தேவை இருக்கிறதோ இல்லையோ. இப்பொழுது தேவைப்படுவது குடும்ப நலன். அமைதியான சூழ்நிலை.. — ஏம்மா சும்மா நிக்கறே? நீதான் கேளேன். இவள் எப்படி அத்தானிடம் நடந்துக்கறாங்கறதை. கேளேன்! புகுந்த இடத்தில் தன்னைச் சரிக்கட்டிக் கொண்டு வாழக் கத்துக்கொண்டு விட்டாளா என்று கேளேன்...'' தாயாரைப் பார்த்து வினவினாள் ராதா.

''அம்மா! அவளைச் சும்மாஇருக்கச் சொல். இல்லையென்றால் எனக்குக் கெட்ட கோபம் வரும். என் விஷயத்தில் அனாவசியமாகத் தலையிட வேண்டாம்...''

''நான் தலையிடலே ஹேமா. நேற்று அவர் என்னோட டெலிபோன்லே பேசினார். அதனால் தலையிட வேண்டி யிருக்கு. அவர் என்னிடம் இது பற்றிப் பேசாமல் இருந்திருந்தால் நான் உன்னுடைய விவகாரத்தில் தலையிட அவசியமே இருந்திருக்காது. அவர் வார்த்தைகளுக்கு நீ மதிப்பு வைப்பதில்லையாம். மனைவி என்ற ஸ்தானத்தில் உனக்குரிய கடமைகளைச் சரிவரச் செய்வதில்லை என்பதை அவர் பேச்சிலிருந்து தெரிந்து கொண்டேன்.''

''அவர் 'மனைவி' என்று என்னை மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். போன வாரம் ஒரு சிறு சச்சரவின்போது என்ன சொன்னார் தெரியுமா? அவர் என்னை ரொம்பவும் விருப்பத்தோடு மனமுவந்து கல்யாணம் செய்து கொள்ளவில்லையாம். ஓர் இயற்கையின் பலவந்தத்தால்தான் இதைச் செய்தாராம். என்னை அவர் புறக்கணித்திருக்கவும் முடியுமாம்'' — இதை சொல்லும்போது ஹேமா துக்கப்படவோ, பதற்றப்படவோ இல்லை. மாறாக இலேசான ஏளனச் சிரிப்போடுதான் கூறினாள்.

''ஹேமா! இந்த விவகாரத்தைத் தீர்த்துக் கொள்ளும் முறையில் நீ அதிகக் கனிவைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன். எவ்வளவுதான் அவர் உன்மேல் அன்பில்லாமல் நடந்து கொண்டாலும், அதை நீ எதிர் முனையில் நின்று எதிர்க்கும் எதிர்ப்பு மனப்பான்மையை விட்டு விட்டு வேறு விதமாக அணுகினாலும் நல்லது.'' ஹேமாவுக்கு சமாதான யோசனை கூறுவது போலக் கூறினாலும், உண்மையில் ஹேமாவின் மேல்தான் ராதாவுக்கு இரக்கம் உண்டாயிற்று. ஏனென்றால் நேரில் போய், அவள் ஹேமாவுக்காகப் பரிந்து பேசியபோது அவர் பேசிய பேச்சு அவரைப் பற்றி நல்லெண்ணம் கொள்ளச் செய்வதாகவா இருந்தது? ஆனால் அவராகவே அல்லவா ஹேமாவை மணம் புரிந்துகொள்ள முன்வந்தார்? ஹேமாவும் 'எனக்கு இப்போ இவரைக் கல்யாணம் பண்ணிக்கிற எண்ணமே இல்லேடி. அவர் மனைவியாக வாழப் போறேங்கறதை நினைச்சுப் பார்க்கக்கூட வெறுப்பா இருக்கு' என்றவள்தானே! இரண்டு முனையிலும் அன்பின் சார்போ, காதலின் துடிப்போ இல்லை. இருவருமே ஒருவருக் கொருவர் மாறுபட்ட கருத்துக் கொண்டவர்களாகி விட்டார்கள்.

''ஹேமா!'' ராதா அழைத்தாள். இரவு மணி ஒன்றும் அதிகமாகிவிடவில்லை. சபாபதியின் அறை 'டிராயிங் ரூம்'ல் 'டிரான்ஸிஸ்டர்'ரில் தபேலாவின் தனி ஆவர்த்தம் ஒலிப்பது கேட்டது.

''ஏன்?'' என்றாள் ஹேமா திரும்பாமலே.

''ஹரிராம் உன்னைத் தேடிக்கொண்டு எதற்காக வந்தார்? என்னிடம் சொல்லக் கூடாதா?''

ஹேமா சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டுப் படுக்கையை விட்டு எழுந்தாள். அறை விளக்கைப் போட்டுவிட்டு டம்பப் பையைத் திறந்து அதிலிருந்து நான்கைந்து புகைப்

இயற்கையின் படைப்போ, மாந்தரின் கண்டு
பிடிப்போ-எதையும் பக்குவமாக பாக் செய்யவே,
ஆந்திரப் பிரதேஷ் க்ராப்ட் பேப்பர்



ஆந்திரப் பிரதேஷ் பேப்பர் மில்ஸ்

# கனகச்சிதம், பாதுகாப்பு !



படங்களை அவளிடம் நீட்டினாள். படுத்துக்கொண்டிருந்த ராதா எழுந்து உட்கார்ந்து அதை வாங்கிப் பார்த்தாள். எல்லாம் ஹேமாவின் படங்கள். நாட்டியமாடுகையில் வெவ்வேறு கோணங்களில் கவர்ச்சியுடன் எடுக்கப்பட்டவை.

ஹேமா எப்பொழுதுமே நல்ல உயரமாகத் தோன்றும்படியாகப் பூக்கள், இலைகள் 'கொல்' லென்று வாரி இறைக்கப்பட்ட டிஸைன்களில் பிரின்டட் வாயில்கள்தான் கட்டுவாள். சாதாரண வாயில் புடவை கட்டிக்கொண்டிருக்கும்போதே பளிச்சென்று தோன்றுவாள். கைகளும், கழுத்தும் கொஞ்சம் நீளம்தான். வழித்து விட்டாற்போன்ற மழுமழுப்பான உடம்பு வாகு. கூர்மையான நாசி. உதடு செப்புப் போல. கண்களின் நீளமும், கருவிழியின் காந்தமும் அதிகம். மையிட்டுக் காதுவரை நீட்டிக்கொண்டு விட்டால் 'இவள் என்ன இத்தனை அழகாக இருக்கிறாள்' என்று சொல்லத் தோன்றும்.

இரண்டு புகைப்படங்கள், பரதநாட்டியத்தைப் பிரதிபலிப்பவை. மற்றவை மூன்றும் வெவ்வேறு உடைகளில். இவைகளைத் தவிர அவள் வழக்கமாக அணியும் ''பாரகான்'' வெளிர்நீல வாயிலே உடுத்திக்கொண்டு கைகள் இரண்டையும் பின்புறம் கட்டிக்கொண்ட நிலையில் யாரோ அழைத்து வெடுக்கெனத் திரும்பிப் பார்க்கிற பாவனையில், இலேசான புன்னகையுடன் ஒரு புகைப்படம். இதே 'போஸி'ல் வேறு ஒரு பிரபல நடிகையின் படத்தை எப்பொழுதோ சஞ்சிகையில் பார்த்த ஞாபகம் வந்தது ராதாவுக்கு. அதே பாவனையில் இவளும் நின்றாள். பூரித்த வளர்வின் லாவண்யம் பருவ எழிலின் வெளிக்கோடுகள் பளிச்செனத் தெரியும்படி அது அற்புதமாக ''டச்'' செய்யப்பட்டிருந்தது. கண்களும், கழுத்தும், மார்பும், மார்புக்குக் கீழே இலேசாகத் தெரியும் பிடிப்பான உடம்பும், இடுப்பின் எடுப்பும், நர்த்தகிக்கே உரித்தான மயக்கும் கால்களின் சதைப் பிடிப்பும்.....

ராதா வியப்புடன் ஹேமாவைப் பார்த்தாள்.

''எல்லாம் ஹரிராமின் ஏற்பாடு. சென்னையில் இரண்டு தமிழ்ப் படங்களுக்கு ஏற்பாடு செய்யப் போகிறார். அவருடைய குழுவிலே சேரும்படி தொந்தரவு செய்கிறார். நான் அதற்குச் சம்மதம் இன்னும் தரவில்லை. சினிமா சான்ஸ் வந்தால் சம்மதிக்கலாமென்று இருக்கிறேன். அநேகமாக அந்த சான்ஸ் வந்த மாதிரிதான். போன வாரம் சென்னையிலிருந்து இங்கே வந்திருந்த ஒரு பிரபல சினிமா டைரக்டரிடம் என்னை அறிமுகப்படுத்தி வைத்தார்.''

ராதா புகைப்படத்தை ஹேமாவிடம் நீட்டிப் பெருமூச்சு விட்டவாறே ஹேமாவை நிமிர்ந்து பார்த்தாள். ''உன்னுடைய தீர்மானங்கள் சரியானது என்று உனக்குப் படுகிறதா, ஹேமா?'' என்று கேட்டாள் குழைவுடன்.

''முடிவுபெற்ற தீர்மானங்கள் என்பது மனிதனிடம் எப்பொழுதுமே கிடையாது ராதா. அது சூழ்நிலைக்குத் தக்கபடி மாறிக்கொண்டே தானிருக்கும். தீர்மானங்கள் அதைச் சார்ந்து வரும் முடிவுகள், அந்த முடிவுகளை எடுக்கப் பின்னின்று உந்தும் நிர்ப்பந்தம் இவையெல்லாமே ஒரு முனைப்பாக நிற்கும்போது கேவலம் இவைகளைத் தாண்டி ஒருவன் அல்லது ஒருத்தி எடுக்கும் தீர்மானம் என்பது ரொம்பக் கடைசி நிலை...''

''சூழ்நிலைக்கு ஏற்றபடி மாறும் நிலை என்பது உன்னைப் பொறுத்தவரையில் அர்த்தமற்றதாக எனக்குப் படுகிறது ஹேமா! அர்த்தமற்றதாக மட்டுமல்ல; அனுசிதமாகவும் படுகிறது.''

''அனுசிதம் அனுசிதமற்றது என்பதை நிர்ணயிக்க வேண்டியது உறவின் தன்மையில் பிறக்கும் புனிதமே யன்றி வெறும் பாவனையில் பிறக்கும் நடிப்போ போலித்தனமாகப் போட்டுக்கொண்டு ஆடும் வேஷமோ அல்ல.''

''ஹேமா, நீ என்ன சொல்கிறாய்?''

''நாங்கள் போலித்தனமாகப் போட்டுக்கொண்டு வெளியாருக்காக ஆடுகிற நாடக ஆட்டத்தில் என்னுடைய போலி வேஷத்தைக் கலைத்துக் கொள்ளப் போகிறேன்.''

''புரியும்படியாகச் சொல்லேன்.''

''சொல்லிப் புரிய வைக்கக் கூடிய விஷயமல்ல இது. நீயே பொறுத்திருந்து புரிந்துகொள்.''

விளக்கை அணைத்துவிட்டுப் படுத்து விட்டாள் ஹேமா.

எந்த வேஷத்தையோ கலைத்துக் கொள்ளப் போகிறேன் என்கிறாளே! எந்த நாடகத்தையோ முடித்துக் கொள்ளப் போகிறேன் என்கிறாளே? இந்த அழகான உடம்புக்குள் இவ்வளவு வக்கிரங்கள் ஏன்? நிதானத் தன்மையையும், சகிப்புத் தன்மையையும் கொண்டு இவள் தன் வாழ்க்கையைச் சீர்ப்படுத்திக் கொள்ளும் எண்ணமே இல்லாதவளாகப் போய்க் கொண்டிருக்கிறாளே!

ஹேமாவைத் திரும்பிப் பார்த்தாள் ராதா. அவள் மீண்டும் பழையபடியே திரும்பிப் படுத்துக் கொண்டிருந்தாள்.

'ஆல்பம்' ஒன்றைப் புரட்டிக் கொண்டிருந்தான் சபாபதி.

''ஆல்பத்தில் என்ன பார்க்கிறீர்கள்?''— ராதா தன் வேலையினிடையே கேட்டாள்.

''ராதா, இங்கே வா'' — சபாபதி ஆல்பத்தைப் புரட்டிக் கொண்டே அவளை அழைத்தான்.

''இதைப் பார்த்தாயா!'' — ஆல்பத்தில் தன்னுடைய நாட்டிய போஸ் ஒன்றை அவளிடம் காட்டினான். அதை அவள் அடிக்கடி பார்த்திருக்கிறாள். இப்பொழுது அதில் புதிதாக ஒன்றும் இருக்கப் போவதில்லை. என்றாலும் அவன் பார்க்கச் சொன்னான் என்பதற்காகச் சக்கர நாற்காலியில் அமர்ந்திருந்த அவனுக்குப் பின்னால் வந்து நின்றுகொண்டு அதைப் பார்த்தாள்.

''இது ஒரு கிராமிய நடனத்தின்போது எடுக்கப்பட்ட புகைப்படம். இதோ பார்த்தாயா, இதைக்கூட நீ பார்த்திருக்கலாம். ஹேமா இந்தக் கதக் உடையில் எவ்வளவு அழகாக இருக்கிறாள், பார்த்தாயா?'' என்றான்.

''அவளுக்குப் பரத நாட்டியத்தில் முறையான பயிற்சி குறைவுதான். என்றாலும் சில அடவுகளைப் பாவ பூர்வமாக ஆடுவாள்.

சாஸ்திர ரீதியில் அதில் தவறுகள் காணவே முடியாது. சாயல் அவ்வளவு அற்புதமாக இருக்கும். பரத நாட்டியத்துடன் மற்ற வகை 'ஓரியண்டல்' நடனங்களைச் சொல்லிக்கொடுக்கிறபடி ஆடுவாள்.... இதோ பார்த்தாயா, இந்தப் புகைப்படத்தை. ரதி–மன்மதன் நடனம்....இதில் மன்மதன் யார் தெரிகிறதா!''

சபாபதி காட்டிய அந்தப் படத்தை அவள் அப்பொழுதுதான் அந்த ஆல்பத்தில் பார்க்கிறாள்.

''இது ஏது? இதை நான் இந்த ஆல்பத்தில் பார்த்ததே யில்லையே!''

''நீ பார்த்திருக்க முடியாது. இன்னும் என் பெட்டியில் நிறைய இருக்கின்றன. நேற்று அவைகளில் இதை மட்டும் பொறுக்கி எடுத்தேன். ஹேமா ரதியாகவும் 'ஹரிராம்' மன்மதனாகவும் பாவம் பிடித்து நிற்பது எவ்வளவு அழகாக இருக்கிறது பார்த்தாயா!''

''இவர்.... இவர்?....''

''மல்ஹாரி–ராவ் என்று பெயர். பிறகு ஹரிராம் என்று பெயரை மாற்றிக்கொண்டான். தென்னிந்திய மற்றும் வட இந்திய சினிமா உலகில் நுழையத் தீவிர முயற்சியில் அன்று இருந்தான். நல்ல நாட்டியக்காரன். பரத நாட்டியம், கதக் இவற்றோடு குச்சுப் புடியிலும் ஞானம் படைத்தவன்... நல்ல உழைப்பாளி... ஆர்வம் மிக்கவன்.''

''இவனை உங்களுக்குத் தெரியுமா?''

''ஓரளவு தெரியும். முன்பு எனது குழுவிலே சில அயிட்டங்களுக்கு ஆட நானே அழைப்பேன். சாதனா என்ற பார்ஸிப் பெண் ஒருத்தி அவனிடம் நாட்டியம் பயின்றாள். அவனுக்கும் அவளுக்கும் ஆரம்பத்தில் தொடர்பு ரொம்ப சோஷியலாக இருந்தது. அவள் நல்ல அழகி, எடுப்பான முகவெட்டு. கிட்டத்தட்ட ஹேமாவைப் போலவே கூட இருப்பாள். ஹேமாவைப் போல அவ்வளவு உயரமில்லை. என்னுடைய நாட்டியக் குழுவுக்கு வரும்போது சில சமயங்களில் அவளையும்கூட அழைத்து வருவான். சமீபத்தில் அவள் பாம்பே மார்க்கெட்டில் ஒரு படத்தில் ஒப்பந்தம் ஆகிப் பிரபலமாகிவிட்டாள். இப்பொழுது அவள் அங்கே ஒரு முன்னணி நடிகையாகவும் ஆகிவிட்டதாக சினிமா சஞ்சிகைகள் கூறுகின்றன.''

''ஹரிராமுக்கும் அவளுக்கும் உள்ள தொடர்பு?''.... என்று இழுத்தாள்.

''அவனை அவள் இப்பொழுது லட்சியம் செய்வதில்லை. இரண்டு முறை அவளைப் போய்ப் பார்த்துவிட்டு அவமானத்துடன் திரும்பி வந்து விட்டானும்.''

''இது எப்படித் தெரியும் உங்களுக்கு?''

''எனக்கு இதெல்லாம் சொல்வதற்கா ஆள் இல்லை? அதுதான் வாரத்துக்கு இரண்டொன்று நாட்கள் சினிமா சம்பந்தப்பட்டவர்கள் வந்து போய்க் கொண்டு இருக்கிறார்களே? இப்பொழுதுகூட அவனுக்குச் சென்னையிலும் இங்கேயும் மெதுவாக ''சான்ஸ்'' அதிகமாக வந்து கொண்டிருப்பதாகக் கேள்வி....''

ராதா ஆல்பத்தைச் சபாபதியிடம் கொடுத்து விட்டு உள்ளே போய்விட்டாள்.

ஹரிராமுக்கும் ஹேமாவுக்கும் உள்ள தொடர்பு இன்றைய நிலையில் எப்படிப்பட்ட ஸ்திதியில் இருக்கிறது என்பதோ அவர்களிடையே அது எப்படி வளர்கிறது என்பதோ ராதாவுக்குத் தெரியாது. அவர்களிடையே இருக்கும் அல்லது இருப்பதாக நினைக்க வைக்கும் பின்னணியின் பரஸ்பரத் தன்மையைப் பற்றி அவளாக ஒரு தோற்றத்தை உண்டாக்கிக் கொள்ளத் தயாராக இல்லை.

ஹேமாவுக்கு அவனுடைய தாம்பத்திய வாழ்க்கை ஒரு கசப்பான அனுபவம்தான். விவாகத்துக்கு முன்பேதான் அப்படி யென்றால், அந்த முறிந்த நிலை விவாகத்துக்குப் பின்பும் ஒட்டவில்லை என்கிற மாதிரிதான் சம்பவங்கள் நடந்தன. கணவன் என்ற முறையில் ஒரு முனையிலும், மனைவி என்ற மற்றொரு முனையிலும் ஆக இரு முனைகளும் அதனதன் காந்த சக்திகளை இழந்து நிற்கின்றன. அந்த இழப்பின் அவலம் கால வேகத்தின் சுழற்சியில் சரியாகிவிடலாம் அல்லது சரிப்படுத்திவிடலாம் என்று நம்பிக்கை வளர்ந்த நேரத்தில்தான் நிகழ்ந்தது அந்த விபத்து.

சென்னைக்குச் சினிமா சம்பந்தமாக விமானத்தில் புறப்பட்டுப் போனபோது ஏற்பட்ட விபத்தில். கால் முறிந்தது. விபத்தின்போது சக்திமிக்க எண்ணெய்ப் பொருள் ஏதோ ஒன்று தலையில் பட்டு மயிர்கள் பொசுங்கி, தலையில் திட்டுத் திட்டாக உண்டான கரும் புள்ளி. அதனால் உண்டான ஓயாத தலைவலி. இரண்டு கால்களையும் வெட்டிய பின் உயிர் கொடுக்கப்பட்ட பரிதாபம் - இப்படியாக.

ஹேமாவின் திரும்பிய முகம் சபாபதியின் பக்கம் திரும்பவே யில்லை.

சிவலே தோய்ந்த விழிகளைத் திறந்து பார்க்கிறான் சபாபதி.

விபத்துக்குள்ளாகி இரண்டு மூன்று மாதங்கள் கழித்து வீட்டுக்குக் கொண்டு வரப்பட்ட நாட்களில் ஒரு நாள் அது.

அவன் கண்களில் கண்ணீர் கசிந்து நிற்கிறது. தன் வாழ்க்கையே பாழாகிப் போய் விட்டதாகக் குமுறுகிறான்.

ஹேமா அவன் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டதிலிருந்து நினைவு திரும்பி உடல் நலம் சம நிலையை அடையும் வரை கடமையினால் உந்தப்பட்டவள் போல – அவளது பரபரப்பு அப்படித்தான் எண்ண வைத்தது – அவன் அருகில் இருந்து கவனித்துக் கொண்டாள். இரவு பகல் என்று பாராமல் அவள் அவனது தேவைகளை டாக்டர்களின் கட்டளைப்படி செய்தாள். அவன் உடம்பு ஓரளவு விரைவிலேயே குணம் கண்டது என்றால், அவளது இடையறாத கவனிப்பும் ஒரு காரணம். அதன் பின்... அதன் பின்... அவன் வீடு வந்த பின் அவனிடம் காணப்பட்ட அந்த மாறுதல்... புகுந்த இடத்தில், பிறந்த இடத்தில் புயலைக் கிளப்பிவிடக் காரணமான அந்த மாறுதல் — ஏன்?

சிவபுரத்தில் ஓர் அழகிய சிறு பங்களா. பாங்கியில் கொஞ்சம் தொகை — சபாபதியின் மூலதனம். சினிமாத் துறையில் பாதியில் நின்ற வேலைகள் பாதியிலேயே விலகிவிட்டன. மிகப் பெரிய தேக்க நிலை. எதிர்காலம் பற்றிய நினைவுகள்.

சபாபதிக்கு அந்த யோசனையைத் தன் தந்தை மூலமாக ராதா சொன்னான். இருக்கின்ற மூலதனத்தில் சிறு தொகையை முதலாகப் போட்டு ரேடியோக் கம்பெனி ஒன்று தொடங்கலாம் என்றும் கவிபுரம் பகுதியில் அப்படிப்பட்டதொரு கம்பெனியை வைப்பது ஓரளவு லாபகரமாக அமையும் என்றும் கூறினான். தன் எதிர்கால வாழ்க்கையின் போக்கு இடறின்றிச் செல்ல வேண்டுமென்றால் ஒரு நிரந்தரமான வருமானத்துக்கு வழியை உடனே மேற்கொண்டாக வேண்டும் என்பதை மிக நன்றாகவே உணர்ந்திருந்தான் சபாபதி.

புருஷோத்தமன் மூலமாக வந்த ராதாவின் யோசனை ஒரு சிறந்த யோசனையாகப் பட்டது அவனுக்கு. ராதாவின் திறமையில் நிறைய நம்பிக்கை கொண்டவன் சபாபதி. அவனது நுணுக்கமான அறிவு, ரேடியோ ரிப்பேரில் அவன் கொண்டுள்ள தனித் திறமை எல்லாம் அவனுக்கும் தெரியும். எனவே அந்த யோசனைக்கு அவன் தடை சொல்லவில்லை.

சம்மதித்துவிட்டான்.

ராதாவின் பெயரிலேயே திறக்கப்படும் ரேடியோ சர்வீஸிங் கம்பெனியில் ராதாவும் ஒரு சிறு மூலதனம் போடும்படியான வசதியைச் சபாபதி உண்டாக்கித் தந்தான். அதில் ராதா ஒர்க்கிங் பார்ட்னர். — அவனுக்கு மாதச் சம்பளம் எடுத்துக் கொள்ள ஏற்பாடு.

பங்களாவின் முன் பகுதியில் உள்ள திறந்த வெளியில் பங்களாவை யொட்டித் தனி அறை ஒன்று கட்ட ஏற்பாடாயிற்று. பங்களாவின் முன்புறத்தில் உள்ள ஒரு விஸ்தாரமான அறையையும் அத்துடன் இணைத்துப் பொருத்தப் பட்டது.

ராதா தான் வேலை பார்த்த கம்பெனியிலிருந்து வேலையை ராஜிநாமாச் செய்தான். தனக்குப் பழக்கமான மல்லிகைவரம் பகுதிகளில் வீட்டுக்கு வீடு சென்று சிறு சிறு பழுதுகளைப் பார்த்துக் கொடுக்கும் வழக்கத்தைக் கவிபுரம், அதைச் சுற்றியுள்ள இடங்கள் என்று பெருக்கிக்கொண்டே போனான். அதிகப் பரிச்சயங்கள் அவனுடைய கைத்தொழிலுக்குப் பெரிதும் உதவின.

''எங்கே சுற்றிவிட்டு வருகிறாய்?''

சுவரில் டென்னிஸ் பந்தை அடித்து அதைப் பிடித்து மீண்டும் சுவரில் அடித்துக்கொண்டே கேட்டான் சபாபதி. ஹேமா சபாபதியின் கேள்விக்குப் பதில் ஒன்றும் கூறாமல் உள்ளே போய்விட்டாள். சில நிமிஷங்கள் மெதுவாகக் கேட்ட பந்தின் ஒலி கொஞ்சம் அதிக வேகத்துடன் ஒலித்தது. அவன் சினம் அதிகமானதை உணர்த்தியது.

'எங்கே சுற்றிவிட்டு வருகிறாய்?' என்ற கேள்வியை நிதானமாகவும் முகத்தில் எவ்வித மாறுதலும் இன்றித்தான் கேட்டான். சபாபதியை ஒரு முறை சாதாரணமாகத் திரும்பிப் பார்த்து விட்டுத்தான் அவள் உள்ளே சென்றாள். அவன் கேட்ட கேள்விக்கு அவள் கூறும் எந்த விதமான பதிலும் அவன் சினத்தை அடக்கி யிருக்கக் கூடும். ஆனால் பதிலேதும் கூறாமல் போனது தன் கணவன் என்ற இயற்கையான ஆண்மை உணர்வுக்குக் கிடைத்த அவமானமாக எண்ணித் துடிக்க வைத்தது. சக்கர வண்டியை வேகமாகத் திருப்பி உருட்டிக் கொண்டு சென்று ஹேமா நுழைந்திருந்த அறையின் வாயிற்படிக்கு நடுவில் நிறுத்திக் கொண்டான்.

''நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நான் கேட்ட கேள்விக்கு நீ பதில் சொல்லித் தான் தீரவேண்டும். உன்னை எப்படி வழிக்குக் கொண்டு வருவது என்பது எனக்கொன்றும் பெரிய பிரச்னை அல்ல, ஹேமா! மனிதனுடைய உணர்வுகளுக்கு எங்கே ஆசாபங்கம் உண்டாகிறதோ அங்கேயே பலாத்காரம் பிறந்து விடுகிறது, தெரியுமா உனக்கு?''

சபாபதி ஆத்திரம் கொண்டவன் போலச் சீறினான். அடிபட்ட ஆணின் உணர்ச்சி



வேகத்தில் பேசிக் கொண்டிருந்தான். அவள் கண்களில் அவன் படவில்லை. அறையில் ஒரு மூலையில் நின்று கொண்டிருக்க வேண்டும்.

''நான் உன் கணவன். உன்னைக் கேள்வி கேட்பதை நீ ஒரு தேவையில்லாத குறுக்கீடாக நினைக்க நான் இடந்தர மாட்டேன்.''

ஹேமா இதற்கும் பதில் கூறவில்லை.

இந்த இரண்டாண்டு காலத்தில் சபாபதியின் எந்தக் கேள்விக்கும் அவள் பதில் கூறியதில்லை. சபாபதி சினந்து நிற்கும்போதெல்லாம் அவள் ஒன்றுமே பேசுவதில்லை. அனேகமாக அதைப் பொருட்படுத்தாதவள் போலக் கூடப் போய் விடுவாள். அவளுடைய அம்மாதிரிப் போக்கில் அலட்சியத் தன்மை இருப்பதாக அவன் துடித்தான். ஆனால் அதில் அலட்சியம் இல்லை என்பது ராதாவுக்குத் தெரியும். சபாபதியின் கேள்விகளுக்கு அவள் பதில் சொல்வதில்லை என்பதென்னவோ உண்மைதான். ஆனால் அம்மாதிரி சபாபதியின் சினத்துக்கு ஆளாக நேருகிறசந்தர்ப்பங்களில் ஹேமா தனிமையில் கண்ணீர் சிந்திக் கொண்டிருப்பதை அவன் பார்த்திருக்கிறான். பதிலேதும் சொல்லாமல் அப்பால் போய்விடுவதைப் பார்த்திருக்

கிறாள். "ஏன் ஹேமா இப்படி இருக்கிறாய்? அவரை மதித்து இரண்டு வார்த்தை பேச, அவர் சினமாகக் கேட்டால், நீயும் சினத்துடன் நாலு வார்த்தைகளைக் கொட்டி உன் குமுறலை அடக்கிக் கொண்டு அவர் குமுறலையும் அடக்கேன். அவர் உரிமையுடன் சினந்து கொள்கிறார். அந்த உரிமை உனக்குமிருக்கிறதே, அதைத்தானே அவரும் எதிர்பார்க்கிறார்" என்பாள் ராதா. குன்கொட்டிய படி வராந்தாவுக்கு வந்து தெருவையே பார்த்த வண்ணம் நிற்பாள் ஹேமா.

"எங்கே போய்விட்டு வருகிறாய்? காலையில் ஒன்பது மணிக்கு வெளியே போனவள் நீ. உன்னைக் கேள்வி கேட்க யாருமில்லை என்ற திமிரா?"—

"சொல்லேன் ஹேமா! அவர் கேட்கிறாரே?" — பின்னும் திரும்பிப் பார்த்தான் சபாபதி. வெளி அலுவலை முடித்துக்கொண்டு வந்திருந்த ராதா 'டூம் பேக்'குடன் நின்று கொண்டிருந்தாள்.

"நிருத்யாலயா போயிருந்தேன்" என்று பதில் வந்தது ஹேமாவிடமிருந்து.

"அங்கே என்ன வேலை உனக்கு?"

"நிருத்யாலயா நாட்டிய நிகழ்ச்சிகளில் நான் கலந்து கொள்கிறேன்" என்றாள் வெளியே வராமலே.

"உன்னால் நிம்மதியாக ஆட முடிகிறதா?" என்று சபாபதி கேட்டான்.

"ஆட முடிகிறது...நிம்மதியுடனா, நிம்மதியின்றியா என்பதை என்னால் சொல்ல முடியாது."

"ஓஹோ!... நிருத்யாலயா ஹரிராமுடைய யூனிட்டானே?"

"ஆமாம்."

சபாபதியின் கரம் சக்கர வண்டியின் சக்கரத்தை வேகமாகப் பின்புறம் சுழற்றியது. வண்டி பின்னே வந்து திரும்பி உருண்டது.

உள்ளே நின்று கொண்டிருந்த ஹேமா கண்ணீர் மல்க வெளியே வந்தாள். கூடத்தில் நின்ற ராதாவை ஒரு முறை பார்த்துவிட்டு உள்ளே போனாள். அவள் முகம் மிகவும் களைத்துப் போயிருந்தது.

"சாப்பிட வாயேன்."

பதிலேதும் சொல்லாமல் சாப்பிட அமர்ந்தாள் ஹேமா.

"கொஞ்சம் இளகிய தன்மையாக மாற முயற்சி செய்யேன். வீட்டின் சூழ்நிலை ரொம்ப மோசமாகிக் கொண்டு வருகிறது. ஹேமா! அவர் சினப்படுவதும், நீ அவர் சினத்தை மதிக்காமல் போவதும் வர வர உன்னுடைய போக்கு ரொம்ப விரும்பத் தகாததாக இருக்கிறது" என்றாள் ராதா, அவளுக்கு உணவு பரிமாறிக் கொண்டே. சாப்பிட்டு முடியும் வரை ஹேமா பதில் ஏதும் கூறாமல் இருந்தாள். கண்களில் மட்டும் அவ்வப்போது சிறுசிறு மொட்டுகள் போலக் கண்ணீர் பூத்துக் கீழே கன்னத்தின் வழியே இறங்கிக் கொண்டிருந்தது.

"விக்கிரகத்தைச் செதுக்கி ஆலயத்தினுள் வைக்கும் சிற்பியை விட ஒரு சாதாரண பக்தன்தானேடி தெய்வத்தின் அருகில் ரொம்பவும் நெருக்கமாக இருக்கிறான்? ஆனால் என்னைப் பொறுத்தவரையில் நான் சிற்பியுமில்லை, பக்தையுமில்லை. சன்னதிக்கு வெளியே தள்ளப்பட்டவள் அல்லது தள்ளப்படப் போகிறவள்.... வரேன். நிருத்யாலயாவில் வேலை இருக்கு. சாயங்காலம்தான் வருவேன்" என்று கூறிவிட்டு அறையில் படுத்திருக்கும் சபாபதியைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் வெளியே போய்விட்டாள் ஹேமா.

அவள் வெளியேறும்வரையில் மௌனமாக இருந்த சபாபதி, "என்னுடைய ஆன்ம கௌரவத்தை அணு அணுவாகச் சிதைக்க இவள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறாள். இவளிடம் இனி அன்பையோ மரியாதையையோ எதிர்பார்க்க முடியாது. நான் எதிர்பார்க்கவுமில்லை. அதற்காக இவள் உதாசீனத்தை நான் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டுமென்பதில்லை" என்றான்.

"தயவுசெய்து கோபப் படாதீர்கள். நிதானத்துடன் இருங்கள். நான் எல்லா விஷயங்களையும் சரியான பாதையில் திருப்பிக் கொண்டு வர முடியும் என்று நம்புகிறேன். நீங்களோ என் நம்பிக்கையைத் தரைமட்டமாக்கிக் கொண்டு போகிறீர்கள் — உங்களை மட்டும் சொல்லவில்லை. ஹேமாவையும் சேர்த்துத்தான் சொல்லுகிறேன். அவளிடம் நீங்கள் இன்னும் கொஞ்சம் கனிவாக நடந்து கொள்ள வேண்டும் என்று நான் எதிர்பார்க்கிறேன்" என்றாள் ராதா.

சபாபதி நீண்ட ஹாலில் சக்கர வண்டியில் மெதுவாக ஊர்ந்து கொண்டிருந்தான். ராதா நின்ற இடத்தில் நின்றபடியே பேசிக் கொண்டிருந்தாள்.

"பரஸ்பரம் மனத்தில் உள்ள 'விரோத' மனப்பான்மையை உதறிவிட்டு ஒருவரை ஒருவர் புரிந்து கொண்ட நிலையில் நெருங்கி வர வேண்டும் என்று நான் விரும்புகிறேன்... நீங்கள் ஒரு முனையும் அவள் ஒரு முனையுமாகப் பிடித்து இழுக்கிறீர்கள். நடுவில் உள்ள உறவு என்ற இழை இந்த இழுப்பில் நைந்து கொண்டு வருகிறது. ஒரு சந்தர்ப்பத்தில் அந்த இழை அறுந்தாலும் அறுந்து போய் விடலாம். அவ்விதம் நேர்ந்து விடக் கூடாது என்று நான் உள்ளூறத் துடிக்கிறேன். அந்தத் துடிப்பு உங்களுக்கோ ஹேமாவுக்கோ இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.. நாளுக்கு நாள் விரைப்புத்தான் அதிகமாகிக் கொண்டு வருகிறதே தவிர இளகக் காணோம்" என்றாள் ராதா மிக நொந்துபோன நிலையில்.

"அவளை மன்னிக்க வேண்டும் என்ற எண்ணமே எனக்கு வரமாட்டேன் என்கிறது, ராதா! நானும் முயற்சி செய்யாமல் இல்லை. அவள் மேல் அபரிமிதமான அன்பு செலுத்த எனக்கொரு சந்தர்ப்பத்தை அவள் ஏற்படுத்தித் தரப் போவதேயில்லை. அது எனக்கு நிச்சயமாகத் தெரியும்" என்றான் சபாபதி, வண்டியில் சுவர் ஓரமாக ஊர்ந்து கொண்டே.

"அதெப்படிக் கூற முடியும் உங்களால்?"

"எனக்குத் தெரியும். இன்று இவள் போகிற வழி. நான் அவள் மேல் அன்பு செலுத்துவதன் மூலம் அதைத் தடுக்க வேண்டுமென்று நீ எதிர்பார்க்கலாம். நான் அதைச் செய்யப் போவதுமில்லை. அவள் நாட்டியமாடப் போவது பற்றியோ, நிருத்யாலயாவில் பிரதான பங்கு பெற்று அத்துடன் முழு அளவில் ஒன்றிப் போய்க் கொண்டிருப்பதையோ சினிமாவில் சேர்ந்து அவள்




# 14-4-71

## புத்தாண்டு முதல்

பட்டு சேலைகளுக்கென
விஸ்தரிக்கப்பெற்ற
நல்லியின் புதிய
டிலக்ஸ் ஷோ-ரூம்!

அனைவருக்கும் எமது நல்வரவு

எமது பிரத்யேகமான பட்டு சேலை பிரிவில்
கலியாணம் மற்றும் விசேஷ காலங்களுக்கான

நவீன ரக புகழ்பெற்ற **நல்லி பட்டு சேலைகள்** ஏராளமான புதிய ஸ்டாக்!

கைத்தறி மற்றும் மில் ஜவுளிகளனைத்தும் கிடைக்கும்

- நல்ல சூழ்நிலையில் அமைந்துள்ள, வசதிமிக்க, நம்பகமான சிறந்த ஷாப்பிங் சென்டர்.
- உங்கள் குடும்பம் பூராவுக்கும் தேவையான ஜவுளிகள் அனைத்தையும் ஒரே இடதநில் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.
- கவலையற்ற கார் பார்க்கிங் நிழல் வசதி.

# நல்லி
# சில்க் எம்போரியம்

**பாண்டி பஜார்**

தியாகராய நகர் • போன்: 442567 • சென்னை-17

நடுத்தர வகுப்பினருக்கான நல்லி பட்டு சேலை அனுகூல திட்டத்தில் கலந்து கொண்டு பிரசித்தமான நல்லி பட்டு சேலைகளை வாங்குங்கள்!

# அழகுக் கோலம்

# டெக்கோலாம்




டெக்கோலாம்—[illegible] வடிவான லாமினேட்
பேகலைட் ஹைலாம் லிமிடெட் தயாரிப்பு.

BHL-DLM-22-71 TM

அதை மேலும் விருத்தி செய்து கொள்ளப்போகிற திட்டம் பற்றியோ நான் தடை ஏதும் சொல்லப் போவதில்லை. அதன் பேரில் எனக்கு அபிப்பிராய பேதமும் கிடையாது. அவைகளை நான் மனப்பூர்வமாக ஏற்கிறேன். ஏனென்றால் என் பாதங்கள் ஆடிய பாதங்கள். ஆடிய பாதங்களை அடக்க அக்கலைஞனால் ஒருகாலும் முடியாது. நான் ஒரு கலைஞனாக இருந்து கொண்டு அதைத் தடுப்பது முற்றிலும் அறிவற்ற செயல் என்பதை உணர்ந்துதானிருக்கிறேன்'' என்றான் சற்றுக் கடுமையுடன். ''ஆனால் அவள் தன் விடுதலை வேறொன்றில் இருக்கிறது என்று முடிவை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறாள். அவள் உள்ளத்தில் ஒரு பெரிய அதிர்வு அல்லது மாறுதலை நோக்கி விரைகிற துடிப்பின் சாயலை நான் உணர்கிறேன்.'' வீல் சேரின் கைப்பிடியை அழுத்திப் பிடித்த வண்ணம் பேசினான்:

''எனக்கு வர வரப் பயமாக இருக்கிறது. ராதா! எங்கே நான் கவனிப்பாரற்றவனாகப் போய் விடுவேனோ என்று அடிக்கடி எண்ணி எனக்குள் அஞ்சுகிறேன்.'' — அந்த நேரத்தில்



அவன் முகம் பீதி குடி கொண்ட குழந்தையின் முகம் போல் இருந்தது. எதை எதிர்பார்த்து இப்படிக் கூறுகிறார் இவர்... இவர் இவ்விதம் பயப்படும்படியாக என்ன நேர்ந்து விடும்? ஒருவேளை... ஒருவேளை... அவர் நினைப்பது போல் அவர் அனாதையாக்கப்பட்டு விடும் சூழ்நிலை ஏற்பட்டால்...?

''அப்படியெல்லாம் ஒன்றும் நேராது. அமைதியுடன் இருங்கள். மனிதர்களை மனிதர்கள் அனாதையாக்குவது என்பது பைத்தியக்காரத்தனமான எண்ணம். இவ்வுலகில் யாரும் யாரையும் அனாதையாக்க முடியாது'' என்று கூறிவிட்டு அதற்கு மேல் ஒன்றும்பேசாமல் ராதா கடைக்கு வந்து விட்டாள்.

யாரையும் யாரும் அநாதையாக்க முடியாது என்று கூறிவிட்டாளே யன்றி அவள் தான் கூறியதில் உள்ள போலிச் சமாதானத்தை முற்றிலும் உணர்ந்தேதான் இருந்தாள். அதில் உள்ள பயங்கரத் தன்மை அவனுக்கும் நன்றாகத் தெரியும். அது மட்டுமல்ல. சபாபதியின் பயத்துக்கான காரணமும் அவளுக்குத் தெரியும்.

கடையைப் பூட்டிச் சாவியை ஏழு மணிக்கு உள்ளே மாட்டிவிடும்படி வேலையாளுக்குப் பணித்து விட்டுக் கவிபுரம் நீண்ட சாலையில் இறங்கி நடந்தாள் ராதா. கோடியில் மலையோரமாக இருக்கும் கவி கங்காதரேசுவரர் குகைக் கோயிலுக்குள் நுழைந்தாள். உள்ளே சந்நிதியிலிருந்து சிந்து பைரவி ராக ஆலாபனையின் நாதஸ்வர ஒலி கேட்டுக் கொண்டிருந்தது.

ஹேமா!....

ஹேமா ஆலயத்தின் பின்புறம் எதிரே குன்றின் மேல் தெரியும் முருகனின் சிறு ஆலயத்தைப் பார்த்தபடி அமர்ந்திருந்தாள்.

''நீ இங்கேயா உட்கார்ந்திருக்கிறாய்?'' என்று ஹேமாவின் அருகில் போய் உட்கார்ந்தாள் ராதா.

''எப்பொழுது இங்கே வந்தாய்?''

''நான் வந்து ஒரு மணி நேரத்துக்கு மேல் ஆகப் போகிறது..''

''என்ன யோசனை?''

''யோசிக்க விஷயங்களா இல்லை?'' தன்னுடைய கேள்விக்குப் பலிச்சென்று வரும் ஹேமாவின் பதிலைப் பார்த்து ஓரளவு தனக்குள் சமாதானப்பட்டவளாக அவள் முகத்தையே பார்த்தாள். அதே நேரத்தில் ஹேமாவும் தங்கையின் முகத்தைப் பார்த்தாள். பார்வையில் தெரிந்த சங்கேத உணர்வுகள் அந்தரங்கமான மனக் கிளர்ச்சிகள், மனச் சிதலங்களைப் பற்றிய சிந்தனையில் செல்லும் ஒரே பாட்டை வழியில் அடுத்தடுத்துப் பின் தொடரும் தொடர்பின் ஒலிகள் என்று எல்லாவிதமான மானசீக வக்கிரங்களும் இருவர் பார்வையிலிருந்து இருவரையும் புரிய வைத்துக் கொண்டிருந்தன.

''எனக்கு உன்னிடமிருந்து இரண்டு புதிர்களுக்கு விளக்கம் வேண்டும் ஹேமா! நான் சிற்பியுமில்லை, பக்தையுமில்லை — சன்னிதிக்கு வெளியே தள்ளப்பட்டவள் அல்லது தள்ளப் படப் போகிறவள் என்றாயே, அதன் அர்த்தம் என்ன? ஏன் அப்படிச் சொன்னாய் என்று என்னால் கொஞ்சம்கூட ஊகிக்க முடியவில்லை.''

ராதா பேசும்வரை மௌனமாகவே இருந்த ஹேமா அவள் பேசி முடித்தபின்பும் அப்படியே இருந்தாள். இந்த மௌனம் ஒரு நீண்ட விளக்கத்தைத் தனக்குள் நேர்ப்படுத்திக் கொள்ளும் மௌனம்தான் என்பதை ஊகித்த ராதா அவள் பேசும்வரை தூண்டவில்லை.

''இந்தப் பிணைப்பே பரஸ்பரம் அன்பின் ஈர்ப்பினால் உண்டான பிணைப்பு இல்லை.

பரஸ்பரம் பழி தீர்த்துக் கொள்ளும் வெறுப்பின் அடிப்படையில் ஏற்பட்ட பிணைப்பு இது. அவரை மணந்து அவரை நானும், என்னை மணந்து என்னை அவரும் பழிதீர்த்துக்கொள்ளக் கங்கணம் கட்டிக் கொண்ட மாதிரியான வக்கரிப்புத்தான் பிரதானமாக எங்களிடையே இருக்கின்றது. இந்த மனோபாவத்தை இனி மாற்ற முடியாது ராதா! என்னை மணந்த பின் அவருக்கு விபத்து ஏற்படுவதற்கும் இடைப்பட்ட காலத்தில் நீ அவருடைய போக்கைப் பார்த்திருந்தால் இன்றைக்கு என் போக்குச் சரி என்று நீ ஒப்புக் கொண்டிருப்பாய். நீ அவரிடம் என் விவாகத்துக்குச் சிபாரிசு செய்யப் போனாய். உன்னுடைய சமாதானத் தூது செயலளவில் வெற்றி தந்ததே யன்றி, எங்கள் மனங்களில் உள்ள கசப்புணர்வுகளை அது மாற்றவில்லை. நான் வீட்டில் இருக்கும்போதே பல பெண்களுடன் வெளியே போவதும், விரும்பிய அழகிய பெண்ணுடன் தனித்திருப்பதும், எனக்கு எதிரில் நான் அவைகளைக் காணவேண்டும், கண்டு பொருமைப்பட வேண்டும் என்பதற்காக அளவுக்கு மீறி உராய்வுடன் இருப்பதும் அவர் மனத்தில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார் என்பதை எனக்குப் புரிய வைத்தன. அம்மாதிரி சந்தர்ப்பங்களில் கூட நான் அவருடைய செய்கைகளைக் கண்டிக்க முற்படவில்லை. அவரைத் திருத்தி என் வசப்படுத்த நான் நினைக்கவில்லை. மாறாக என்ன நினைத்தேன் தெரியுமா? அவரை வேறு விதத்தில் பழி வாங்க வேண்டும். அப்படி ஒரு சந்தர்ப்பம் எனக்கு வரவேண்டும் என்றுதான் விரும்பினேன். அவரைச் சமாதானப்படுத்தி எனது கௌரவத்தை அவருடைய அகம்பாவமான போக்குக்கு அடிமைப்படுத்தி என்னை அவர் வழிக்குச் சரி செய்து கொள்ள அப்பொழுதிலிருந்தே நான் விரும்பவில்லை. வீட்டில் எனக்கு நேரிலேயே இப்படி முறை தவறாகப் போவதை நான் கண்டிப்பேன், கோபப்படுவேன், ஆத்திரப்படுவேன், துடிப்பேன், தடுப்பேன், அந்நேரத்தில் என் சினத்தைத் தூண்டி என்னை அடிமை கொள்ளலாம் என்று அவர் எதிர்பார்த்திருக்கலாம். ஆனால் நானோ, அவர் செய்கைகளை வேண்டு மென்றே அலட்சியப்படுத்தினேன். அவைகளைப் பற்றி அதிகம் அக்கறை காட்டாதவளாகவே போய்க் கொண்டிருந்தேன். இந்த மர்ம நாடகங்கள் எல்லாம் உனக்குத் தெரிய நியாயமில்லை. ஆனால் என் மௌனத்துக்கு அடியில் நான் என் சிந்தனைகளை வளர்த்துக் கொண்ட விதம் தான் இன்று என்னை மாறவொட்டாமல் தடுக்கிறது. மாறும் எண்ணத்தையே அடியோடு மறைத்து விட்டது. அவருக்கு விபத்து நேர்ந்தது ஓர் எதிர்பாராத நிகழ்ச்சிதான். அவர் விபத்துக்கு ஆளாகி இப்படி ஆகிவிட்டார் என்பதால் நான் இப்படி மனமொடிந்து விட்டதாக நினைக்காதே. அவர் விபத்துக்கு ஆளாகாமல் இருந்திருந்தாலும் நான் இப்படித்தான் இருப்பேன். என்னுள் முளைவிட்டு வளர்ந்து விட்ட அந்த வெறுப்புணர்ச்சியையும் பழிவாங்கும் எண்ணத்தையும் என்னை விட்டு அகற்றவே முடியாது...''

''இந்நிலையை மாற்றிக் கொள்ள வேண்டும் ஹேமா! முன்பு அவர் உனக்கு எதிரிலேயே முறைகேடாக நடந்து உன்னை உதாசீனப்படுத்தினார் என்பதை வைத்துக் கொண்டு இன்று ஊனப்பட்டுக் கிடக்கிறவரிடம் உன் உதாசீனத்தைக் காட்டுவது அவ்வளவு விவேகம் அல்ல. உன்னுடைய மனிதாபிமானம் இங்கு வெற்றி கொள்ளுமளவுக்கு நீ அவரை ஆட்கொண்டு அதிசயம் நிகழ்த்த வேண்டும். முன்பு அவர் எப்படி நடந்து கொண்டிருந்தாலும் அவைகளை மறந்து அவரை ஆட்கொள்ள வேண்டிய இன்றைய பொறுப்பு உன்னுடையது'' என்று கெஞ்சினாள் ராதா.

''என் சிந்தனை, மனம் எல்லாமே இவ்விஷயத்தில் மரத்துப்போய் எத்தனையோ நாட்களாகிவிட்டன, ராதா. அதை இனி துளிர்க்கச் செய்யவே முடியாது'' என்று சொல்லிக் கொண்டே ஹேமா எழுந்து விட்டாள்.

வீடு வரும்வரை ராதா ஹேமாவிடம் எவ்வளவோ மன்றாடிப் பார்த்தாள். இன்று வீடு இருக்கும் நிலைமையையும், ராதா ரேடியோ சர்வீஸ் வைத்து மூலதனத்தைப் பெருக்கிக் கொண்டிருப்பதையும் சபாபதியை இனி நிரந்தரமாக ஒருவர் அருகில் இருந்து கவனித்துக் கொள்ள வேண்டும் என்பதையும் எடுத்துக் கூறினாள். ஹேமா எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டவள் முடிவாகக் கூறிவிட்டாள்:

''எனக்கு என் ஏக்கங்களிலிருந்து விடுதலை வேண்டும், ராதா. நான் இவ்விஷயத்தில் அவருக்குத் துரோகம் செய்து விட்டதாக நீயோ அவரோ நினைப்பதை நான் ஏற்க மாட்டேன். ஏனென்றால் நம்பிக்கை என்ற ஆழமான அடிப்படையில் வளர்ந்து அந்த அடிப்படையைப் பின்னின்று தகர்க்கும் போதுதான் நம்பிக்கைத் துரோகம் என்பதே உண்டாகிறது. அடிப்படையில் ஆழமற்ற எதுவும் அதற்கு எதிராக உருவாகும் கிளர்ச்சியைத் துரோகம் என்றே கூற முடியாது. அவருடைய நம்பிக்கைக்கும் அன்புக்கும் பாத்திரமாகாத நிலையில் நான் செய்யும் எதுவும் அவருக்குத் துரோகமான செய்கையாகாது. ஒரு பொதுவான சமுதாய ரீதியில் எனது பழி வாங்கும் குணத்தின் மேல் மாசு கற்பிக்கலாம். அதைப் பற்றி நான் அதிகம் கவலைப்படவில்லை. ஆத்ம விடுதலை என்பது ஒரு பந்தத்தை அறுத்துக் கொண்டு போகும்போது தான் கிடைக்கிறது. அந்த விடுதலையின் சுகம் உடனே வேண்டும். இந்த விடுதலை எனக்கொரு தவிர்க்க முடியாத தேவை! அந்த விடுதலையை இப்பொழுது நான் நடத்தும் பனிப்போர் மூலம் அடையவே விரும்புகிறேன். ஓர் ஆக்கிரமிப்பாளர் மேல் மற்றொரு ஆக்கிரமிப்பாளர் தொடுக்கும் போர் போல் இப்பனிப் போரின் தன்மையை உக்கிரமாக்க நான் விரும்பவில்லை. தயாராயுமில்லை. கடைசி வரையில் போரின் மிருதுத் தன்மை இழந்து விடக் கூடாது என்பதில் நான் ரொம்பவும் கவனமாக இருக்கிறேன்.'' —

இப்பேச்சின் தொடக்கத்தில் கொஞ்சம் கூட ஹேமாவைப் புரிந்து கொள்ள முடியாமல் இருந்த ராதாவுக்கு அவளுடைய வாதங்

# கேட்பீர்

ஒவ்வொரு சிறு குரல் அசைவும் தெளிவாக, கணீரென்று கேட்கிறது. அதுதான் மகத்தான டெனுர் தரும் இயற்கையான நாதம்.

வாங்குவதற்கு முன்னர் எல்லா உயர் ரக 4 பாண்ட் ரேடியோக்கள் தரும் ஒலி வகைகளேயும் கவனமாகக் கேளுங்கள். வீடு திரும்பும்போது எச்எம்வி டெனுர் தான் கொண்டு செல்வீர்கள் என்பது உறுதி.



## எச்எம்வி டெனுர்

4 பாண்ட்கள், 6 வால்வுகள், ஏஸி

**ரூ. 390-00**

(எக்ஸைஸ் வரி உட்பட, உள்ளூர் வரிகள் தனி)

**அதன் விலை வரிசையில் அதுதான் மிக அழகான ரேடியோ**



**ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்**

CC-1398

# உங்கள் குழந்தை பள்ளி செல்கின்றதா? வெற்றிகரமான வாழ்வைத் தெம்புடன் தொடங்க ஃபெர்ராடால் கொடுங்கள்

உங்கள் செல்வன் பிள்ளைப் பிராயத்தில், படிப்பிலும் விளையாட்டிலும் சிறந்து விளங்க அதிக சக்தி மற்றும் அதிக ஆற்றல் பெற்றிருக்கவேண்டும்.

அந்த அனைத்தையும் அளிப்பது ஃபெர்ராடால் ஒன்றுதான். இதனால், சரியான விகிதத்தில் இரும்புச் சத்து, விடமின்கள் மற்றும் தாதுச் சத்துக்கள் உங்கள் செல்வனுக்குக் கிடைக்கின்றன.

ஃபெர்ராடாலில் உள்ள சத்துக்கள் உங்கள் செல்வனின் உடல் உறுப்புகள் ஆக்கம் பெற்று ஆரோக்கியமுடன் வளர மிகமிக அவசியமானவை.

உங்கள் குழந்தைக்குக் காலையிலும், இரவிலும், நேரடியாக பாட்டிலிலிருந்தோ அல்லது பாலுடன் கலந்தோ, ஃபெர்ராடால் கொடுங்கள்.

சுவையிருக்கட்டும், குடும்பம் முழுமைக்கும் குறையாத ஆரோக்கியம் தருவது ஃபெர்ராடால்.






## ஃபெர்ராடால்®

**சுவையில் சிறந்தது—குடும்பம் முழுமைக்கும் குறையாத ஆரோக்கியத்திற்கு**

பார்க்-டேவிஸ் தயாரிப்பு

● ரெஜிஸ்டர்டு ட்ரேட்மார்க், ரெஜிஸ்டர்டு யூஸர்: பார்க்-டேவிஸ்(இந்தியா) லிமிடெட், பம்பாய்-72 ஏ.எஸ்

JAISONS – 418

களின் இறுதி வடிவங்களைப் பார்க்கும்போது பளிச்செனப் புரிந்து கொள்ள முடிந்தது.

பிறகு இருவரும் பேசவே யில்லை. நடந்தே வீட்டுக்கு வந்தனர்.

அடுத்தடுத்து வந்த சில தினங்களில் ஹேமாவின் போக்கிலே சில மாறுதல்கள் தென்பட்டன. ஏதோ ஒரு முடிவை நோக்கிப் பரபரப்புடன் இயங்குபவளைப் போலக் காணப்பட்டாள். கடைக்குச் செல்வதும் சில புதிய உடைகளைத் தேர்ந்தெடுப்பதில் ஆர்வமும், குறித்த நேரம் தவறாமல் நிருத்தியாலயாவுக்குப் புறப்படுவதும், அளவு கடந்த உற்சாகத்துடன் வீடு திரும்புவதும் ராதாவின் பயத்தை நாளுக்கு நாள் அதிகமாக்கிக் கொண்டிருந்தன. சக்கர வண்டியில் தனியே உலாவும் சபாபதியைப் பார்க்கும்போதெல்லாம் அவளை மீறியதொரு பரிவும், பச்சாதாபமும் மேலோங்கி வந்தன. தன்னைப் பொறுத்தவரையில் சபாபதி ஒரு நல்ல மனிதர், அபிமானம் மிக்கவர், மதிப்பும் மரியாதையும் கொண்டவர். வெளி வேலைகளுக்குச் சென்று சுற்றிவிட்டோ அல்லது கடையில் அதிக வேலை காரணமாய்க் களைத்துப்போயோ உள்ளே வரும்போது பார்த்துவிட்டால் 'ஏன் இப்படி உடம்பைப் போட்டு வாட்டிக் கொள்ளணும்? அது அதற்கு உரியவர்களிடம் வேலைகளை ஒப்படைத்துவிட்டு, மேல் பார்வை செய்தால் போதாதா?' என்பாள். அந்த ஆறுதல் மொழிகளே நெஞ்சுக்கு ஔஷதமாக இருக்கும்.

''நீங்கள் என்னை நம்பி இவ்வளவு பெரிய மூலதனத்தைப் போட்டு இருக்கிறீர்களே! அதை உரிய முறையில் நான் பாதுகாத்துப் பெருக்கித் தர வேண்டாமா?'' என்று அவள் கூறும்போது அவன் கூறுவானே ஒரு பதில், அதில்தான் எத்தனை அர்த்தங்கள்! எத்தனை நம்பிக்கை! எவ்வளவு ஏக்கம்! எத்தனை எதிர்பார்ப்பு!

''என் மூலதனம் என்ன ராதா! என்னையே உன்னிடம் சரணாகதிப்படுத்திக் கொண்டிருக்கிறேனே! உனது அன்பு மிக்க சேவைகளுக்கு முன் இதெல்லாம் எந்த மூலை? பொருள் தேடினால் கிடைக்கும். அன்பு அப்படிக் கிடைப்பதில்லையே!'' என்பான். ''வர வர என்னை ரொம்பவும் உனக்குக் கடமைப்பட்டவனாக ஆக்கிக் கொண்டிருக்கிறாய். இந்த முடவனால் உனக்கு என்ன செய்ய முடியப் போகிறது!'' என்று கூறிக் கண் கலங்குவான். அந்தக் கலக்கம் ஓர் உண்மையான மனிதனின் கலக்கமாகப் படும் அவளுக்கு. அக்கலக்கத்தின் நிரந்தரத் தன்மையைப் போக்கத் தன்னிடம் ஒன்றுமில்லையே! என்று பெருமூச்செறிவாள்.

நீண்ட ஹாலில் சக்கர வண்டியில் உலாவும் சபாபதி அப்படியே அதில் உறங்குகிறான். அவனை எழுப்பி உணவு தருகிறாள். ஸ்டென்ச்சைக் கையில் எடுத்துப் பொருத்தி உள்ளே நடத்திச் சென்று படுக்க வைக்கிறாள். போர்வை எடுத்துப் போர்த்துகிறாள். தலைவலிக்கு மாத்திரை தருகிறாள். களிம்பை நெற்றியில் தடவி விடுகிறாள். பிரகாசமான



விளக்கை அணைக்கிறாள். கதவை மெதுவாகச் சாத்துகிறாள். காலையில் காப்பியுடன் எழுப்புகிறாள். அவனது ருசியைக் கேட்டறிந்து உணவு சமைக்கிறாள். அவனுடைய ரசனையைக் கேட்டுக் கடைக்குச் சென்று அவனுக்குத் தேவையான துணிகளை வாங்கி வருகிறாள்.

சனிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை போன்ற ஓய்வு நாட்களில் சபாபதியை ஆட்டோவில் உட்கார வைத்து, கப்பன்பார்க், லால் பார்க் என்று அழைத்துச் செல்கிறாள். டென்னிஸ் பந்தை அவன் சிமெண்ட் பெஞ்சியில் அமர்ந்து வீசுவான். அதை அவள் பிடித்து மீண்டும் அவனிடம் வீசுவாள். அந்நேரத்தில் நாட்டியக் கலை பற்றி அவள் ரொம்ப உற்சாகத்துடன் பேசுவாள். அவள் அமைத்த புதுப் புது நாட்டிய அம்சங்கள் பற்றியும் பத்திரிகைகள் விமர்சனம் பற்றியும் அமைக்கவிருந்த புதிய பாணிகள் பற்றியும் ஏக்கத்துடன் கூறுவாள். அந்நேரங்களில் எல்லாம் அவள் கூறுகின்ற ஆறுதல் மொழி அவனை எவ்வளவு தூரம் சமாதானப்படுத்தும்? ஏக்கம் தோய்ந்த அவன் முகம் எவ்வளவு சீக்கிரம் பிரகாசமடையும்? இந்தச் செய்கைகளின் அர்த்தங்களைப் பற்றியும், இப்பரிவுக்கு வேறு ஏதேனும் பொருள் உண்டா என்பது பற்றியும் அவள் ஒருசில விநாடிகள்கூட நினைத்துப் பார்த்தது கிடையாது. அவளைப் பொறுத்தவரையில்அது அவளுடைய அன்றாடக் கடமைகளில் ஒன்றாக மெதுவாக ரத்தத்துடன் ஊறிவிட்டது. இக்கடமையின் உணர்வில் சபாபதிக்கு ஹேமா என்ற மனைவி ஒருத்தி உண்டு, இவை யாவும் அவள் ஆற்ற வேண்டிய பணிகள் என்ற நினைப்புக்கூட அற்றவளாகத் தன்னைப் பழக்கப்படுத்திக் கொண்டு விட்டாள். நடு இரவில் மணி ஒலித்தால் எழுந்து வருவதிலிருந்து காலையில் சபாபதி எழுந்தவுடன் அவன் முன் ஆவி பறக்கும் காப்பியுடன் நிற்பது வரையில் அவளுக்கு ஒரு பழக்கமான வேலை. பாகுபாடு பார்க்கத் தெரியாத மனம் அவளுடையது. அதே மனம்தான் இதோ இப்போதும்

சபாபதிக்காகப் பச்சாதாபப்படுகிறது. ஹேமா என்னமோ பேசுகிறாளே! விடுதலை என்றும், தான் தேடும் சொர்க்கம் வெளியே இருக்கிறது என்றும், பலவாறு பேசுகிறாளே! அப்படியானால்?...

சபாபதிக்குச் செய்வதை ஒரு கடமையாக ஏற்றுக் கொண்டு செய்ததன் மூலம் ஹேமாவுக்கும் அவருக்கும் இடையே யுள்ள தூரத்தை இன்னும் அதிகமாக்கி விட்டேனோ? அல்லது இதை ஹேமா தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு தூரவிலகிப் போய் விட்டாளோ? ராதாவின் நெஞ்சுக்குள் இலேசான நெருடல்!



''ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொள்ளணும். எத்தனை நாள் ஆகும் கற்றுக்கொள்ள?''

''ஸ்கூட்டர் ஓட்ட ஒரே நாளில் கற்றுக்கொண்டு விடலாம். ஸ்டார்ட் பண்ணக் கற்றுக் கொள்ளத்தான் ஆறு நாள் ஆகும்.''

''என்ன பெட்டியில்?''

ஹேமா தன் அறையில் சிறு சூட்கேஸில் துணிமணிகளை வைத்து மூடிப் பூட்டுவதைத் தற்செயலாகக் கண்ட ராதா கேட்டாள்.

''புதிய நாட்டிய நிகழ்ச்சிக்கான என்னுடைய உடைகள்'' என்றாள் ஹேமா. ராதாவுக்குக் கடைக்குப் போகிற அவசரம். வேறொன்றும் கேட்காமல் அப்பால் போய்விட்டாள்.

ராதா கடையில் அமர்ந்திருக்கும்போது வாசலில் வந்த ஆட்டோ ஒன்றை அழைத்து அதில் அமர்ந்த ஹேமாவைக் கடையில் இருந்தபடியே பார்த்தாள். ஹேமாவின் கண்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

'இவள் ஏன் அழுகிறாள்? அழுதுகொண்டே எங்கே போகிறாள்? அவர் ஏதேனும் சொல்லியிருப்பார். எதிர்த்துப் பதில் சொல்லாதவளாக அதை வாங்கிக் கட்டிக் கொண்டு வெளியே வந்திருப்பாள்.'

ஆட்டோ கிளம்பிப் போய்விட்டது.

''ஹேமா அழுதுகொண்டே போகிறாளே!'' என்று வீட்டினுள் வந்தபடியே ராதா சபாபதியிடம் கேட்டாள்.

உள்ளே தன் அறையில் படுத்துக் கொண்டு ஜன்னல் வழியே வெளியே பார்த்தபடி இருந்தவன், ''ஒரு நாளும் இல்லாமல் இன்று 'நமஸ்காரம் செய்கிறேன்' என்று வந்து வணங்கினாள்'' என்றான்.

ராதாவுக்கு உள்ளம் படபடத்தது.

''உன் நமஸ்காரத்தை நான் ஏற்கத் தயாராக இல்லை. அதோ வாசலில் கடையில் இருக்கிறாளே உன் தங்கை, அவளுக்குப் பண்ணு! இந்த வீட்டின் மானத்தையும், இந்த வீட்டில் உள்ளவர்களின் மானத்தையும் நல்ல முறையில் பாதுகாக்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கிறாளே அவளுக்குப் பண்ணு. இந்தக் குடும்பத்தின் ஆணிவேர் போல இருக்கிறாளே அவளுக்குப் பண்ணு. ஏதோ இக் குடும்பத்தில் உனக்கும், எனக்கும் செய்யக் கடமைப்பட்டவள் போல ஓயாது உழைக்கிறாளே அவளுக்குப் பண்ணு என்றேன். நமஸ்காரம் செய்ய வந்தவள் எழுந்து நிமிர்ந்து என்னைப் பார்த்து விட்டு வெளியே போய் விட்டாள்.''

ஹேமாவின் செய்கைக்கான காரணம் அவளுக்குப் புரியவில்லை. சபாபதியிடம் வேறொன்றும் கேட்காமல் மீண்டும் கடைக்கு வந்து விட்டாள்.

மாலை வந்தது. இரவு வந்தது. இரவு நடுநிசியைக் கடந்தது.

ஹேமாவைக் காணவில்லை. காம்பவுண்டின் இரும்புக் கேட் திறந்து மூடும் ஒலி திடீரெனக் கேட்காதா என ராதாவின் செவிகள் எதிர்பார்த்து ஏமாந்தன.

''ஹேமா வரவில்லை?'' இரவின் மத்தியில் சபாபதி கேட்கிறான்.

''இல்லை'' என்ற பதில் அந்த இரவின் அமைதியில் பீதியுடன் ஒலிக்கிறது.

விடிந்து விட்டது. ஹேமா வரவில்லை!

''ஹேமா இங்கே வந்தாளா அம்மா?'' மல்லேஸ்வரத்தில் வீட்டின் வாசல் முன் ஆட்டோவை விட்டு இறங்கியும் இறங்காமலும் கேட்கிறாள் ராதா.

''நேற்று மத்தியானம் வந்தாள். என்னையும் அப்பாவையும் நிற்கச் சொல்லி நமஸ்காரம் செய்தாள். 'என்னடி இதெல்லாம்?' என்றேன். 'என்னமோ நமஸ்காரம் செய்ய வேண்டும் போலத் தோன்றியது. வந்தேன். செய்தேன். போய் வருகிறேன்' என்று கூறி விட்டுப் போய்விட்டாள். ஏன் என்ன விஷயம்?'' என்று பதற்றத்துடன் கேட்டாள் தாயார்.

வந்து இறங்கிய ஆட்டோ மெதுவாகத் திரும்பிக் கொண்டிருந்தது. அவசரமாகக் கூவி அதை நிறுத்தினாள். ''நேற்று மத்தியானம் போனவள்தான். இரவு வீட்டுக்கு வரவில்லை. நான் நிருத்யாலயா போய் விசாரித்துவிட்டுப் போகிறேன்....அப்பாவைக் கனிபுரம் வரச் சொல்.''

ராதாவை ஏற்றிக் கொண்ட ஆட்டோ புறப்பட்டது.

ஹேமா நிருத்யாலயாவிலும் இல்லை.

சோர்ந்து போன முகத்துடன் சபாபதி ஹாலில் சக்கர வண்டியில் சுற்றிக் கொண்டிருந்தான். அவள் பலவீனமானவன்தான் என்றாலும் தன்னுடன் மௌனப் போர் தொடுத்தவள். அந்த மௌனத்தை நிரந்தரமாக்கிவிட்டு அவனிடமிருந்து பிரிந்து நான்கு நாட்கள் ஆகிவிட்டன என்பதை நினைக்கின்ற ஒவ்வொரு விநாடியிலும் தன்னுடைய பலவீனம் அதிகமாவது போல இருந்தது அவனுக்கு. அவள் இப்படி வெளியேறித் தன் மூலம் யாருக்குத் தண்டனை கொடுக்க நினைத்திருப்பாள்? தனக்கா? அல்

# RENEWED GROWTH WITH DALMIA REFRACTORIES

உஷ்ணத்தின் அடிப்படையிலே இயங்கும் தொழிற்சாலைகளுக்கு ''ரிஃப்ராக்டரிஸ்'' (சுட்ட கற்கள்) இன்றியமையாததாக இருப்பதால் நாளுக்கு நாள் வளர்ந்து வரும் நமது தொழில்களுக்கு ''ரிஃப்ராக்டரி''களின் தேவையும் பெருகி வருகிறது.

ஆசியாவிலே ''ரிஃப்ராக்டரி'' உற்பத்தியாளர்களில் முதல் ஸ்தானம் வகிக்கும் டால்மியாவின் இரண்டு நவீன தொழிற்சாலைகளில், சுட்ட கற்கள், ரசாயன முறையில் இறுக்கப்பட்ட கற்கள், மித, அதிக, மிக அதிகமான உஷ்ணத்தைத் தாங்கவல்ல செங்கற்கள்; மணற் சத்துள்ள செங்கற்கள், கையனைட், சிலிமினைட் மற்றும் திராவகங்களைத் தாங்கக்கூடிய செங்கற்களையும் தயாரிக்கிறார்கள். வாடிக்கையாளரின் விசேஷ தேவைக்கேற்பவும் தயாரிக்கிறார்கள்.



**ஒரிஸா சிமெண்ட் லிமிடெட்**
**ராஜ்கங்பூர், ஒரிஸா**

பூரண விற்பனை ஏஜண்டுகள் :
M/s. S. C. சப்ளை ஏஜன்ஸி
48-D, முக்தாராம் பாபு தெரு, கல்கத்தா

உலைக் கற்கள் தயாரிப்பவர்கள் :
டால்மியா ஸெராமிக் இண்டஸ்ட்ரீஸ்
டால்மியாபுரம் (தமிழ்நாடு)
H. O. 4, ஸிந்தியா ஹவுஸ், புதுடில்லி-1

DALMIA ENTERPRISES



லது அவள் நடத்தையால் தன்னைத் தானே இந்த வகையில் தண்டனைக்கு உட்படுத்திக் கொண்டிருப்பாளா?

நான்கு நாட்கள் அவனது ஒவ்வொரு கண நேர நினைவுகளையும் சோர்வுறச் செய்த ஹேமாவிடமிருந்து ஐந்தாவது நாள் நீண்ட கடிதமொன்று வந்தது.

அந்தக் கடிதத்தின் உறையைப் பிரித்து அது அவளிடமிருந்துதான் வந்திருக்கிறது என்று அறிந்தபோது அவன் கரம் நடுங்கியது. ஒட்டுறவு இல்லாத — முரண்கள் மலிந்த 'தாம்பத்யம்' தான், இந்த இரண்டாண்டுகளில் நேருக்கு நேர் பார்த்துப் பேசிக் கொண்ட சந்தர்ப்பங்களைக்கூட விரல் விட்டு எண்ணி விடலாம். பரஸ்பரம் மனத்தளவில் குறுக்குச் சுவர் எழுப்பிக் கொண்டு தூர விலகி நின்றவர்கள்தான். அவர்களுடைய வெளி நடத்தையைப் பற்றி அதிகம் அக்கறை கொள்ளாதவன்தான். நாளுக்கு நாள் அவள் தன்னை விட்டு வெகு தூரம் போய்க் கொண்டிருக்கிறாள் என்பதை உணர்ந்து அந்த மாறுதலைக் கொஞ்சம் கொஞ்சமாக ஏற்று அதற்குத் தக்கபடி தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டவன்தான். ஹரிராமுக்கும் அவளுக்கும் கலை உலகத் தொடர்பு நெருக்கமாக இருப்பதை நன்றாக உணர்ந்தவன்தான் என்றாலும் கரம் நடுங்கியது. கண்கள் கலங்கின.

ஹேமா அநேக நமஸ்காரம்.

நான் மேற்கொண்ட முடிவின் நியாயத் தன்மை குறித்து வாதிக்க நான் தயாராக இல்லை. துடிப்புள்ள உணர்ச்சிகளைத் தன்னுள் பூட்டி வைத்துக்கொண்டுள்ள ஒருத்தி தன் தாம்பத்திய வாழ்வில் எதிர்பார்ப்பது குதூகலம் நிறைந்த சூழ்நிலையைத்தான். அது எதிர்பார்த்தபடி கிடைக்கவில்லை என்றால் ஏமாற்றப்பட்டவள் போலக் குமுறுகிறாள். வரையறுக்கப்பட்ட சமுதாய சட்டத்துக்குள் நின்று கொண்டு அதன் கோடுகளைத் தாண்டி வர முடியாமல் தனக்குத் தானே ஒரு நரகத்தைச் சிருஷ்டித்து அதில் போய் வாழ்க்கை வாழ்கிறாள். எப்பொழுது தாம்பத்திய வாழ்க்கை ஒரு சிறை என்ற எண்ணம் மேலோங்கிக் கிளம்புகிறதோ, அதே நேரத்தில் அவள் நெஞ்சில் விடுதலை எண்ணம் பிறந்து விடுகிறது. பிறருக்குப் பிறக்கிறதோ என்னவோ, எனக்குப் பிறந்தது. நான் உங்களை உதாசீனப்படுத்துவதாகத் தாங்கள் அடிக்கடி ராதாவிடம் குறைப்பட்டுக் கொண்டு வந்திருக்கிறீர்கள். நான் உங்களை உதாசீனப்படுத்தவேயில்லை. அப்படி நான் மனத்தால் கூட நினைக்கவில்லை. மனக் கிலேசங்கள் முற்றி அது ஒரு ரஸாபாசமான சூழ்நிலை ஏற்பட்டு விடக் கூடாதே என்பதற்காக நான் உங்களிடமிருந்து ஒதுங்கிப் போகும் பழக்கத்தை மேற்கொண்டேன். என்றாலும் உங்களோடு ஒத்துப் போக முடியவில்லை. ஒரு முறை ராதா வீட்டில் இல்லாதபோது என்னை அடித்தீர்கள். ஒதுங்கிப் போகும் அதே வழக்கத்தால்தான் அதையும் பொறுத்துக் கொண்டேன். உங்கள் மேல் நான் கோபப்பட அநேக காரணங்கள் இருக்கின்றன. ஆனால் என்மேல் நீங்கள் சினம் கொள்ளக் காரணமே கிடையாது. நான் உங்களுக்குத் துரோகம் செய்ய என்றுமே எண்ணியதில்லை. ஆனால் அதை நீங்கள் புரிந்து கொள்ளவில்லை என்பதை உணர்ந்தபோதுதான் உங்களைப் பழிவாங்கும் எண்ணமே என்னுள் சிறுகச்சிறுகக் கிளம்பியது. நீங்கள் நல்ல நிலைமையில் இருந்தபோது

அதாவது விபத்து நடக்கு முன், எனக்கு இழைத்த அவமானத்தையும், என் எதிரில் நீங்கள் ஆடிய அநாகரிகமான ஆட்டத்தையும், என் இளமை துடிக்கத் துடிக்க நீங்கள் அதைப் புரிந்து கொண்டும் வேண்டுமென்றே என்னைப் பொறாமைப்பட வைத்துப் பழி தீர்த்துக் கொண்டதையும் என்னால் மறக்கவே முடியவில்லை. பச்சாத்தாபமில்லாத 'அன்றைய சபாபதி'யை நினைக்கும்போது, விமான விபத்தில் கால்களைப் பறி கொடுத்து விட்டு, பிறர் உதவியை எதிர்பார்த்துச் சக்கர வண்டியில் அமர்ந்திருக்கும் 'இன்றைய சபாபதி'யின்மேல் எனக்குப் பச்சாத்தாபம் பிறக்க மாட்டேன் என்கிறது. 'அன்பு' என்பதே முன் வாங்கி, பின் கொடுப்பது. கொடுத்த பின் வாங்குவதுதானே? விபத்துக்குப் பிறகாவது நீங்கள் கொஞ்சம் மாறுவீர்கள் என்று எதிர்பார்த்தேன். என் மேல் அன்பு வைப்பீர்கள் என்று எதிர்பார்த்தேன். எனது எதிர்பார்ப்புக்களை, நீங்கள் தகர்த்து விட்டீர்கள். உங்களுடைய எத்தனையோ எதிர்ப்புக்களையும் அர்த்தமற்ற கோப தாபங்களையும் நான் பெரிதுபடுத்தாமல் ஒதுங்கியதை எனது உதாசீனமாக எடுத்துக் கொண்டு என் வாழ்க்கையை நரகமாக்க முனைந்தீர்கள். ஓர் ஆக்கிரமிப்பாளன் மேல் தொடுக்கிற போர் போல உங்கள் போக்கு இருந்தாலும் அதையும் நான் எனது 'பனிப்போர்' மூலமாகத் தவிர்த்துக் கொள்ளவே முயன்றேன். அந்த முயற்சியின் முடிவே இது. இனி என்னை யாரும் தேடவோ, நினைக்கவோ வேண்டாம். எதிர்பார்க்கவும் வேண்டாம். ஹரிராம் என் விடுதலைக்கு வகை செய்து கொடுத்து விட்டார்.

— ஹேமா."

கடிதத்தை அங்கே நின்ற ராதாவிடம் கொடுத்து விட்டுச் சக்கர வண்டியை மீண்டும் உருட்டினான். ராதா அதைப் படித்து முடிப்பதற்குள் அப்பெரிய ஹாலைத் தன் சக்கர வண்டியில் இரண்டு முறை சுற்றியிருப்பான்.

"ஹேமா!... ஹேமா!" என்று உணர்ச்சிவசப்பட்டுக் கூறிய ராதா பற்களை மட்டும் கடித்துக் கொண்டு கடிதத்தைக் கசக்கியபடி தலையில் கையை வைத்துக் கொண்டான்.

ஹேமா தான் செய்ததற்கு எவ்வளவுதான் தர்க்கரீதியிலான வாதங்களை எடுத்து எழுதியிருந்தும் அவள் செய்ததை ராதாவினால் அங்கீகரிக்கவே முடியவில்லை.

சக்கர வண்டியில் மௌனமாக ஊர்ந்து செல்லும் சபாபதியைப் பார்த்தான் ராதா. அவன் கண்கள் அவனைப் பார்த்துப் பனித்தன.

"எப்பொழுது அவள் என்னிடமிருந்து பிரிவதை விடுதலை என்று எழுதிவிட்டாளோ, அதை நான் ஏற்கத்தான் வேண்டும் ராதா! என் முன் நடவடிக்கைகளைச் சுட்டிக் காட்டி அவளுடைய விடுதலைக்கான நியாயத்தை நிலை நிறுத்த முயன்றிருக்கிறாள். எனக்கு எதிரியாகத் தன்னைப் பாவித்துக் கொண்ட அவளுக்கு அது ஒரு நல்ல பிடிதான். அவளுடைய நியாயத்தின் பலம் அத்தனையையும் அதிலேயே நிலைநாட்டி வெற்றி பெற முயன்று, வெற்றியும் பெற்ற மகிழ்ச்சி அவளுக்கு.... அவளுக்கு நான் மனப்பூர்வமாக விடுதலை தந்துவிட்டேன். எங்கே, எப்படி யாருடன் இருந்தாலும் குதூகலமாக இருக்க நான் மனப்பூர்வமாகப் பிரார்த்திக்கிறேன். ஏன் தெரியுமா? இதற்குப் பின்பும் நான் அவள் மேல் கோபம் கொள்வது மனிதத் தன்மையே அல்ல....இதோ இக்கணத்தில் அவள் மேல் நான் கொண்டுள்ள அத்தனை கோப தாபங்களையும் உதறி விட்டேன். அவள் மேற்கொண்ட முடிவை நான் மனப்பூர்வமாக அங்கீகரித்துக் கொண்டு விட்டேன்."

"நீங்கள்..."

"ஆமாம் ராதா...! உண்மையாகத்தான் பேசுகிறேன். நிதான புத்தியுடன்தான் பேசுகிறேன். அவள் இதன் மூலம் தனக்கு விடுதலையையும் எனக்கு ஓர் எதிர்பாராத தண்டனையையும் ஏககாலத்தில் தந்தபின் வழக்கில் இனி தனியே நீதி சொல்ல என்ன இருக்கிறது?"

"இதை நீங்கள் முடிந்த வழக்கு என்கிறீர்கள். எனக்கோ இது பாதியில் நின்ற வழக்குப் போலவும் சரியாக விசாரிக்கப்படாத வழக்குப் போலவுமே தோன்றுகிறது. ஒரு சரியான கட்டத்தை நெருங்க முடியாமல் திடுதிப்பென்று பாதியில் நின்ற வழக்கு போல் தோன்றுகிறது" என்றான்.

"இந்த வழக்கு இப்படித்தான் முடிய வேண்டும் ராதா! சரியான இடத்தில்தான் முடிந்திருக்கிறது" என்று கூறிவிட்டு உள்ளே போய்விட்டான் சபாபதி.

ஹேமா இல்லாத நாட்கள் பத்து சென்றுவிட்டன. அவள் வீட்டில் இல்லாமல் போய் விட்டதற்காக ராதாவைத் தவிர வேறு யாரும் கவலைப்படுவதாகத் தோன்றவில்லை. ஓயாமல் அழுது கொண்டிருந்த மனைவியைக் கூடப் புருஷோத்தமன் சமாதானப்படுத்தி விட்டார். அவர் சென்னையில் ஹேமா இருக்கும் இடத்தை அறிந்துவர நேரில் போய்ப் பார்த்தபோது அவள் ஹரிராமின் உதவியோடு நான்கைந்து படங்களில் நடனமாட ஆகியிருக்கும் ஒப்பந்தங்களை எடுத்துக் காட்டினாள். தன் செய்கைக்காகக் கொஞ்சமும் வேதனைப்படாமல் அப்படி ஒரு சம்பவம் நடந்தது போலவே காட்டிக்கொள்ளாமல் நாசூக்காக இருந்ததையும் நேரில் பார்த்து விட்டு வந்து பின் புருஷோத்தமன் தம் அஞ்ஞானத்தை உதறிவிட்டார். சபாபதியோ முன்பு எப்போதையும் விட அதிக உற்சாகத்துடன் காணப்படுகிறான் என்றாலும் அவன் கண்களில் தெரிகிறதே, ஒரு பயம்! அதன் பொருள்? அடிக்கடி ராதாவை நிமிர்ந்து பார்த்து விழிகளிலும் விடுகின்ற பெருமூச்சுக்களிலும் ஒரு மானசிகக் கேள்வியை வைத்துக் கொண்டு அலைபாய்கிறானே, அதன் அர்த்தம்? இரவில் அவன் அறைக்குள் நுழையும்போது அவன் கண்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருக்கிறதே, அது ஏன்?

இதற்கான காரணங்கள் ராதாவுக்குத் தெரியும்.

ராதாவின் முடிவைக் கேட்டு ஜானகியும் புருஷோத்தமனும் திடுக்கிட்டனர்.

"வேறு வழியே இல்லையம்மா!"

"அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வராதே, ராதா!" என்றார் புருஷோத்தமன்.

"இது அவசரமாக எடுக்கப்பட வேண்டிய முடிவுதான் அப்பா. ஆனால் அவசரப்பட்ட முடிவு அல்ல."

"எனக்கென்னவோ இது அவ்வளவு சரியானதாகப்படவில்லை ராதா" என்றார் புருஷோத்தமன்.

"சரி, சரியில்லை என்பதுபற்றி இனிப் பேசிப் பயன் இல்லை. ஏதோ ஒரு முடிவை இனி நான்தான் எடுத்தாக வேண்டும். இதற்காக இன்னொருவரின் உதவியை நாட முடியாது. நான் இதை என் மனப்பூர்வமாகக் கூறுகிறேன். என்னை யாரும் நிர்ப்பந்திக்கவில்லை. அவர் இதுபற்றி ஒரு வார்த்தைகூட என்னிடம் பேசவில்லை. இப்பொழுது கூறுவது என்னுள் நான் எடுத்துக் கொண்ட முடிவு. எல்லாம் நானே சுயமாகச் சிந்தித்துக் கொண்டது."

"அப்படித்தான் செய்ய வேண்டுமானால் அவருக்கு இருக்கிற வசதிக்கு ஓர் ஏழைப் பெண்ணைப் பார்த்து...."

"நானும் ஏழைப் பெண்தான் அப்பா. எனக்கு என்ன வசதி இருக்கிறது? நான் என்ன சேர்த்து வைத்திருக்கிறேன்? இப்பொழுது அவரை வேறு ஒருத்தியிடம் இதே காரணத்துக்காக ஒப்படைக்க என் மனம் இடம் தரவில்லை. அவருக்கு நம்பிக்கையான பாதுகாவல் தேவை. அதைத்தான் அவரும் எதிர்பார்க்கிறார்."

"அவருக்குப் பாதுகாப்புத் தேவை. அதை நானும் உணர்கிறேன் ராதா! அதற்காக நாம் என்ன செய்யவேண்டுமோ அதை உரிய முறையில் செய்துவிட்டால் போகிறது. அதற்காக உன் வாழ்வின் தலைவிதியை இப்படி மாற்றிக் கொள்ள என் மனம் இடம் தரவில்லை. வேறு ஏதேனும் யோசனை இருந்தால் சொல்" என்றார் புருஷோத்தமன்.

"இல்லை அப்பா. இதனால் நான் எந்த வகையிலும் சிறுமை அடைந்து விடமாட்டேன். அவர் ஊனமாக இருந்தால் என்ன? அன்பான பராமரிப்பாலும் உள்ளம் திறந்த பேச்சாலும் ஒருவருக்கொருவர் கொடுத்துக் கொள்கிற மரியாதையாலும் அவரை நானும் என்னை அவரும் நன்றாகவே புரிந்து கொண்டிருக்கிறோம். ஒருவருக்கொருவர் தீமை விளைவித்துக் கொள்ளும் எண்ணம் வளரவே வழியில்லை. இதுநாள்வரை சிநேகபூர்வமாக நான் அவருக்குச் செய்த பணிவிடைகள்மூலமாக அன்புப் பரிவர்த்தனையின் எடைகூட ஏற்ற இறக்கமின்றி இருக்கிறது. இதில் ஒருவருக்கொருவர் ஏமாறும் நிலையும் ஏமாற்றும் நினைவும் அறவே இல்லை. அவரை நான் கல்யாணம் செய்து கொள்வதால் நான் ஏதோ பெரிய தியாகத்தைச் செய்யப் போவதாகவோ, நான் ஏமாற்றப்பட்டு விட்டதாகவோ ஒருபோதும் நினைக்கத் தேவையே இல்லை. அவர்மேல் நான் கொண்ட மரியாதை நான் அவருக்குச் செய்த சேவையால் மட்டுமல்ல. அவர் என்னிடம் காட்டிய அலாதியான பரிவினாலும் வந்ததுதான்."

புருஷோத்தமனும் ஜானகியும் மௌனமாக நின்றார்கள்.

பெற்றோரைப் பார்த்துக் கெஞ்சி அழுத ராதா, "சந்தோஷமாக நீங்கள் இருவரும்

## சுதந்திர வோட்டுரிமை!

தென் அமெரிக்காவில் ஒரு தேர்தல் நடைபெற்றது. ஆளும் கட்சியினர் தங்களுக்கிருக்கும் எல்லா 'பல'ங்களையும் உபயோகித்து எதிர்க்கட்சியினை தலையெடுக்க விடாமல் தடுத்து வந்தனர். அப்போது வோட்டுகள் எண்ணப்பட்ட இடங்களில் ஒன்றில் நடைபெற்ற வேடிக்கையான நிகழ்ச்சி இது:

தேர்தல் தலைமை அதிகாரி ஒருவரின் முன்னிலையில் வோட்டுகள் எண்ணப்பட்டன.



விழுந்த வோட்டுகள் எல்லாம் ஆளும் கட்சிக்கே சாதகமாய் இருந்தன. வெகு நேரம் கழித்து ஒரு வோட்டு எதிர்க் கட்சிக்கு விழுந்திருந்தது.

"பார்த்தீர்களா? எதிர்க் கட்சியினர் சுதந்திரமாகத் தங்களது வோட்டுகளைப் போடலாம் என்பதற்கு இதுவே அத்தாட்சி" என்றார் தேர்தல் தலைமை அதிகாரி.

அப்புறம் வெகு நேரம் கழித்து இன்னொரு வோட் எதிர்க் கட்சிக்குச் சாதகமாக இருந்தது.

அதிகாரி எரிச்சலுடன், "திருட்டுப்பயல்! ஒரே ஆள் இரண்டு தடவை வோட் செய்திருக்கிறான். இது செல்லாது; இதை ரத்து செய்துவிடுகிறேன்" என்றார்.

'போதிமியா' ஏட்டிலிருந்து எடுத்து அனுப்பியவர்.

— "லலிதா மணாளன்."

## ரைட் சகோதரர்கள் என்பது ரங்"

முதன் முதலில் ஆகாய விமானத்தைக் கண்டுபிடித்துப் பறந்து காட்டியவர்கள் ஆர்வில் ரைட், வில்பர் ரைட் என்ற அமெரிக்கச் சகோதரர்கள்தான் என்பது எல்லோருக்கும் தெரியும்.

இந்த அரிய சாதனையை முதன் முதலில் செய்தவருக்காக "ஸயன்டிபிக் அமெரிக்கன்" என்ற பத்திரிகை ஒதுக்கியிருந்த பத்தாயிரம் டாலர் பரிசும் ரைட் சகோதரர்களுக்குக் கிடைத்தது. ஆனால் இந்தப் பரிசளிப்புக்கு உரியவர்கள் ரைட் சகோதரர்கள் அல்ல என்கிறார் ஓர் என்ஜினியர்.

நியூஜிலாந்தின் சாதாரண விவசாயியான ரிச்சர்டு வில்லியம் பியர்ஸ் என்பவர் ரைட் சகோதரர்களுக்கும் முன்னால் வானத்தில் பறந்தவர் என்கிறார் என்ஜினியர் ஜார்ஜ் போல்டு.

பெரும்பாலும் மூங்கில்களையே உபயோகித்து இடையில் அலுமினியக் கம்பிகளை இணைத்து, நான்கு இரும்புச் சக்கரங்களைக் கொண்ட இலக்கும் கருவியைப் பொருத்தி இவ்விவசாயி தம் விமானத்தை மிகச் சிறப்பாகவும் மலிவாகவும் தயாரித்திருந்தாராம்.



ரைட் சகோதரர்கள் பறப்பதற்குச் சில மாதங்களுக்கு முன்பே வில்லியம் பியர்ஸ் தம் விமானத்தைப் பறக்க விட்டதை நேரில் கண்ட சாட்சிகளும் இருக்கிறார்களாம். தமது எண்பதாம் வயதில் (சில ஆண்டுகளுக்கு முன்பு) விவசாயி வில்லியம் பியர்ஸ் இறந்து போனாராம். தமக்குக் கிடைக்க வேண்டிய புகழும் பெருமையும், பரிசும் ரைட் சகோதரர்களுக்குக் கிடைத்ததைக் கேட்டவுடன் அவர் கண்ணீர் விட்டு அழுதாராம். அந்த அநீதியை அவர் தம் வாழ்நாள் முழுதும் மறக்கவில்லையாம்.

ஆதாரம்: பேஜண்ட். - தகவல்: விஜயம்

சம்மதம் தாருங்கள். அவரை நாம் பராமரிக்கவில்லையென்றால் அவர் அனாதையாகப் போய்விடுவார். அவர் உடம்பு தேற நான் எவ்வளவு பாடு பட்டிருப்பேன்? எனது பராமரிப்பில் அவர் உடம்பை விட உள்ளம் எவ்வளவு நன்றாகப் பாதுகாக்கப்பட்டிருக்கிறது தெரியுமா? அது மட்டுமில்லை. ஹேமா அவருக்குச் செய்துவிட்ட மிகப் பெரிய மான நஷ்டத்துக்கு ஈடு செய்ய வேண்டிய அவசரக் கடமையொன்றும் இருக்கிறது...'' என்றாள்.

பெற்றோர் மௌனமாகவே இருந்தார்கள். ராதா இவ்விஷயத்தில் ஏற்படுத்திக் கொண்ட முடிவுக்கு அவள் எவ்வளவு விரைவாக வந்து நிற்கிறாளோ, அந்த வேகத்தில் அவர்களால் வர முடியவில்லை. ஹேமா செய்த தீமைக்கு இவள் தன்னையே கொடுப்பதன் மூலம் ஈடு செய்ய முடியும் என்று வாதிடுகிறாளே, நடக்கிற காரியமா?

பெற்றோரிடம் காணப்பட்ட அந்தச் சில நிமிஷ மௌனத்தைக்கூட அவளால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. ''அப்பா! உங்கள் முடிவு எதுவாக இருந்தாலும் என் முடிவு இவ்விஷயத்தில் ஸ்திரப்பட்டுவிட்டது. இதை இனி மாற்ற முடியாது' என்றாள்.

''நீயே மனப்பூர்வமாக இதை விரும்புகிறபோது இதில் நாங்கள் சொல்ல இனி ஏதுமில்லை. உன் விருப்பத்துக்கு எங்கள் மனப்பூர்வமான ஆசிகள்.''

ராதாவின் முகம் மலர்ந்தது.

அன்பு தியாகமாக உருவாகும்போது மனம் மற்ற பலவீனங்களை மறந்து தன்னை அதற்கேற்பப் பொருத்திக் கொள்ளும் ரஸவாதத்தை என்னவென்பது?

''ராதா! இனி நீதான் என் ஹேமா!'' — குரல் தழுதழுக்கக் கூறினான் சபாபதி. என்னதான் முயன்றும் அவனால் ஹேமாவை மறக்க முடியவில்லை என்பதை அந்தக் குரலே எடுத்துக் காட்டியது. அப்பொழுது ''சார், தந்தி!'' என்ற குரல் வரவே, ராதா பரபரவென்று வெளியே வந்து, தந்தியை வாங்கிப் பார்த்தாள். அப்படியே அவள் சிலையாகிவிடக் கண்கள் மட்டும் நீரைப் பொலபொலவென்று உதிர்த்தன.

சபாபதி அவள் கையிலிருந்த தந்தியை வாங்கிப் பார்த்தான். ''ஹேமா இசுர் என்று நேற்றிரவு மாரடைப்பு நோயினால் மரித்தாள் ஹரிராம்'' என்றிருந்தது.

# படித்துப் பாருங்கள்

## எடுத்த பொற்பாதம்

கடலில் அலைகள் எழும்பி விழுகின்றன; காற்றிலே மரங்கள் அசைந்து ஆடுகின்றன; தென்றலில் இளங்கொடிகள் நெளிகின்றன. இவற்றையெல்லாம் பார்த்து ஆதி மனிதன் ஆடக் கற்றுக் கொண்டான். புயலின் வேகத்தையும் கொட்டும் அருவியையும் பார்த்தான்; இடியோசையைக் கேட்டான் — நிருத்தியம் பயின்றான்.

மனிதன் பாடவோ, பேசவோ முற்படுவதற்கு முன்பே இயற்கை அவனுக்கு நடனத்தைப் போதித்தது. அதில் ஒரு தாள நியதியும் இருப்பதை உணர்த்தியது.

நாளாக ஆக மனிதன் இதில் ஒரு பெரும் தத்துவம் இருப்பதைப் புரிந்து கொண்டான். யுத்தமோ அமைதியோ, அழிவோ சிருஷ்டியோ, ஆனந்தமோ ரௌத்திரமோ யாதாயினும் ஒரு நியதிக்குள் அடங்கி நடப்பதை அறிந்து கொண்டான்.

உலகம் என்ன, அண்ட சராசரமெல்லாமே லயம் பிசகாத ஓர் ஆனந்தத் தாண்டவம் தான். கோடானு கோடி ஆண்டுகளாக நியதி மாறாமல் நடந்துவரும் இந்த ஆனந்தத் தாண்டவத்தினை நடராஜ மூர்த்தியாக உருவகப்படுத்தினான் மாமேதையான ஒரு சிற்பி.

நடராஜரின் திருக் கோலத்துக்கு விளக்கமாக எத்தனையோ பேரறிஞர்கள் பக்கம் பக்கமாக எழுதியிருக்கிறார்கள். அவர்கள் எழுதியவற்றையெல்லாம் படித்து முக்கியக் கருத்துக்களைத் தேர்ந்தெடுத்து அருமையான நூல் படைத்தார் அண்மையில் சிவனடி சேர்ந்த திரு ஜே. எம். சோமசுந்தரம். இறையுணர்ச்சி மிக்க ஒரு பரம்பரையில் தோன்றியவர் இவர். வக்கீலுக்குப் படித்த பின் வழக்கறிஞர் தொழிலை மேற்கொள்ளாது, இயல்பான ஈடுபாடு காரணமாகப் பல தேவஸ்தானங்களில் நிர்வாக அதிகாரியாகப் பணியாற்றினார். இருபத்திரண்டு ஆண்டுகள் இறைபணி புரிந்த பின்னர் அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் நூல் வெளியீட்டுத் துறை அதிகாரியாகப் பொறுப்பேற்றார். தமிழ் இலக்கியம், சிற்பக் கலை, புனித ஸ்தலங்கள், கோயில்கள் ஆகியவை பற்றிய ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை இயற்றிய அவரது இந்தச் சமீபத்திய புத்தகம் அவரது புலமைக்கும் எழுத்தாற்றலுக்கும் பல்லாண்டுகள் சான்று பகன்று அவர் பெயர் நிலைக்க உதவும். Siva - Nataraja - The Cosmic Dancer என்ற இந்த ஆங்கில நூலில் ஆனந்த குமாரசாமி, டாக்டர் ராதாகிருஷ்ணன் போன்ற பேரறிஞர்களின் கருத்துரைகள் மட்டுமின்றி, பிரெஞ்சு, ஆங்கில, ஜெர்மானிய அறிஞர்களின் ஆராய்ச்சி உரைகளும் இடம் பெற்றுள்ளன.

சிவபெருமான் தாண்டவமாடும் சிதம்பரம் பற்றிய விரிவான கட்டுரையும் இரண்டாவது பகுதியாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஸ்தல புராணங்கள், ஸ்தலத்தில் பக்திப் பரவசமாகிப் பாடப்பெற்ற திருத்தமிழ்ப் பாடல்கள், வரலாற்றுக் குறிப்புக்கள், பல கோயில்களையும், சிற்பங்களையும் பற்றிய வர்ணனைகள் ஆகிய அனைத்தையும் உள்ளடக்கியிருக்கும் இந்நூல் அச்சுப் பிழைகளையும் குறைவின்றித் தன்னகத்தே கொண்டிருக்கிறது.

கிடைக்குமிடம்: எஸ். வி. பாண்டுரங்கன், 28, லெக்சரர்ஸ் குவார்ட்டர்ஸ், அண்ணாமலை நகர், சிதம்பரம்; விலை ரூ. 3.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon